உ

கடவுள் துணை

# தனிப்பாடற்றிரட்டு

இஃது

இராமநாதபுரம் சமஸ்தானம்

ம-ா-ா-ஸ்ரீ, பொன்னுசாமித்தேவரவர்கள்

அநுமதியினுல்

தில்லையம்பூர்

சந்திரசேகர கவிராஜ பண்டிதர்

காஞ்சீபுரம்

வித்வான் - கச்சபாலய ஐயர்

இவர்களாற் பரிசோதித்து

முன்பதிப்பித்த பிரதிக்கிணங்க

திருமயிலை. சண்முகம்பிள்ளை யவர்களால்

பார்வையிடப்பட்டு

இன்னுஞ் சில பாடல்களும் நூதனமாகச் சேர்த்து

பதிப்பிக்கப்பட்டதை,



அ. இரங்கசாமிமுதலியார் ஸன்ஸ்

பூமகள்விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது

சென்னை:

1940

இதன் விலை] [ரூபா 1 8 0

P.17

உ

ஸ்ரீமகாபாரத கீர்த்தனஞ்செய்த

ம-ா-ா-ஸ்ரீ முத்துராமமுதலியாரவர்கள் தமையனுர் குமாரர்

## கோ. சபாபதி முதலியாரவர்கள்

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்

கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

தண்ணளிமிழற்றுபைங்கற்பக நன்னீழலிற்றனியரசு புரியிந்த்ர னும் தலைமைசேரும் ராமநாதபுரநற் சமஸ்தானமா நேசரென்னும், அண்ணன்மதவேள் பொன்னுசாமி தேவப்ரபலர் அமராமகிலத்தி னேர், அகமகிழ்ந்துட்கொளத்திருமாலெனுந் தில்லையம்பூரரும்புவி துதி, பண்ணவருமுயர்சந்த்ரசேகரக் கவிராஜபண்டித ரெழிற்கச்சி யம், பதிமருவுவித்துவான் கச்சபாலயரெனப் பகருமிவ்விருவரைக் கொண், டெண்ணரும்புலவர்புகல் கவிகளாங்கடலையவரிணையின்மதி மந்தரத்தால், இனிதிற்கடைந்தமுதமாந் தனிப்பாடலை யெடுத்திங் களித்தனனரோ. 1

தலைமைபெறுமதிசைவர் சிவஞானதேவர் சுதர்தகுராமநாதபுர நற்சமஸ்தானமதனுக்குமுயர் பரமசிவனடிதனக்குமா னேசர்வழுதி, தானென்னமுத்தமிழ்ப்பைங்கூழ் தழைத்திடச்சந்ததம் பொன்மாரி பெய், தகைமையதனுற் பொன்னுசாமி தேவப்பெயர்கொள் தனுமா ரர்புகலவளவில்:—கலைகளுணர்தில்லையம் பூர்ச்சந்த்ரசேகரக் கவிராஜ பண்டிதரும்வண், காஞ்சிமாநகர் மேவுமுசிதகனவித்துவான் கச்ச பாலயருமவர்தம், கருத்தின்படிக்குச் செய்தீருவோமெனவக்கணங் கங்கணங்கட்டியே, கனைகடலிடைப்பலவிடங்களிற் சிதறிவெகுகால முன் வீழ்ந்திருந்த—அலகினற் பொருடனைக் கண்டெடுத்ததினடி சொலர்த்தமிவைதாறுமாறு, அவனியில்வழங்குமெண்ணறு தனிப் பாடல்களவைக்குணயமுற்றவைகளை, அன்றுசொன்னவர்கருத்திற் கனுவும்வழுவாதனந்தமுறை யதிநுட்பமாய், ஆராய்ந்தொருங்கு சேர்த் தகிலமெல்லாம்புகழ வச்சிற்பதித்ததைக்கண்—டுலகிலிவ்விரு வர்தங் கல்வித்திறத்தையோர்ந் துணராதுவித்தைக்கியான், ஒருவனே யென்றெண்ண விழிவென்ன வறுமுகவ னுளிரகங்குன்றினின்றுன், உயர்முனிவனெஞ்சா னுடம்புமொருசாணினு மொடுங்கினனிவர் புலமைதேர்ந்—துரகவேந் தொருகாலருந்திவிழி யிமையாமலோடியத முற்றனனரோ. 2

சிறப்புப்பாயிரம்-முற்றிற்று.

---

உ

சிவமயம்

# சாத்துகவிகள்

சென்னைத் துரைத்தனக் கல்விச்சாலையில் தமிழ்த்தலைமைப்புலமை
நடாத்தும் இயற்றமிழாசிரியராகிய
திருத்தணிகை

## விசாகப்பெருமாளையரவர்களா லியற்றப்பட்டது

நிலைமண்டில ஆசிரியப்பா

சீர்மலியேர்பெறு திகழ்கடலுடுத்த
பார்தனிலார்தரு பற்பலமொழிகளுள்
பன்னருந்தமிழாம் பாற்கடலதனைச்
சொன்னயப்பொருளையச் சுவைமிகவுணர்ந்த
துங்கமிகுத்திடு சங்கப்புலவர்கள்
வள்ளுவரௌவை வான்காளமேகம்
தெள்ளுபொய்யாமொழி திகழ்கம்பராதியாம்
நாவலரென்னு நன்முகில்பருகி
ஓவறவாங்கரங் கொழுக்கியகவியாம்
தண்ணுறுமமுதை மண்ணவர்செவியால்
உண்டுகளிப்பதே யுறுதியென்றோர்ந்து
தென்னாடதனிற் பொன்னுடொக்கும்
நிலமகள்வதனத் திலகியதிலகமாம்
பார்புகழிராம நாதநற்பதியினில்
இனிதுவீற்றிருந்து மநுநூல்விதிவழிச்
செங்கோனடாத்து சங்கேந்துதிருமால்
தரியலர்மடங்கல் சற்குணமேரு
அரிவையர்க்குருவ மாகியவங்கசன்
மன்னுறுகலிதனை மாற்றுமருந்து
சென்னியின்மதிபுனை சிற்பரனடிதொழூஉம்
சிவஞானதேவன் செய்தவப்பயனே
புவிமிசையுருக்கொடுப் போங்தெனத்தோன்றிய
பொன்னுசாமி யெனும்பூபாலன்
தன்மனமுவந்து தயங்குறவெழுதா
வெழுத்திற்பொறித்தே யீந்திடுகென்ன
அரியதவத்தரும் பெரியோர்களும்வாழ்
பொன்னிசூழ்சென்னி புனனாடதனில்
மன்னுதில்லையம்பூ ரென்னும்பதிவாழ்
வாகுறுசந்திர சேகரனென்னும்
புவிராஜர்புகழ்கவி ராஜபண்டிதனல்
பழுத்திடும்வருக்கையின் செழித்தகனியினை

வான்கவிகவ்வுபூஉ மந்திக்கிந்து
தானாடறீர்க்குந் தண்டலையுடுத்த
மணலியம்பதிவாழ் மாண்புறுநல்லோன்
குணநிதிநறுமலர்க் குவளைத்தாரான்
பெரியதம்பியா முரியபெயரினன்
வழூஉக்களைவித்து வாகுறுமச்சிற்
செழூஉவுறப்பதித்துக் கிளர்வித்தனனரோ.

இஃது, காஞ்சீபுரம்-பச்சையப்ப முதலியாரவர்கள் கல்விச்சாலையில் தமிழ்த்தலைமைப்புலமை நடாத்திய வித்வான்-காஞ்சீபுரம் சபாபதிமுதலியாரவர்களால் இயற்றப்பட்டது

நேரிசை ஆசிரியப்பா

திங்கள்சேர்செஞ்சடைத் தேவனிமய
மங்கைமணாளன் மதுரைப்பெருமான்
இறையெனமேவி யியற்றமிழாய்ந்த
பொறைமிகுசங்கப் புலவரேயாதி
யாண்டுளபுலவரு மினிதின்முன்னரே
பூண்டுளவளமெலாம் பொற்புடனினிவரும்
நற்றமிழ்வல்லோர் நாமுமதன்வளம்
தெற்றெனவுரைக்குதுஞ் சிறுதெனத்தத்தம்
நாப்புடைபெயரா வண்ணநலந்திகழ்
கோப்புடைக்கவியாற் கூறியதாகி
அன்னவர்பின்வரு மறிஞர்களதையோர்ந்
தென்னெனப்புகழ்து மித்தமிழ்நாட்டினை
ஒல்லும்வகையா லுரைத்துமென்னிலோ
சொல்லியசொல்லுஞ் சுகமாகுதுமென
எண்ணியெண்ணி யேக்கங்கொண்டப்
புண்ணியசங்கப் புலவர்புகன்ற
செய்யுட்களெவையுஞ் செவ்விதினோதி
உய்வதேபயனென உவப்புறாஉம்பாண்டிநன்
னாட்டுளவிராம நாதர்தங்கமலத்
தாட்டலைகொண்டு தகவுடனேத்தி
அவமெலாமகற்ற வருளமுதுண்ணுஞ்
சிவஞானதேவர் செய்தவக்கடலிடைத்
தோற்றியசெம்மணி தூயகுணமணி
நாற்கவிப்புலவர் நாடும்புகழ்மணி
அந்தணர்சிவபிரா னடியவரெவர்க்கும்
வந்துளவளமெலாம் வழங்கவுண்மதித்தாங்
கியாதொருபொருளுமில்லை யென்னுதருள்
சேதுபதியெனனுஞ் செல்வன்செங்கோல்

கோடாவகைநிறீஇக் குடிகள்பலரும்
வாடாவகையான் மகிழ்ந்துபுரந்தே
அறத்தாறிற்றென் றறிந்தான்றமைந்தசொற்
றிறத்தாறறிந் தேர்ச்சிநன்னூலொடு
மதிநுட்பமுமுள மாண்பமைவள்ளல்
அதிநுட்பமியாவையு மகற்றுமாண்டகை
தன்பெயரதனுற் றனபதியிவனென
மண்புவியோர்கண் மதித்திடவாய்ந்த
பொன்னுசாமிப் புரவலர்சிகாமணி
துன்னுற்சாகமொடு தொகுத்தியற்றுக
என்றுரைசெய்ய வியற்றமிழ்க்கடலைக்
குன்றுடைமுனியெனக் குடியாது குடித்துக்
களிப்புறுகின்ற கவிராஜபண்டிதன்
தளிப்புறுசெஞ்சடைச் சங்கரன்பதமலர்
அல்லும்பகலு மன்புடனேத்தும்
தில்லையம்பூர்ச் செங்காப்புலவன்
சந்திரசேகர தகுபெயரறிஞன்
புந்தியினுய்ந்த பொற்புளதாந்தனிப்
பாடற்றிரட்டெ னும் பாற்றிரட்டதனை
நீடக்கருங்கொலா னிகழ்வித்திடாது
பாருள்வாழ்வோர் பண்டுகண்டிலாச்
சீருள்வரியாற் றிகழப்பதித்தனன்
கணிதமிலாவளங் காட்டுபுவிளங்கும்
மணவிநன்னகர்வாழ் மகிபதிகனவிலும்
சிவனடிமறவாச் சிந்தையன்சான்றோர்
தவலிலாக்கேள்வித் தகைசாலறிஞன்
பெரியதம்பிப் பெயரினன்
உரியவுலக முவப்புறற்பொருட்டே

இஃது சென்னைத் துரைத்தனக் கல்விச்சங்கத்தில்
தமிழ்ப்புலவராகிய அஷ்டாவதானம்
வீராசாமி செட்டியாரவர்களா லியற்றப்பட்டது

நேரிசை ஆசிரியப்பா

திருமலிகூடற்பெருநகர்வைகிய
புலம்புரிபுலவராம்வலம்புரிச்சங்கமும்
காளமேகமாநீள்கரிமருப்பும்
வள்ளுவரென்னுந்தெள்ளுநற்கதலியும்
சீருயரௌவையாரென்னுஞ்சாலியும்
ஒட்டக்கூத்தராம்வட்டவாரிசமும்
புகழேந்தியென்னுந்திகழேந்துதிகிரியும்

உம்பர்வியந்திடுங்கம்பராங்கன்னனும்
அழிவறுபொய்யாமொழியெனும்பூகமும்
தேசுறுசிவப்பிரகாசராமதியமும்
மாசிவஞானதேசிகப்புயனும்
ஏனைப்புலவராமபானிறவிப்பியும்
அற்புதமாகப்பற்பலவமையத்
தாங்காங்குதவியபாங்காகியதனிப்
பாடலென்னும்பீடுறுபல்வகைச்
சந்தங்கெழீஇநந்துதன்மணியின்
வர்க்கமதனைப்பொற்கம்மியன்போல்
வடுத்தவிர்ந்திடவாய்ந்தெடுத்துவிழுத்தகச்
சேர்த்தொருவடமாக்கோத்துநிரல்பட
இப்புவியோர்களிறும்பூதெய்தச்
செப்பமாகத்திரட்டியச்சிடுகென்
றரசரேறுவிரைசெய்பூந்தாரான்
இரவலர்க்கற்பகம்வரகுணமேரு
மருவலர்க்கசனிகருணைவாரிதி
பல்வளமோங்குஞ்செல்வப்புவிமகள்
இலகுமுகத்திற்றிலகமெனக்கிளர்
மேதகுராமநாதபுரம்வாழ்
சிவஞானதேவன்றவமோருருவாய்
வந்தவதரித்தமைந்தனிலத்திடை
அருங்கலையனைத்துமொருங்கினிதுணர்ந்தோன்
தென்னவன்போற்றமிழ்தன்னைவளர்ப்பவன்
பொன்னுசாமியென்னும்புரந்தரன்
நன்னயமாகச்சொன்னசொன்மேற்கொளீஇ
ஆழ்திரைப்பொன்னிசூழ்புனனாட்டினில்
மல்லலம்பழனத்தில்லையம்பூர்வரும்
இந்திரதருநிகர்சந்திரசேகரகவி
ராசபண்டிதனுலாசறத்திருத்தித்
தேமலர்ச்சோலையுந்தாமரைவாவியும்
மன்னியமணவியென்னுமாநகரோன்
சால்புறுகின்றசைவசிகாமணி
பாவியென்னுஞ்சீலமார்நதியினன்
திவளுநல்லொளிசேர்குவளைமாலையான்
விரிபுகழ்நிலவியபெரியதம்பி
எனப்பெயர்மருவியவனப்புறுகுணநிதி
கவிஞர்குழாங்கண்டுவகையின்வியக்கப்
பற்பலதிசையும்பரவப்
பொற்புடன்பதித்துப்புலப்படுத்தினனே.

சென்னைக்கல்விச்சங்கத்து மதறசா-ஈ-ஆஜம் என்னும்பாடசாலையில்
தமிழ்ப்புலமை நடாத்தும்-கூவம்

## சு-சிதம்பரமுதலியாரவர்களால் இயற்றப்பட்டது

கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

சொல்லையம்பூரணமதியிற்றபுத்தாய்ந்துண்மை
தொடர்பொருடோர்திருக்கடவுட்பலகைச்சங்கத்
தொலைவில்புகழ்க்கவிஞர்முதற்றமிழ்மேதக்க
சுருதிமொழித்தலைவர்பண்டுதொகுத்துச்சேர்த்த
செல்லையம்பூருகத்தினியசுவைபாலிக்குஞ்
செழுங்கனியவெனப்பயத்தற்கியைநூலன்றிச்
சிலநிமித்தத்துளுற்றுபலகவிதைச்செம்பொன்
றிகைமறைந்தங்குறைவுளிகாண்பரியதாகத்
தில்லையம்பூர்ச்சந்திரசேகரப்பேர்வாய்ந்த
தெளிதருநாவலனெனுமஞ்சனங்கண்கொண்டு
தெரிந்தெடுத்தச்சினிற்பதிப்பித்தெவர்க்குங்கல்விச்
சிறுமைகெடக்களிதுளங்குந்திறந்தந்தானுற்
றெல்லையம்பூர்சடிலனையுண்ணெகிழ்ந்துபோற்றுந்
தூய்மையும்வாய்மையுமுடையான்ராமநாதச்
சொன்மருவுபுரன்பொன்னுசாமிமாறன்
சோலமணலிப்பதிப்பெரியதம்பிவேளே.

இஃது-தமிழ்ப்புலவராகிய கூடலூர்

## இரிசப்ப உபாத்தியாயரவர்களாலியற்றப்பட்டது

கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

நற்கவிஞராங் கம்பர்காளமேகம் நவில்பொய்யாமொழி யௌவை நயந்துரைத்த, பொற்கவியைத்திரட்டியச்சிற்பதிக்கவென்னப் பொன்னுசாமித்தேவன் பொறையான்மிக்கோன், சிற்குணன்றாள்பணியன்பன் சொல்லச்சந்திர சேகரனுங்கவிராஜன் திருத்திநல்க, எற்குலவுபெரியதம்பிமணலிவாசன் இருஞ்சிலைமேலெழுத்துப்போலியற்றினனே.

தனிப்பாடல்களைத் திரட்டிக்கொடுத்த திருக்காட்டுப்பள்ளி

## இராமசாமி முதலியாரவர்கள் சிறப்பு

கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

சீர்கொண்டமணிமாட மேனிலையின்முகிலுலவச் சிறப்பினோங்கும், திருக்காட்டுப்பள்ளியெனுமெழிலூரன்செழுங்குவளைச்செழும்பூந்தாரான், கார்கொண்ட வேங்கடநன்மலையானோர் பாலிநதியுடையோன்கன்னன், கடலுலகம்புகழ்ந்திடு நல்வேளாளர்மரபுதித்தோன் கருதுமேலோன், வார்கொண்டமுலைமாதர் மடலூருமெழின்மாரன் மதிக்குஞ்சீரன், வாய்மைபெரு ராமசாமிக்குரிசிலோரைம்பான்வருடங்காறும், ஏர்கொண்டவன்பினெடுபொருள்செலவிட்டருஞ் செய்யுளிதினிற்றேடி, எழுதிவைத்தபலபாட்டும்பிரதியொன்று தந்துபுகழீங்குற்றானே.

சாத்துகவிகள்-முற்றுப்பெற்றன.

உ

சிவமயம்.

வித்வசிரோமணியாகிய

# காளமேகப்புலவர்

அவ்வவ்வமயங்களிற் கூறிய

# தனிப்பாடற்றிரட்டு

## காப்பு-வெண்பா

ஏரானைக் காவிலுறை யென்னானைக் கன்றளித்த
போரானைக் கன்றுதனைப் போற்றினால் - வாராத
புத்திவரும் பத்திவரும் புத்திரவுற் பத்திவரும்
சத்திவருஞ் சித்திவருந் தான்.

---

வெள்ளைக் கலையுடுத்து வெள்ளைப் பணிபூண்டு
வெள்ளைக் கமலத்தில் வீற்றிருப்பாள்-வெள்ளை
அரியா சனத்தி லரசரோ டென்னைச்
சரியா சனம்வைத்த தாய். 1

## (சிலேடைகள்)

### ஆமணக்குக்கும், யானைக்கும்

முத்திருக்குங் கொம்பசைக்கு மூரித்தண் டேந்திவரும்
கொத்திருக்கும் நேரா குலைசாய்க்கும் - எத்திசைக்கும்
தேமணக்குஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆமணக்கு மால்யானை யாம். 2

### வைக்கோலுக்கும், யானைக்கும்

வாரிக் களத்தடிக்கும் வந்துபின்பு கோட்டைபுகும்
போரிற் சிறந்து பொலிவாகும் - சீருற்ற
செக்கோல மேனித் திருமலைரா யன்வரையில்
வைக்கோலு மால்யானை யாம். 3

### பாம்புக்கும், வாழைப்பழத்துக்கும்

நஞ்சிருக்குந் தோலுரிக்கு நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டான் மீளாது - விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம். 4

### பாம்புக்கும், எள்ளுக்கும்

ஆடிக் குடத்தடையு மாடும்போ தேயிரையும்
மூடித் திறக்கின் முகங்காட்டும் - ஓடிமண்டை
பற்றின் பரபரெனும் பாரிற்பிண் ணாக்குமுண்டாம்
உற்றிடுபாம் பெள்ளெனவே யோது. 5

(பிண்ணாக்கு-பிளவுள்ளநாக்கு)

### பாம்புக்கும், எலுமிச்சம்பழத்துக்கும்

பெரியவிட மேசேரும் பித்தர் முடியேறும்
அரியுண்ணு முப்பு மேலாடும் - எரிகுணமாம்
தேம்பொழியுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பு மெலுமிச்சம் பழம். 6

(அரி-காற்று, அரிபடல்)

### முகுந்தனுக்கும், முறத்துக்கும்

வல்லரியா யுற்றிடலான் மாதர்கையில் பற்றிடலான்
சொல்லரிய மாப்புடைக்கத் தோன்றுதலால் - வல்லோர்
அகந்தனிலே வாழ்தலா லன்றுல களந்த
முகுந்தனுமே யாகும் முறம். 7

### சந்திரனுக்கும், மலைக்கும்

நிலவாய் விளங்குதலா னீள்வான் படிந்து
சிலபோ துலாவுதலாற் சென்று - தலைமேல்
உதித்து வரலா லுயர்மா மலையை
மதிக்கு நிகராக வழுத்து. 8

### நாய்க்கும், தேங்காய்க்கும்

ஓடுமிருக்கு மதனுள்வாய் வெளுத்தி ருக்கும்
நாடுங் குலைதனக்கு நாணாது - சேடியே

தீங்கான தில்லாத் திருமலைரா யன்வரையில்
தேங்காயு நாயுமெனச் செப்பு. 9

## மீனுக்கும், பேனுக்கும்

மன்னீ ரிலேபிறக்கு மற்றலையி லேமேயும்
பின்னீச்சிற் குத்தும் பெருமையால் - சொன்னேன்கேள்
தேனுந்து சோலைத் திருமலைரா யன்வரையில்
மீனும்பே னுஞ்சரி யாமே. 10

## பனைமரத்துக்கும், வேசைக்கும்

கட்டித் தழுவுதலாற் கால்சேர வேறுதலால்
எட்டிப்பன் னாடை யிழுத்தலால் - முட்டப்போய்
ஆசைவாய்க் கள்ளை யருந்துதலா லப்பனையும்
வேசையென லாமேவி ரைந்து. 11

## வெற்றிலைக்கும், வேசைக்கும்

கொள்ளுகையா னீரிற் குளிக்கையான் மேலேறிக்
கிள்ளுகையாற் கட்டிக் கிடக்கையால் - தெள்ளுபுகழ்ச்
செற்றலரை வென்ற திருமலைரா யன்வரையில்
வெற்றிலையும் வேசை யாமே. 12

## கண்ணாடிக்கும், அரசனுக்கும்

யாவருக்கும் ரஞ்சனைசெய் தியாவருக்கு மவ்வவராய்ப்
பாவனையாய்த் தீதகலப் பார்த்தலால் - மேவும்
எதிரியைத் தன்னுள் ளாக்கியேற் றரசத்தால்
சதிருறலா லாடிய ரசாம். 13

## கூத்தியாருக்கும், குரங்குக்கும்

ஓட்டங் கடியதா லுள்ளவரை மேவுதலால்
சேட்டை யெவரிடத்துஞ் செய்தலால் - நாட்டமுடன்
காத்திரத்திற் குட்டியுறக் கட்டுதலாற் றெட்டுதலால்
கூத்தியர்க்கு நேராங் குரங்கு. 14

(ஓட்டம்-உதடு)

## குதிரைக்கும், காவிரியாற்றுக்கும்

ஓடுஞ் சுழிசுத்த முண்டாகுந் துன்னலரைச்
சாடும் பரிவாய்த் தலைசாய்க்கும் - நாடறியத்

தேடு புகழான் றிருமலைரா யன்வரையில்
ஆடுபரி காவிரி யாமே. 15

(துன்னலர்-பகைவர், மலர்)

### கீரைப்பாத்திக்கும், குதிரைக்கும்

கட்டி யடிக்கையாற் கான்மாறிப் பாய்கையால்
வெட்டி மறிக்கின்ற மேன்மையால் - முட்டப்போய்
மாறத் திரும்புகையால் வண்கீரைப் பாத்தியுடன்
ஏறப் பரியா குமே. 16

### கதவுக்கும், ஆட்டுக்கும்

செய்யுட் கிடைமறிக்குஞ் சேர்பலகை யிட்டுமுட்டும்
ஐயமற மேற்று ளடர்க்குமே - துய்யநிலை
தேடும் புகழ்சேர் திருமலைரா யன்வரையில்
ஆடுங் கதவுநிக ராம். 17

### குதிரைக்கும், ஆட்டுக்கும்

கொம்பிலையே தீனிதின்னுங் கொண்டதன்மேல் வெட்டுதலால்
அம்புவியி னன்னடைய தாதலால் - உம்பர்களும்
தேடுநற் சோலைத் திருமலைரா யன்வரையில்
ஆடுங் குதிரையுநே ராம். 18

### துப்பாக்கிக்கும், ஓலைச்சுருளுக்கும்

ஆணி வரையுறலா லானகுறிப் பேதரலால்
தோணக் கருமருந்தைத் தோய்ந்திடலால் - நீணிலத்தில்
செப்பார்க் குதவாத் திருமலைரா யன்வரையில்
துப்பாக்கி யோலைச் சுருள். 19

### வானவில்லுக்கும், விஷ்ணுவுக்கும், வெற்றிலைக்கும்

நீரிலுளவா னிறம் பச்சையாற் றிருமால்
பாரிற் பகைதீர்க்கும் பான்மையால் - சாருமனுப்
பல்வினையை மாற்றுதலால் பாரீர் பெருவான
வில்விண்டு நேர்வெற் றிலை. 20

(பல்வினை-பல்நோய், தந்தரோகம்)

### பூசுணிக்காய்க்கும், பரமசிவனுக்கும்

அடிநந்தி சேர்தலா லாகம் வெளுத்துக்
கொடியுமொரு பக்கத்திற் கொண்டு - வடிவுடைய

மாசுணத்தைப் பூண்டு வளைத்தழும்பு பெற்றதனால்
பூசுணிக்கா யீசனெனப் போற்று. 21

(நந்தி-காம்பு)

ஓடத்துக்கும், நிதம்பத்துக்கும்

பலகையிடு முள்ளே பருமாணி தைக்கும்
சலமிறைக்கு மாளேறித் தள்ளும் - உலகறிய
ஓடமுமொன் றேயுலக நாதன் பெண்டீர்
மாடமுமொன் றேற்ற மயிர். 22

கரண்டகத்துக்கும், பெண்குறிக்கும்

இட்டிட்டு வாங்குதலா லின்பவெள்ளை தோன்றுதலால்
மட்டிட்டு மூடி மறைக்கையால் - முட்டத்
தெருண்டோர்கள் போற்றுந் திருமலைரா யன்சீர்க்
கரண்டகமும் பெண்குறியுங் காண். 23

அரகர திருச்சிற்றம் பலவா ணுவங்
தரளுபம கேசசிதம் - பரதே
வசிதம் பரதே வசிதம் பரதே
வசிதம் பரதேவ னே. 24

இந்தோ திலகநுதல் ராமரா மாவனசக்
கொந்தோ களபமுலை கோவிந்தா - சந்ததமும்
வேலோ விணைவிழிகள் வேங்கடவா நல்லவயி
ருலோகா ணாராய ணா. 25

ஒன்றிரண்டு மூன்றுநான் கைந்தாறு வேழெட்டு
ஒன்பது பத்துப் பதினொன்று - பன்னி
ரண்டுபதின் மூன்றுபதி னான்குபதி னைந்துபதி
னாறுபதி னேழ்பதி னெட்டு. 26

5-டு-வரப் பாடியது

ஓ, கா, மா, வீ, தோ, வுரைப்பன் டு, டு, டு, டு, டு
நாகார் குடந்தை நகர்க்கதிபர் - வாகாய்
எடுப்பர் நடமிடுவ ரேறுவ ரன்பர்க்குக்
கொடுப்ப ரணிவர் குழைக்கு. 27

(எடுப்பர் - ஓடு, நடமிடுவர் - காடு, ஏறுவர்-மாடு, அன்பர்க்குக் கொடுப்பர்-வீடு, குழைக்கணிவர்-தோடு)

### குடத்திலே கங்கை யடங்குமெனப் பாடியது

விண்ணுக் கடங்காமல் வெற்புக் கடங்காமல்
மண்ணுக் கடங்காமல் வந்தாலும் - பெண்ணை
யிடத்திலே வைத்த விறைவர் சடாம
குடத்திலே கங்கை யடங்கும். 28

### பச்சைவடம், பாகு, சேலை, சோமன் என்று பாடியது

மாயன் றுயின்றதுவு மாமலராள் சொல்லதுவும்
ஏய குருந்திற்கொண் டேறியதும் - தூய
இடப்பாகன் சென்னியின்மே லேறியதும் பச்சை
வடப்பாகு சேலைசோ மன். 29

(மாயன் றுயின்றது பச்சைவடம் - மாமலராள்சொல் பாகு, குருந்திற்கொண்டேறியது சேலை பரமசிவன் சிரசின்மேலேறியது சோமன் பச்சைவடம் ஆலிலை)

### கின்னரிவாசிக்குங் கிளியெனப் பாடியது

ஆடல்புரிந் தானென்று மந்நாளி லேமூவர்
பாடலுகந் தானென்றும் பான்மையினல் - கூடலிலே
நன்னரிவா சிக்குநடை பயிற்றின னென்றும்
கின்னரிவா சிக்குங் கிளி. 30

### பொன்னவரையிலை, காய், பூவென்று பாடியது

உடுத்ததுவு மேய்த்ததுவு மும்பர்கோன் றன்னல்
எடுத்ததுவும் பள்ளிக் கியையப் - படுத்ததுவும்
அந்நா ளெறிந்ததுவு மன்பி னிரந்ததுவும்
பொன், ன, வரை, யிலை, காய், பூ. 31

தோய்த்தான் மேய்த்தான் குடையாத் தூக்கினன் மேன்மேலாச்
சாய்ந்தா னெறிந்தான்பின் சாப்பிட்டான் - ஆய்ந்துசொலும்
மன்ன வரத்தில்வரு மால்சாமி நாதாகேள்
பொன்ன வரையிலை காய்பூ. 32

### செங்கழுநீர்க் கிழங்கென்று பாடியது

வாதமண ரேறியதும் மாயன் றுயின்றதுவும்
ஆதிதடுத் தாட்கொண்ட வவ்வுருவும் - சீதானர்
தாள்கொண் டளந்ததுவுந் தண்கச்சிக் காவலா
கேள்செங் கழுநீர்க் கிழங்கு. 33

(அமணரேறியது-செங்கழு, மாயன்றுயின்றது-நீர், ஆதி தடுத் தாண்டவுரு-கிழம், தாள்கொண்டளந்தது-கு (பூமி)

நாநீ நூநே என்று பாடியது

அரையின் முடியி லணிமார்பி னெஞ்சில்
தெரிவை யிடத்தமர்ந்தான் சேவை-புரையறவே
மானுர் விழியீர் ம, ல, ர, ண, வொற்றீருகும்
ஆனலா நா, நீ, நூ, நே. 34

(நேம்-நெஞ்சில், நூல்-மார்பில், நீர்-முடியில், நாண்-அரையில், நேஅன்பு-நேமெனமருவியது)

ஈயேற மலைகுலுங்கப் பாடியது

வாரணங்க ளெட்டும் மகமேருவுங் கடலும்
தாரணியு மெல்லாஞ் சலித்தனவால் - நாரணனைப்
பண்வா யிடைச்சி பருமத்தி னலடித்த
புண்வாயி லீமொய்த்த போது. 35

கடுங்காற்று மழைகாட்டும், கடுநட்புப் பகைகாட்டும் எனப் பாடியது

நீரோ பிறவா நெறிகாட்டி யாரெமக்கு
நீரோ சமிசைநிலை யிட்டீர் - நீரோயிவ்
விங்களமேன் செய்தீர் விடுங்கடுங்காற் றும்மழைகாட்
டுங்கடுநட் புப்பகைகாட் டும். 36

விநாயகர் முருகர் பரமசிவனுக்குச் சிலேடை

சென்னிமுக மாறுளதாற் சேர்கரமுன் னலுகையால்
இன்னிலத்திற் கோடொன் றிருக்கையால் - மன்னுகுளக்
கண்ணுறுத லானுங் கணபதியுஞ் செவ்வேளும்
எண்ணரனு நேரா வரே. 37

(நாலுகை-தொங்குங்கை, குளம்-வெல்லம்-நெற்றி)

மும்மூர்த்திகளின் உணவு முதலியன

சிறுவ னளைபயறு செங்நெற் கடுகு
மறிதிகிரி தண்டுமணிநூற் - பொறியரவம்
வெற்றேறு புள்ளன்னம் வேதனரன் மாலுக்குக்
கற்றூழம் பூவே கறி. 38

(கல்-மலை, தாழம்-ஆழமானநீர்)

### இராசியை அடைசோலில்லாமற் பாடியது

பகருங்கான் மேடமிடபம் மிதுனங் கர்க்க
டகஞ்சிங்கங் கன்னி துலாம்விர்ச் - சிகந்த
நுசுமகரங் கும்பமீனம் பன்னி ரண்டும்
வசையறு மிராசி வளம். 39

### தை-மாசி-பங்குனியென்று பாடியது

பாணர்க்குச் சொல்லுவதும் பைம்புனலை மூடுவதும்
தாணு வுரித்ததுவுஞ் சக்கரத்தோன் - ஊண துவும்
எம்மானை யேத்துவது மீசனிடத் துஞ்சிரத்தும்
தைமாசி பங்குனிமா தம். 40

(பாணர்க்குச் சொல்லுவது - தை, பைம்புனலை மூடுவது-மாசி, தாணுவுரித்தது - இபம் - சக்கரத்தோனூண்-எம்மானை-யேத்துவது உனி ஈசனிடத்து-மாது-சிரத்து-அம்-உன்னி-உனியென்றாயிற்று.)

ஞானசபை கனகசபை சிற்றம் பலம்பே
ரானந்தக்கூ டந்திருமூ லட் - டானம்பே
ரம்பலம்பஞ் சாவரண நாற்கோபு ரம்பொற்
கம்பமண் டபஞ்சிவ கங்கை. 41

சங்குதீர்த் தந்திருச் சாளரவா யில்வீர
சிங்கா சனந்திருவந் திக்காப்புப் - பங்குனிமா
தத்திருநா ளுத்தந் திருவிழு தன்கோயில்
உத்தரபா கந்திருவா ரூர். 42

அப்பா குமரகோட் டக்கீரை செவிலிமேட்
டுப்பாகற் காய்பருத்திக் குழிநீர் - செப்புவா
சற்காற்றுக் கம்பத் தடியிற் றவங்கருமா
றிப்பாய்ச்சல் யார்க்கு மினிது. 43

### பாதிவெண்பாவில் மாலவதாரஞ் சொன்னது

மெச்சுபுகழ் வேங்கடவா வெண்பாவிற் பாதியிலென்
இச்சையிலுன் சென்ம மெடுக்கவா - மச்சாகூர்
மாகோலா சிங்கா வாமா ராமாராமாரா
மாகோபா லாமாவா வாய். 44

திருக்குடந் தையாதி கும்பேசர் செந்தா
மரைக்குளங் கங்கை மகங்கா - விரிக்கரையின்

ஓரங்கீழ்க் கோட்டங்கா ரோணமங்கை நாயகியார்
சாரங்க பாணி தலம். 45

### மன்னேன்றெடுத்து மலுக்கேன்று முடித்தது

மன்னுதிரு வண்ணு மலைச்சம்பந் தாண்டாற்குப்
பன்னுந் தலைச்சவரம் பண்ணுவதேன்-மின்னின்
இளைத்தவிடை மாத ரிவன் குடுமி பற்றி
வளைத்திழுத்துக் குட்டாம லுக்கு. 46

### சோகாமா ஏவாதாவேன்று பாடியது

சோ,கா,மா,ஏ,வா, தா, சொல்லின்மன்னைக் கூட்டியுமை
பாகார்ந்த தில்லைப் பரமேசர்-வாகாய்த்
தரித்தா ரெரித்தார் தறித்தா ருதைத்தார்
உரித்தார் கணைபடைத்தா ரூர்க்கு. 47

சோமன்-காமன்-மாமன் - ஏமன்-வாமன் - தாமன் - (தாமன்-மாயன்)

### கோட்டைப்பாக்கேன்றெடுத்து களிப்பாக்கேன்று முடித்தது

கொட்டைப்பாக்கும்மொருகண்கூடையைப்பார்க்கும்மடியில்
பிட்டைப்பாக்கும்பாகம்பெண்பாக்கும்-முட்டநெஞ்சே
ஆரணனுநாரணனுமாதிமறையுந்தேடும்
காரணனைக்கண்டுகளிப்பாக்கு. 48

(பார்க்குமென்பது-பாக்குமென மருவியது)

### சேருப்பேன்றெடுத்து விளக்குமாறேன்று முடித்தது

செருப்புக்குவீரர்களைச்சென்றுழக்கும்வேலன்
பொருப்புக்குநாயகனைப்புல்ல-மருப்புக்குத்
தண்டேன்பொழிந்ததிருத்தாமரைமேல்வீற்றிருக்கும்
வண்டேவிளக்குமாறே. 49

(விளக்குமாறு-விளக்கும் வழி)

### கரியேன்றெடுத்து உமியேன்று முடித்தது

கரியதனையேயுரித்தகையாவளையேக்
தரியயற்குமெட்டாதவையா-பரிவாக

அண்டரெல்லாங்கூடியமுதங்கடைந்தபொழு
துண்டநஞ்சையிங்கேயுமி. 50

கரிக்காய்பொரித்தாள்கன்னிக்காயைத்தீத்தாள்
பரிக்காயைப்பச்சடியாய்ப்பண்ணாள்-உருக்கமுள்ள
அப்பக்காய்நெய்துவட்டலாக்கினாளத்தைமகள்
உப்புக்காண்சிசீயுமி. 51

கூதிக்கெட்டேழுங்குலைந்துநடுநடுங்கிப்
பூதிக்கொப்பாகவன்றேபோய்விடுமே-ஆதி
நரக்காட்டகவரியைநற்சரபமாகிச்
சுருக்காவிடினஞ்சுணி. 52

## சீத்துப் பூத்தென்று பாடியது

அப்பூருஞ்செஞ்சடைமேலம்புலியைப்பார்த்துப்பார்த்
தெப்போதுஞ்சீத்துப்பூத்தென்னவே-முப்போதும்
வாலங்காட்டாநிற்கும்வாயங்காக்காநிற்கும்
ஆலங்காட்டான்பூணரா. 53

## பாற்கடலிற் செந்தூளெழும்பப் பாடியது

சுத்தபாற்கடலினடுவினிற்றாளிதோன்றியவதிசயமதுகேள்
மத்தகக்கரியையுரித்தவன்மீதுமதன்பொருதழிந்திடுமாற்றம்
வித்தகக்கமலைசெவியுறக்கேட்டாள்விழுந்துநொந்தயர்ந்தழுதேங்கிக்
கைத்தலமலரான்மார்புறப் புடைத்தாளெழுந்ததுகலவையின்செந்தூள். 54

தடக்கடலிற்பள்ளிக்கொள்வோமதனைநற்சங்கரனார்
அடர்புலிக்குட்டிக்களித்தனராமதுகேட்டுநெஞ்சில்
நடுக்கம்வந்துற்றதுகைகாலெழாநளினத்தியென்னை
இடுக்கடிபாயைச்சுருட்டடியேகடியம்பலத்தே. 55

செற்றலரைவென்றதிருமலைராயன்கரத்தில்
வெற்றிபுரியும்வாளேவீரவாள்-மற்றயவாள்
போவாள்வருவாள்புகுவாள்புறப்படுவாள்
ஆவாளிவளாவாளாம். 56

தெருமுட்டப்பாளைசிதறவளர்பூகத்
தருமுட்டச்செவ்வாளைதாவும்-திருமுட்டத்
தூரிலேகண்டேனொருபுதுமைபன்றிக்கு
மாரிலேகொம்பானவாறு. 57

நாலாநாலாயிரநானூற்றுநாற்பத்தொன்பான்
பாலாநானூற்றுநாற்பத்தொன்பான்-மேலாநாற்
பத்தொன்பான்சங்கமறுபத்துநாலாடலுக்கும்
கர்த்தன்மதுரையிற்சொக்கன். 58

இம்மென்னுமுன்னேயெழுநூறுமெண்ணூறும்
அம்மென்றாலாயிரம்பாட்டாகாதா-சும்மா
இருந்தாலிருந்தேனெழுந்தேனேயாயின்
பெருங்காளமேகம்பிளாய். 59

குரங்கனலில்வீழ்ந்துவெறிகொண்டுதேள்கொட்டக்
காஞ்செறியப்பாம்பலவன்கவ்வ-விரைந்துபேய்
பற்றவேகள்ளுண்டுபச்சைமிளகைக்கடித்தால்
எத்தனைபார்சேட்டைக்கிடம். 60

நீறாவாய்நெற்றிநெருப்பாவாயங்கமிரு
கூறாவாய்மேனிகொளுத்துவாய்-மாறாத
நட்டமாவாய்சோறுநஞ்சாவாய்நாயேனை
இட்டமாய்க்காப்பாயினி. 61

சுருக்கவிழ்ந்தமுன்குடுமிச்சோழியாசோற்றுப்
பொருக்குலர்ந்தவாயாபுலையா-திருக்குடந்தைக்
கோட்டானேநாயேகுரங்கேயுனையொருத்தி
போட்டாளேவேலையற்றுப்போய். 62

பெருமாளுநல்லபெருமாளவர்தந்
திருநாளுநல்லதிருநாள்-பெருமாள்
இருந்திடத்திற்சும்மாயிராமையினாலேயோ
பருந்தெடுத்துப்போகிறதேபார். 63

வாலெங்கேநீண்டவயிறெங்கேமுன்னிரண்டு
காலெங்கேயுட்குழிந்தகண்ணெங்கே-சாலப்
புவிராயர்போற்றும்புலவீர்காணீவிர்
கவிராயரென்றிருந்தக்கால். 64

நச்சரவம்பூண்டதில்லைநாதரேதேவரீர்
பிச்சையெடுத்துண்ணப்புறப்பட்டும்-உச்சிதமாங்
காளமேன்குஞ்சரமேன் கார்க்கடல்போற்றான்முழங்கும்
மேளமேன்ராஜாங்கமேன். 65

கத்துகடல்சூழ்நாகைக்காத்தான்றன்சத்திரத்தில்
அத்தமிக்கும்போதிலரிசிவரும்-குத்தி
உலையிலிடவூரடங்குமோரகப்பையன்னம்
இலையிலிடவெள்ளியெழும். 66

(துதியும்-வசையும்)

மாயனுர்போற்றுமதுராபுரிச்சொக்க
நாயனுர்பித்தேறினுரென்றே-நேயமாங்
கன்னல்மொழியங்கயற்கட்காரிகையாளேயையோ
அன்னமிறங்காமலிருந்தாள். 67

எட்டொருமாவெண்காணிமீதேயிருந்தகலே
பட்டொருமாநான்மாவிற்பாய்ந்தே-சிட்டர்தொழுந்
தேவாதிதேவன்றிருவொற்றியூருடையான்
மாவேறிவீதிவரக்கண்டு. 68

மூப்பான்மழுவும்முராரிதிருச்சக்கரமும்
பாப்பான்கதையும்பறிபோச்சோ-மாப்பார்
வலிமிகுத்தமும்மதத்துவாரணத்தையையோ
எலியிழுத்துப்போகின்றதென். 69

முக்காலுக்கேகாமுன்முன்னரையில்வீழாமுன்
அக்காலரைக்கண்டஞ்சாமுன்-விக்கி
இருமாமுன்மாகாணிக்கேகாமுன்கச்சி
ஒருமாவின்கீழரையின்றோது. 70

வண்ணங்கரியனென்றும்வாய்வேதநாறியென்றுங்
கண்ணனிவனென்றுங்கருதாமன்-மண்ணே
அடிப்பதுமத்தாலேயளந்தானேயாய்ச்சி
அடிப்பதுமத்தாலேயழ. 71

காலனேயுங்காமனேயுங்காட்டுசிறுத்தொண்டர்தரு
பாலனேயுங்கொன்றபழிபோமோ-சீலமுட
னுட்டிலேவீற்றிருந்தநாதரேநீர்திருச்செங்
காட்டிலேவீற்றிருந்தக்கால். 72

பூனைக்கியாறுகால்புள்ளினத்துக்கொன்பதுகால்
ஆனைக்குக்கால்பதினேழானதே-மானேகேள்
முண்டகத்தின்மீதுமுழுநீலம்பூத்ததுண்டு
கண்டதுண்டுகேட்டதில்லைகாண். 73

அப்பனிரந்துண்ணியாத்தாண்மலேலி
ஒப்பரியமாமனுறிதிருடி-சப்பைக்கால்
அண்ணன்பெருவயிறனுறுமுகத்தானுக்கிங்
கெண்ணும்பெருமையிவை. 74

கூத்தாள்விழிகணெடுங்கூர்வேலாங்கூத்தாள்தன்
மூத்தாள்விழிகண்முழுநீலம்-மூத்தாள்தன்
ஆத்தாள்விழிகளரவிந்தமாத்தாள்தன்
ஆத்தாள்விழிகளிரண்டம்பு. 75

என்னேக்கொடுத்தாலிரக்கமுனக்குண்டாமோ
வன்னக்கமலமுகவல்லியே-துன்னுமதக்
காட்டானேக்கோட்டுமுலேக்காரிகையேநீபயந்த
கோட்டானேத்தானேகொடு. 76

முன்னேகடிவாளமூன்றுபேர்தொட்டிழுக்கப்
பின்னேயிருந்திரண்டுபேர்தள்ள-எந்நேரம்
வேதம்போம்வாயான்விகடராமன்குதிரை
மாதம்போங்காதவழி. 77

ஆறும்பதினுறுமாமூரில்வேங்கட்டன்
ஏறும்பரிமாவேயேற்றமா-வேறுமா
எந்தமாசும்மாவெறுமாகளிகிளற
வந்தமாசுந்தமாமா. 78

ஆடாரோபின்னேயவரன்பரெலாம்பார்த்திருக்க
நீடாரூர்வீதியிலேநின்றுதான்-தோடாரும்
மெய்க்கேபரிமளங்கள்வீசுந்தியாகேசர்
கைக்கேபணமிருந்தக்கால். 79

வள்ளலெனும்பெரியமாயூரநாதருக்கு
வெள்ளிமலேபொன்மலேயுமேயிருக்கத்-தெள்ளுமையாள்
அஞ்சலஞ்சலென்றுதினமண்டையிலேதானிருக்க
நஞ்சுதனேயேனருந்திஞர். 80

நல்லதொருபுதுமைநாட்டிற்கண்டேனதனேச்
சொல்லவாசொல்லவாசொல்லவா-தொல்லே
மதுரைவிக்கினேச்சுரனேமாதுமையாள்பெற்றுள்
குதிரைவிற்கவந்தவனேக்கூடி. 81

வெள்ளையானே றும்விமலரடிபணியும்
பிள்ளையார்வாழும்பெருந்தெருவில்-வள்ளை
இலைக்கறிவிற்பாண் மருங்குலிற் றுவிடுமென் று
முலைக்கறிவிப்பாரிலையேமுன். 82

சட்டியிலேபாதியந்தச்சட்டுவத்திலேபாதி
இட்டகலத்திற்பாதியிட்டிருக்கத்-திட்டமுடன்
ஆடிவந்தசோணேசரன் றழைத்தபோதுபிள்ளை
ஓடிவந்தசெவ்வாறுரை. 83

நேற்றிராவங்தொருவனித்திரையிற்கைப்பிடித்தான்
வேற்றாரானென் றுவிடாயென்றேன்-ஆற்றியே
கஞ்சிகுடியென்ருன் களித்தின் றுபோவென்றேன்
வஞ்சியரேசென்ருன் மறைந்து. 84

கண்டீரோபெண்காள் கடம்பவனத்தீசஞர்
பெண்டீர்தமைச்சுமந்தபித்தனர்-எண்டிசைக்கும்
மிக்கானதங்கைக்குமேலேநெருப்பையிட்டார்
அக்காளையேறினராம். 85

மாட்டுக்கோன் றங்கைமதுரைவிட்டுத்தில்லைநகர்
ஆட்டுக்கோனுக்குப்பெண்டாயினள்-கேட்டிலையோ
குட்டிமறிக்கவொருகோட்டானையும்பெற்ருள்
கட்டுமணிச்சிற்றிடைச்சிகாண். 86

நாட்டுக்குளாட்டுக்குநாலுகாலையாமின்
ஆட்டுக்கிரண்டுகாலானாலும்-நாட்டமுள்ள
சீர்மேவுதில்லைச்சிவனேயிவ்வாட்டைவிட்டுப்
போமோசொல்லாயப்புலி. 87

தாண்டியொருத்திதலையின்மேலேருளோ
பூண்டசெருப்பாலொருவன்போடானே-மீண்டொருவன்
வையானேவில்முறியமாட்டானேதென்புலியூர்
ஐயாநீயேழையானல். 88

கொங்குலவுந்தென் றில்லைக்கோவிந்தக்கோனிருக்கக்
கங்குல்பகலண்டர்பலர்காத்திருக்கச்-செங்கையிலே
ஓடெடுத்தவம்பலவாவோங்குதில்லையுட்புகுந்தே
ஆடெடுத்ததெந்தவுபாயம். 89

ஆடுந்தியாகரேயாட்டமேன்றூனுமக்கு
வீடுஞ்சமுசாரமேலிட்டுக்-கூடிச்
செருக்கிவிளையாடச்சிறுவரிரண்டாச்சே
இருக்குமூரொற்றியாச்சே. 90

திங்கணுதலார்திருமனம்போலேகீறிப்
பொங்குகடலுப்பைப்புகட்டியே-எங்களிட
ஆச்சாளுக்கூறுநாயாகாமலாருக்காக்
காய்ச்சாய்வடுகமாங்காய். 91

அம்பேந்துங்கையானவன்பதியிலேம்மாவைக்
கொம்பேந்திதந்தைபணிகொண்டதோ-அன்பா
யரிந்தமகவையமுதுக்கழையென்
றிருந்தவன்றன்செங்காட்டிலே. 92

அம்பேந்துகையான் - அகத்தியன். கொம்பேந்திதந்தை - பரமசிவன். ஐம்மாகால் (கால்-காற்று.)

முற்றுதகாஞ்சியினுமுல்லையினும்பாலையினுங்
கற்றுன்பின்சென்றகருணைமால்-பெற்றுன்றன்
ஆலைப்பதித்தாரளகத்தினுட்கயனுர்
வேலைப்பதித்தார்விழி. 93

கஞ்சமுகையுங்களிற்றுனேயின்கொம்பும்
அஞ்சுமுலைநாலுமுலையானதுவும்-மிஞ்சுபுகழ்
பெற்றுன்றன்மாலைபிறர்க்களித்ததுங்குதலை
கற்றுன்பிறந்தபின்புகாண். 94

தந்தைபிறந்திறவாத்தன்மையினுற்றன்மாமன்
வந்துபிறந்திறக்கும்வண்மையினுல்-முந்தொருநாள்
வீணிக்குவேளையெரித்தான்மகன்மாமன்
காணிக்குவந்திருந்தான்காண். 95

தாதிதூதோதீதுதத்தைதூதோதாது
தூதிதூதொத்திதத்தூததே-தாதொத்த
துத்திதத்தாதேதுதித்தித்தேத்தொத்தீது
தித்தித்ததோதித்திதி. 96

முந்நான்கிலொன்றுடையான்முந்நான்கிலொன்றெடுத்து
முந்நான்கிலொன்றின்மேன்மோதினுன்-முந்நான்கில்

ஒன்றறிந்தாலாகுமோ ஓலமடமயிலே
அன்றணைந்தான்வாராவிட்டால். 97

ஆனரிலேயேயயனுந்திருமாலும்
காணாரடிமுடிமுன்காண்பதற்கு-மேனாள்
இரவுதிருவாரூரிலெந்தைபிரான்சென்ற
பரவைதிருவாயிற்படி. 98

சங்கரர்க்குமாறுதலைசண்முகர்க்குமாறுதலை
ஐங்கரர்க்குமாறுதலையானதே-சங்கைப்
பிடித்தோர்க்குமாறுதலைபித்தாநின்பாதம்
படித்தோர்க்குமாறுதலைபார். 99

யாதக்காலாந்தமக்குமைத்துனற்குமீரிழிவாம்
போதப்பெருவயிறும்புத்திரனுக்-கோதக்கேள்
வந்தவினைதீர்ககவகையறியார்வேளூரர்
எந்தவினைதீர்த்தாரிவர். 100

சீரங்கத்தாருந்திருவானைக்காவாரும்
போரக்கமாகப்பொருவதேன்-ஓரங்கள்
வேண்டாமிதென்னவிபரந்தெரியாதோ
ஆண்டானுந்தாதனுமானால். 101

உத்திரத்துக்கோர்நாளுரோகணிக்குப்பத்தாநாள்
சித்திரைக்குநேரேசிறந்தநாள்-எத்திசையும்
காராரும்பூஞ்சோலைக்கன்னபுரம்வாழ்சவரி
நாராயணன்பிறந்தநாள். 102

சிரித்துப்புரமெரித்தான்சிந்துரத்தைப்பற்றி
உரித்துதிரம்பாயவுடுத்தான்-வருத்தமுடன்
வாடுமடியாருடனேவானவருந்தானவரும்
ஓடுபயந்தீர்த்தநஞ்சுண்ணி. 103

ஆலங்குடியானையாலாலமுண்டானை
ஆலங்குடியானென்றார்சொன்னார்-ஆலங்
குடியானேயாயிற்குவலயத்தாரெல்லாம்
மடியாரோமண்மீதிலே. 104

காவலனெங்கள்கனவைப்பாஞ்சோளேசன்
மாவலிகங்கைமணிவாரி-ஆவனலென்

றப்புளங்கைதோய்க்குமதில்வாரியமுத்தைக்
கொப்புளமென்றானுங்குரங்கு. 105

பொன்னஞ்சடையறுகம்புல்லுக்கும்பூம்புனற்கும்
தன்னெஞ்சுவகையுறத்தாவுமே-அன்னங்கள்
செய்க்கமலத்துற்றலவுந்தில்லைநடராஜன்
கைக்கமலத்துற்றமான்கன்று. 106

எய்ந்ததனங்களிரண்டுமிருபாகற்காய்
வாய்ந்தவிடைசெக்குலக்கைமாத்திரமே-தேய்ந்தகுழல்
முக்கலச்சிக்கும்பிடிக்குமூதேவியாள்கமலைக்
குக்கலிச்சிக்குங்கலைச்சிக்கு. 107

நஞ்சுகுடிகொண்டகணைநாலுந்தெரிந்துமதன்
இஞ்சிகுடிதன்னிலும்வந்தெய்வானே-விஞ்சு
முலைச்சிகரத்தாலழுத்திமுத்தமிட்டுச்சற்றே
கலைச்சிகரத்தாலணைத்தக்கால். 108

தீத்தானுன்கண்ணிலேதீத்தானுன்கையிலே
தீத்தானுமுன்றன்சிரிப்பிலே-தீத்தானுன்
மெய்யெலாம்புள்ளிருக்குவேளூராவுன்னையிந்தத்
தையலாளெப்படிச்சேர்ந்தாள். 109

வெண்ணெய்திருடியுண்டவேணியரனாரிருக்கக்
கண்ணன்மேல்வைத்தகளவேது-பெண்ணைத்
தலையிற்சுமந்தான்மால்சர்ப்பத்திலேறி
அலையிற்றுயின்றானரன். 110

எட்டிகுளத்திலிருந்துசரக்குவிற்கும்
குட்டிசெட்டிதன்மகளைக்கொண்டுபோய்-கொட்டுதற்கே
ஆயிரம்யானையெழுநூறுகூன்பகடு
பாயும்பகடெண்பத்தைந்து. 111

தண்டங்கூர்மாசனங்காள்சற்குணர்நீரென்றிருந்தேன்
பண்டங்குறையவிற்றபாவிகாள்-பெண்டுகளைத்
தேடியுண்ணவிட்டீர்தெருக்கள்தெருக்கடோறும்
ஆடிமுதலானிவரைக்கும். 112

நாராயணனைநாராயணனென்றேகம்பன்
ஓராமற்சொன்னவுறுதியால்-நேராக

வாரென்றால்வர்ரென்பேன்வாளென்றால்வள்ளென்பேன்
நாரென்றானர்ரென்பேன்நான். 113

வாழ்த்துதிருநாகைவாகானதேவடியாள்
பாழ்த்தகுரலெடுத்துப்பாடினாள்-நேற்றுக்
கழுதைகெட்டவண்ணான்கண்டேன்கண்டேனென்று
பழுதையெடுத்தோடிவந்தான்பார். 114

காலையிலும்வேலைகடையக்கயிறாகும்
மாலையிலும்பூமுடித்துவாழுமே-சோலைசெறி
செய்யிலாரம்பயிலுஞ்செந்துருத்திமாநகர்வாழ்
பொய்யிலாமெய்யரிடும்பூண். 115

மண்டலத்தினாளும்வயித்தியராய்த்தாமிருந்தும்
கண்டவினைதீர்க்கின்றார்கண்டீரோ-தொண்டர்
விருந்தைப்பார்த்துண்டருளும்வேளூரென்னாதர்
மருந்தைப்பார்த்தாற்சுத்தமண். 116

கூடல்புனைவாயில்குற்றாலமாப்பனூர்
ஏடகநெல்வேலியிராமேசம்-ஆடானை
தென்பரங்குன்றஞ்சுழியல்தென்றிருப்புத்தூர்காசி
வன்கொடுங்குன்றம்பூவணம். 117

பண்புளருக்கோர்பறவைபாபத்திற்கோரிலக்கம்
நண்பிலரைக்கண்டக்கானாற்காலி-திண்புவியை
ஆள்வார்மதுரையழகியசொக்கர்க்கரவம்
நீள்வாகனநன்னிலம். 118

சதுரரங்கர்சங்கத்தழகர்செங்கைச்சங்கை
அதரமிசைவைத்திலரேயாயின்-முதலை
வருங்குளத்தின்முண்டகக்கைவைப்பரன்றேயன்று
பொருங்களத்தினாற்றுவர்முன்போய். 119

கண்டக்காற்கிட்டுங்கயிலாயங்கைக்கொண்டுட்
கொண்டக்கான்மோட்சங்கொடுக்குமே-கொண்டத்தூர்
தண்டைக்காலம்மைசமைத்துவைத்தபூசணிக்காய்
அண்டர்க்காமீசருக்குமாம். 120

போலநிறமாவார்க்குப்பூணாரமாவாரை
எலவணைதசெய்தாலியல்பாமோ-சாலப்

பழிக்கஞ்சுந்தென்மதுரைப்பாவையிருநான்கு
விழிக்கஞ்சன்சோமனலேவேந்து. 121

கண்ணனிடுங்கறியுங்காட்டுசிறுத்தொண்டரன்பிற்
பண்ணுசிறுவன்கறியும்பற்றுதோ-தண்ணேடு
மட்டியையுஞ்சோலேமருதீசரேபன்றிக்
குட்டியையேன்றீத்தீர்குறித்து. 122

மாடுதின்பான்பார்ப்பான்மறையோதுவான்குயவன்
கூடிமிகமண்பிசைவான்கொல்லனே-தேடி
இரும்படிப்பான்செக்கானெண்ணெய்விற்பான்வண்ணன்
பரும்புடைவைதப்பும்பறை. 123

ஆயனுக்குக்கண்மூன்றுமாதிசிவனுக்கிருகண்
மாயனுக்குச்செங்கையிலேமான்மழுவாம்-நேயமுடன்
சங்கரற்குச்சங்காழிதான்மாலுக்காலமாம்
மங்கையிடத்தாற்காகுமண். 124

கண்ணபுரங்கோயிற்கதவடைத்துத்தாழ்போட்டார்
பண்ணையுண்டார்வெண்ணெயுண்டமாயவனர்-எண்ணும்
சிரக்கப்பரையேந்திச்செங்காட்டிலீசர்
இரக்கப்புறப்பட்டாரென்று. 125

கொன்றைமலர்தரித்தான்கோபாலன்கோலெடுத்து
நின்றுகுழலூதினனீள்சடையோன்-பொன்றிகழும்
அக்கணிந்தான்மாயனரவணையிற்கண்வளர்ந்தான்
சிக்கலிலேவாழுஞ்சிவன். 126

திருந்தாடரவணியுந்தென்கமலேயீசர்
இருந்தாடதென்செய்திடுவார்-பொருந்த
ஒருகாலேயல்லவேயொண்டொடிக்காவன்
றிருகாலுஞ்சந்துபோனல். 127

(சந்துபோதல்-தூதுபோதல், உண்டைவிலகல்.)

உள்ளங்கால்வெள்ளெலும்புதோன்றவொருகோடி
வெள்ளங்காலந்திரிந்துவிட்டோமே-உள்ளபடி
ஆமூர்முதலியமரர்கோனிங்கிருக்கப்
போமூரறியாமற்போய். 128

கம்மாளனங்கிக்கணக்கனெனவேதுதித்தார்
செம்மான்சதுரைத்திருவரசை-அம்மாகேள்

வாணியனும்பொன்னேரிவாழும்வெள்ளாளனுமே
சேணியனுமன்றேதெரிந்து. 129

கம்மாளன் - கபாலத்தையுடையவன். அங்கிக்கணக்கன் - அழற் கண்ணையுடைய நக்கன். செம்மான்-சக்கிலி, சிவந்தமானையுடையவன். வாணியன்-பிரமன். பொன்னேரி-அழகையுடைய இலக்குமி. வெள்ளாளன்-பாற்கடலையுடையான். சேணியன்-இந்திரன்.

பாரளக்குந்தூதுசெல்லும்பையரவின்மேனடிக்கும்
சிரகலிசாபத்தைத்தீர்க்குமே-ஊரருகில்
சண்டச்சகடுதைக்குந்தையலாய்கார்நீல
கண்டத்தாரூரான்கழல். 130

காலாற்படியளக்குங்கண்ணிடந்துபூசிக்கும்
சேலாங்கமடமாஞ்சிங்கமாம்-பாலாகும்
ஆழியப்பிலேதுயிலுமைவர்க்குத்தூதாகும்
வீழியப்பரேறும்விடை. 131

(கமடம்-ஆமை.)

கடம்பவனச்சொக்கருக்குக்கண்ணன்றன்வேறோ
இடம்பெரியகண்ணொன்றையீந்தான்-உடம்பதனிற்
செம்பாதியானான்சுமக்கவெருதானான்
அம்பானான்றேவியுமானான். 132

கன்னபுரமாலேகடவுளிலுநீயதிகம்
உன்னிலுமேயானதிகமொன்றுகேள்-முன்னமே
உன்பிறப்போபத்தாமுயர்சிவனுக்கொன்றுமில்லை
என்பிறப்பெண்ணத்தொலையாதே. 133

ஆனைகுதிரைதருமன்னைதனைக்கொன்றகறி
சேனைமன்னரைக்காய்துன்றீயவரை-பூநெயுடன்
கூட்டியமுதிட்டான்குருக்களமராபதியான்
வீட்டிலுண்டுவந்தேன்விருந்து. 134

அன்னவயல்சூழ்ந்திருக்குமாரூரானெஞ்சத்தில்
இன்னம்வயிரமிருப்பதா-முன்னமொரு
தொண்டன்மகனைக்கொன்றுஞ்சோழன்மகனைக்கொன்றுஞ்
சண்டன்மகனைக்கொன்றுந்தான். 135

வாலிமடிந்ததுவும்வல்லரக்கர்பட்டதுவுங்
கோலமுடிமன்னர்குறைந்ததுவுஞ்-சால

மதியுடையநூற்ருருவர்மாண்டதுவுமையோ
சதவிகரத்தால்வந்ததாழ்வு. 136

கோளரிக்குமூர்கோள்கரவுகற்றவூர்
காளைகளாய்நின்றுகதறுமூர்-நாளையே
விண்மாரியற்றுவெளுத்துமிகக்கறுத்து
மண்மாரிபெய்கவிந்தவான். 137

கம்பத்தானைக்கடையிற்கட்டினன்கால்சாய
அம்பைத்தாவித்தான்காலானதே-வம்புசெறி
பூவைகாள்கிள்ளைகாள்பூங்குயில்காளன்றில்காள்
பாவையாளாண்டபதி. 138

கம்பத்தான்-இராவணன். கடையிற்கட்டினன் - வாலி. அம்பைத் தாவித்தான்கால்-அரிதாள்.

சாரங்கபாணியஞ்சக்கரத்தர்கஞ்சனைமுன்
ஓரங்கங்கொய்தவுகிர்வாளர்-பாரெங்கும்
ஏத்திடுமையாகரினிதாயிவரும்மைக்
காத்திடுவரெப்போதுங்காண். 139

சாரங்கம்-மான் - வில். கஞ்சன்-பிரமன்-கம்சன். உமைபாகர்-சிவன். மையாகர்-மால்.

## கட்டளைக்கலித்துறை

விண்ணீரும்வற்றிப்புவிநீரும்வற்றிவிரும்புமழைத்
தண்ணீரும்வற்றிப்புலவோர்தவிக்கின்றகாலத்திலே
உண்ணீருண்ணீரென்றுபசாரஞ்சொல்லியுபசரித்துத்
தண்ணீருஞ்சோறுந்தருவான்திருப்பனந்தாட்பட்டனே. 140

விள்ளப்புதுமையொன்றுண்டாலவாயினின்மேவுதென்னன்
பிள்ளைக்கொருகுலைமூன்றேகுரும்பைபிடித்ததிலே
கொள்ளிக்கணன்றிட்டியாலோர்குரும்பைகுறைந்தமிர்தம்
உள்ளிற்பொதிந்தவிரண்டிளநீர்க்கச்சுறைந்தனவே. 141

ஆட்டுக்கிசைந்தவரம்பலவாணரவர்க்கெதிரே
நீட்டிற்றுமால்வடபாலினிற்காலெனநீநினையேல்
சூட்டுற்றமுப்புரஞ்செற்றவர்தம்மைச்சுமந்தவுத்த
மாட்டுக்கென்னேவிடங்காணீட்டல்சொல்லவழக்கில்லையே. 142

பாரூரறியப்பலிக்குழன்றீர்பற்றிப்பார்க்குமிடத்
தோரூருமில்லையிருக்கவென்றாலுமுள்ளூருமொற்றி

பேரூரறியத்தியாகரென்றேபெரும்பேரும்பெற்றீர்
ஆரூரிலேயிருப்பீரினிப்போய்விடுமம்பலத்தே. 143

வாணியன்பாடிடவண்ணான்சுமக்கவடுகன்செட்டி
சேணியன்போற்றக்கடற்பள்ளிமுன்ஜெழுத்தீங்கரும்பைக்
கோணியன்வாழ்த்தக்கருமான்றுகிறனைக்கொண்டணிந்த
வேணியனானவன்றட்டான்புறப்பட்டவேடிக்கையே. 144

வாணியன் - பிரமன். வண்ணான்-நந்தி. வடுகன் - வைரவன். செட்டி-முருகன். சேணியன்-இந்திரன். கடற்பள்ளி-மாயன். கரும்பைக்கோணியன்-மதன். கருமான்றுகில்-யானைத்தோல். தட்டான்-காண்டற்கரிய பரமசிவன்.

கழியும்பிழைபொருட்டள்ளிநன்னூலங்கடலினுண்டு
வழியும்பொதியவரையினிற்கால்கொண்டுவன்கவிதை
மொழியும்புலவர்மனத்தேயிடித்துமுழங்கிமின்னிப்
பொழியும்படிக்குக்கவிகாளமேகம்புறப்பட்டதே. 145

வில்லாலடிக்கச்செருப்பாலுதைக்கவெகுண்டொருவன்
கல்லாலெறியப்பிரம்பாலடிக்கவிக்காசினியில்
அல்லார்பொழிற்றில்லையம்பலவாணற்கோரன்னைபிதா
இல்லாததாழ்வல்லவோவிங்ஙனேயெளிதானதுவே. 146

பாங்குபெறுந்திருவைந்நூற்றிரட்டிப்பணவிடையில்
தூங்குமதிலொருமாவேற்றமுண்டுசுரர்முனிவர்
ஆங்கவர்செப்பிற்கடங்காதுலகமனைத்தும்பெறும்
ஓங்குமரங்கத்திருப்பெட்டகத்துளொருமணியே. 147

சத்தாதியைந்தையுந்தாங்காததெய்வந்தனிமறையும்
கத்தாவெனுந்தெய்வமம்பலத்தேகண்டுங்கண்களிரு
பத்தானவன்மைந்தன்பொய்த்தேவியைக்கொல்லப்பார்த்தழுத
பித்தானவன்றனையோதெய்வமாகப்பிதற்றுவதே. 148

திரண்டிமையோர்தொழுந்தென்னரங்கேசர்முன்செங்கைகளா
றிரண்டுடையோனுமெதிர்சென்றதாலெதிர்ந்தார்தமைக்கண்
டரண்டெழுமைவர்க்குத்தேரூர்பவன்கொளணைவெருண்டு
புரண்டொருபுற்றைக்கடந்தொருபுற்றிற்புகுந்ததுவே. 149

மாக்கைக்கிரங்குக்குருகும்வளர்சக்ரவாகப்புள்ளும்
தாக்கச்சரபங்குழைந்ததெவ்வாறுசகதலத்தை

ஆக்கிப்பெருக்கித்திருவறச்சாலையிலன்னமிட்டுக்
காக்கைக்கொருகொக்கின்கீழேயிருக்குங்கருங்குயிலே. 150

தென்னைக்குஞ்சோலைக்கமலப்பிரான்செஞ்சடாடவிதான்
என்னைக்குமென்னிலெரியொக்குமந்தவெரியிலிட்ட
பொன்னைக்குங்கொன்றைகரியொக்கும்வண்டுநற்பொற்பணிசெய்
மின்னைக்குங்கங்கைகிழக்கொல்லனைக்குமவ்வெண்பிறையே. 151

கரியொன்றுபொன்மிகும்பையேறக்கற்றவர்சூழ்ந்துதொழ
எரியொன்றுசெல்வன்றுலாத்தினிலேறவிருண்டமஞ்சு
சொரிகின்றநாகமின்சோற்றினிலேறித்தொடர்ந்துவர
நரியொன்றுசொந்தக்கனலேறிவந்ததுநங்களத்தே. 152

கரி - கணபதி. பொன்பை-சாளி. பொன்மிகும்பை - பெருச்சாளி. எரிஒன்றுசெல்வன்-முருகன். துலாம்-துலாஸ்நானகட்டம். மாயூரமாதலால் - மாயூரமென்பது - மயில். நாகமின்-உமை. சோறு - அன்னப்பட்சி. நரி-சம்பு. சொந்தக்கனல்-நந்தி.

இருந்தாரைக்கேள்வனையொக்குமராவையெழுபுனலைத்
திருந்தாரைவன்னியைமுன்முடித்தோன்செய்யவேளைப்பண்டு
தருந்தாதைநாயகன்சுந்தரன்றூதன்சமரிலன்று
பொருந்தார்புரத்திட்ட தீப்போன்மதியம்புறப்பட்டதே. 153

தாரைகேள்வன்-சந்திரன்-வாலி. திருந்தார்-ஆத்திமாலை-பகைவர். வன்னி-பத்திரம்-ஓரரக்கன். முடித்தல்-தரித்தல்-கொல்லல். வேள்-முருகன்-மன்மதன். சுந்தரன்றூதன்-சுந்தரற்குத்தூதன்-சுந்தரனாகிய இராமனுக்குத்தூதன்.

ஆராயுமுத்தமிழாற்றூரிற்சோமியழகுகண்டு
நாராயணனெடுமாலாகினன்மற்றைநான்முகனும்
ஓராயிரமடலூர்ந்தான்வின்மாரனுருவழிந்தான்
பேரானவானவர்கோனுங்கண்ணாயிரம்பெற்றனனே. 154

(ஓராயிரமடல்-தாமரைமலர்)

பறவாததும்பிகருகாதவெங்கரிபண்புரண்டே
இருகாததந்தியுருகாதமாதங்கமிந்துநுதல்
நிறவாதசிந்தூரம்பூசாக்களபநெடுஞ்சுனையிற்
பிறவாதவாம்பல்வலஞ்சுழிக்கேவரப்பெற்றனனே. 155

கம்பமதகடகளிற்றான்றில்லைவாழும்
கணபதிதன்பெருவயிற்றைக்கண்டுவாடி

உம்பரெலாம்விழித்திருந்தாரயில்வேற்செங்கை
உடையவறுமுகவனுங்கண்ணீராறானான்
பம்புசுடர்க்கண்ணனுமோகஞ்சுண்டான்மால்
பயமடைந்தானுமையுமுடல்பாதியானாள்
அம்புவியைப்படைத்திடுவதவமேதயென்
றயனுமன்னமிறங்காமலலைகின்றானே 156

பாளைமணங்கமழுகின்றகயிற்றாற்றுப்பெருமாளேபழிகாராகேள்
வேளையென்றாலிவ்வேளைபதினாறுநாழிகைக்குமேலாயிற்றென்
தோளைமுறித்ததுமன்றிநம்பியானையுங்கூடச்சுமக்கச்செய்தாய்
நாளையினியார்சுமப்பாரென்னாளுமுன்கோயினாசந்தானே. 157

வீமனெனவலிமிகுந்ததிருமலைராயன்கீர்த்திவெள்ளம்பொங்கத்
தாம்ரையினயனோடிச்சத்தியலோகம்புகுந்தான்சங்கபாணி [லேறிச்
பூமிதொட்டுவானமட்டும்வளர்ந்துநின்றான்சிவன்கயிலைப்பொருப்பி
சோமனையுந்தலைக்கணிந்துவடவரைத்தண்டாலாழஞ்சோதித்தானே.

### அதிமதுரகவிராயர்

மூச்சுவிடுமுன்னேமுந்நூறுநானூறும்
ஆச்சுதென்றாலாயிரம்பாட்டாகாதா-பேச்சென்ன
வெள்ளக்கவிகாளமேகமேநின்னுடைய
கள்ளக்கவிக்கடையைக்கட்டு. 159

---

## தெய்வப்புலமை

## ஒளவையார்

### அவ்வவ்வமயங்களிற் கூறிய

# தனிப்பாடற்றிரட்டு

மதுரமொழிநல்லுமையாள்புதல்வன்மலர்ப்பதத்தை
முதிரநினையவல்லார்க்கரிதோமுகில்போன்முழங்கி
அதிரவருகின்றயானையுந்தேருமதன்பின்சென்ற
குதிரையுங்காதங்கிழவியுங்காதங்குலமன்னனே. 1

வீரகரிருவர்புகழ்ந்திடவேவேண்டும்
வீரனிறையமோதிரங்கள்வேண்டும்-அரையதனிற்
பஞ்சேனும்பட்டேனும்வேண்டுமவர்கவிதை
நஞ்சேனும்வேம்பேனுநன்று. 2

வான்குருவியின்கூடுவல்லரக்குத்தொல்கறையான்
தேன்சிலம்பியாவர்க்குஞ்செய்யரிதால்-யாம்பெரிதும்
வல்லோமேயென்றுவலிமைசொலவேண்டாங்காண்
எல்லார்க்குமொவ்வொன்றெளிது. 3

இவ்வளவுகண்ணுடையாளிவ்வளவுசிற்றிடையாள்
இவ்வளவுபோன்றவிளமுலையாள்-இவ்வளவா
நைந்தவுடலாணலமேவுமன்மதன்றன்
ஐந்துகணையால்வாடினள். 4

ஐயமிடுகின்றநெறியைக்கைப்பிடிமின்
இவ்வளவேனுமன்னமிட்டுண்மின்-தெய்வம்
ஒருவனேயென்றுமுணரவல்லீரேல்
அருவினைகளைந்துமறும். 5

அற்றதலைபோகவறாததலைநான்கினையும்
பற்றித்திருகிப்பறியேனோ-வற்றும்
பரமனையாணுக்கிந்தமானைவருத்திட்ட
பிரமனையான்காணப்பெறின். 6

காணாமல்வேணதெல்லாங்கத்தலாங்கற்றோர்முன்
கோணாமல்வாய்திறக்கக்கூடாதே-நாணாமற்
பேச்சுப்பேச்சென்னும்பெரும்பூனைவந்தாக்கால்
கீச்சுக்கீச்சென்னுங்கிளி. 7

சித்திரமுங்கைப்பழக்கஞ்செந்தமிழுநாப்பழக்கம்
வைத்ததொருகல்விமனப்பழக்கம்-நித்தம்
நடையும்நடைப்பழக்கநட்புந்தயையுங்
கொடையும்பிறவிக்குணம். 8

சூரதந்தனிவிளைத்தமேதாகைசுகிர்த
வீரதந்தனிவிளைத்தமேனி-நிரதம்
கொடுத்திளைத்ததாதாகொடுஞ்சமரிற்பட்ட
வடுத்துளைத்தகல்லபிராமம். 9

நம்பனடியவர்க்குநல்காத்திரவியங்கள்
பாம்புக்காம்பேய்க்காம்பரத்தையர்க்காம்-வம்புக்காங்
கொள்ளைக்காங்கள்ளுக்காங்கோவுக்காஞ்சாவுக்காங்
கள்ளர்க்காந்தீக்காகுங்காண். 10

எட்டேகாலட்சணமேயெமனேறும்பரியே
மட்டில்பெரியம்மைவாகனமே-முட்டமேற்
கூரையில்லாவீடேகுலராமன்றூதுவனே
ஆரையடாசொன்னாயடா. 11

வெய்தாய்நறுவிதாய்வேண்டளவுந்தின்பதாய்
நெய்தானளாவிநிறம்பசந்த-பொய்யா
அடகென்றுசொல்லியமுதத்தையிட்டாள்
கடகஞ்செறிந்தகையாள். 12

விருத்தம்

இலக்கணக்கவிஞர்சொலின்பந்தேடுவர்
மலக்குசொற்றேடுவர்வன்கணாளர்கள்
நிலத்துறுங்கமலத்தைநீளும்வண்டதீ
தலைக்குறைகமலத்தைச்சாருந்தன்மைபோல். 13

தண்ணீருங்காவிரியேதார்வேந்தன்சோழனே
மண்ணாவதுஞ்சோழமண்டலமே-பெண்ணாவாள்
அம்பொற்சிலம்பியரவிந்தத்தாளணியுஞ்
செம்பொற்சிலம்பேசிலம்பு. 14

கூரியவாளாற்குறைத்திட்டகூன்பலா
ஓரிதழாய்க்கன்றாயுயர்மரமாய்ச்-சீரியதோர்
வண்டுபோற்கொட்டையாய்வண்காயாய்த்தின்பழமாய்ப்
பண்டுபோனிற்கப்பலா. 15

கூழைப்பலாத்தழைக்கப்பாடக்குறமகளும்
மூழக்குழக்குத்தினைதந்தாள்-சோழாகேள்
உப்புக்கும்பாடிப்புளிக்குமொருகவிதை
ஒப்பிக்குமென்றனுளம். 16

நிட்டூரமாகநிதிதேடுமன்னவனும்
இட்டதனைமெச்சாவிரப்போனும்-முட்டவே
கூசிநிலைநில்லாக்குலக்கொடியுங்கூசிய
வேசியுங்கெட்டுவிடும். 17

காணக்கண்கூசுதேகையெடுக்கநாணுதே
மாணாக்கவாய்திறக்கமாட்டாதே-வீணுக்கென்
என்பெல்லாம்பற்றஎரிகின்றதையையோ
அன்பில்லாளிட்டவமுது 18

இருந்துமுகந்திருத்தியீரோடுபேன்வாங்கி
விருந்துவந்ததென்றுவிளம்ப-வருந்திமிக
ஆடினாள்பாடினாளாடிப்பழமுறத்தால்
சாடினாளோடினான்றான். 19

பத்தாவுக்கேற்றபதிவிரதையுண்டானால்
எத்தாலுங்கூடியிருக்கலாம்-சற்றேனும்
ஏறுமாறாகவிருப்பாளேயாமாயிற்
கூறாமற்சந்நியாசங்கொள். 20

கானொந்தேனொந்தேன்கடுகிவழிநடந்தேன்
யான்வந்ததூரமெளிதன்று-கூனல்
கருந்தேனுக்கண்ணாந்தகாவிரிசூழ்நாடா
இருந்தேனுக்கெங்கேயிடம். 21

பாரிபறித்தபறியும்பழையனூர்க்
காரிகொடுத்தகளைக்கொட்டுஞ்-சேரமான்
வாராயெனவழைத்தவாய்மையுமிம்மூன்றும்
நீலச்சிற்றாடைக்குநேர். 22

ஒருகொம்பிருசெவியும்மதத்துநால்வாய்க்
கரியுரிவைக்கங்காளன்காளாய்-பரிவுடனே
கண்ணாலவோலைகடிதெழுதவாராயேல்
தன்னாண்மைதீர்ப்பன்சபித்து. 23

சேரலர்கோன்சேரன்செழும்பூந்திருக்கோவல்
ஊரளவுந்தான்வருகவுட்காதே-பாரிமகள்
அங்கவையைக்கொள்ளவரசன்மனமிசைந்தான்
சங்கவையையுங்கூடத்தான். 24

புகார்மன்னன்பொன்னிப்புனனாடன்சோழன்
தகாதென்றுதானங்கிருந்து-நகாதே
கடிதின்வருகக்கடிக்கோவலூர்க்கு
விடியப்பதினெட்டாநாள். 25

வையைத்துறைவன்மதுராபுரித்தென்னன்
செய்யத்தகாதென்றுதேம்பாதே-தையலர்க்கு
வேண்டுவனகொண்டுவிடியவீரோன்பானுள்
ஈண்டுவருகவிசைந்து. 26

கருணையாலிந்தகடலுலகங்காக்கும்
வருணனேமாமலையன்கோவல்-திருமணத்து
முன்மாரிபெய்யுமுதுவாரியைமாற்றிப்
பொன்மாரியாகப்பொழி. 27

முத்தெறியும்பெண்ணைமுதிநீரதுதவிர்த்துத்
தத்தியநெற்பாறனைப்பெய்து-குத்திச்
செருமலைதெய்வீகன்றிருக்கோவலூர்க்கு
வருமளவுங்கொண்டோடிவா. 28

பொன்மாரிபெய்யுமூர்பூம்பருத்தியாடையாம்
அந்நாள்வயலரிசியாகுமூர்-எந்நாளும்
தேங்குபுகழேபடைத்தசேதிமாநாடதனில்
ஓங்குந்திருக்கோவலூர். 29

சொல்லாமலேபெரியர்சொல்லிச்சிறியர்செய்வர்
சொல்லியுஞ்செய்யார்கயவரே-நல்ல
குலாமாலைவேற்கண்ணாய்கூறுவமைநாடிற்
பலாமாவைப்பாதிரியைப்பார். 30

கலித்தாழிசை அல்லது அந்தத்தடி நீண்டிசையாமையின்
ஐந்தடிக்கலித்துறை என்னலுமாம்

திங்கட்குடையுடைச்சேரனுஞ்சோழனும்பாண்டியனும்
மங்கைக்கறுகிடவந்துநின்றூர்மணப்பந்தரிலே
சங்கொக்கவெண்குருத்தீன்றுபச்சோலைசலசலத்து
நுங்குக்கண்முற்றியடிக்கண்கறுத்துநுனிசிவந்து
பங்குக்குமூன்றுபழந்தரவேண்டும்பனந்துண்டமே. 31

ஆயன்பதியிலரான்பதிவந்துற்றளகம்
மாயனூதுங்கருவியாலும்-தூயமணிக்
குன்றுபோல்வீறுகுவிமுலையாடன்னுடனீ
இன்றுபோலென்றுமிரு. 32

சிரப்பான்மணிமவுலிச்சேரமான்றன்னைச்
சுரப்பாடியான்கேட்கப்பொன்னுடொன் - றீந்தான்
இரப்பவரென்பெறினுங்கொள்வர்கொடுப்பவர்
தாமறிவார்தன்கொடையின்சீர். 33

நூற்றுப்பத்தாயிரம்பொன்பெறினுநூற்சீலை
நாற்றிங்கணுளுக்குணைந்துவிடும் - மாற்றலரைப்
பொன்றப்பொருதடக்கைப்போர்வேலகளங்கா
என்றுங்கிழியாதென்பாட்டு. 34

வரகரிசிச்சோறும்வழுதுணங்காய்வாட்டும்
முரமுரெனவேபுளித்தமோரும் - திறமுடனே
புல்வேளூர்ப்பூதன்புகழ்ந்துபரிந்திட்டசோ
றெல்லாவுலகும்பெறும். 35

ஏசியிடலினிடாமையேநன்றெதிரிற்
பேசுமனையாளிற்பேய்நன்று - நேசமிலா
வங்கணத்தினன்றுவலியபகைவாழ்வில்லாச்
சங்கடத்திற்சாவதேநன்று. 36

கரியாய்ப்பரியாகிக்காரெருமைதானுய்
எருதாய்முழப்புடவையாகித் - திரிதிரியாய்த்
தேரைக்கால்பெற்றுமிகத்தேய்ந்துகாலோய்ந்ததே
கோரைக்காலாழ்வான்கொடை. 37

பாடல்பெறுனேபலர்மெச்சவாழானே
நாடறியநன்மணங்கண்டானே - சேடன்
இவன்வாழும்வாழ்க்கையிருங்கடல்சூழ்பாரிற்
கவிழ்ந்தென்மலர்ந்தென்னகாண். 38

காலையிலொன்றுவர்கடும்பகலிலொன்றுவர்
மாலையிலொன்றுவர்மனிதரெலாஞ் - சாலவே
முல்லானைப்போலமுகமுமகமும்மலர்ந்த
நல்லானைக்கண்டறியோநாம். 39

கற்றதுகைம்மண்ணளவுகல்லாதுலகளவென்
றுற்றகலைமடந்தையோதுகிருள் - மெத்த
வெறும்பந்தயங்கூறவேண்டாம்புலவீர்
எறும்புந்தன்கையாலெண்சாண். 40

நூலெனிலோகோல்சாயுநுந்தமரேல்வெஞ்சமராங்
கோலெனிலோவாங்கேகுடிசாயும்-நாலாவான்
மந்திரியுமாவான்வழிக்குத்துணையாவான்
அந்தவரசேயரசு. 41

செம்மான்கரத்தனருள்சேயாநெடியோனை
அம்மானெனப்பெற்றருள்வேலா-இம்மான்
கரும்பிறைக்கும்வெண்பிறைக்குங்கண்ணம்பிறைக்கும்
அரும்பிறைக்குங்கூந்தலணை. 42

மதியாதார் முற்றமதித்தொருகாற்சென்று மிதியாமைகோடி பெறும், உண்ணீருண்ணீரென்றுபசரியார்தம்மனையி லுண்ணாமை கோடிபெறும், கோடிகொடுத்துங் குடிப்பிறந்தார்தம்மோடு கூடுதல்கோடிபெறும், கோடானுகோடி கொடுப்பினுந்தன்னுடை நாக் கோடாமைகோடிபெறும். 43

வாதக்கோனாளையென்றான்வையைக்கோன்பின்னையென்றான்
ஏதக்கோன்யாதேனுமில்லையென்றான்-ஓதக்கேள்
வாதக்கோன்சொல்லதிலும்வையைக்கோன்சொல்லதிலும்
ஏதக்கோன்சொல்லேயினிது. 44

சுற்றுங்கருங்குளவிசூரைத்தூறாரியப்பேய்
எற்றுஞ்சுடுகாடிடிகரையின்-புற்றில்
வளர்ந்தமடற்பனைக்குள்வைத்ததேனொக்கும்
தளர்ந்தோர்க்கொன்றீயார்தனம். 45

ஆர்த்தசபைநூற்றொருவராயிரத்தொன்றாம்புலவர்
வார்த்தைபதினாயிரத்தொருவர்-பூத்தமலர்த்
தண்டாமரைத்திருவேதாதாகோடிக்கொருவர்
உண்டாயினுண்டென்றறு. 46

தண்டாமலீவதுதாளாண்மைதண்டி
அடுத்தக்காலீவதுவண்மை-அடுத்தடுத்துப்
பின்சென்றாலீவதுகாற்கூலிபின்சென்றும்
ஈயானெச்சம்போலறு. 47

உள்ளவழக்கிருக்கவூரார்பொதுவிருக்கத்
தள்ளிவழக்கதனைத்தான்பேசி-எள்ளளவுங்
கைக்கூலிதான்வாங்குங்காலறுவான்றன்கிளையும்
எச்சமறுமென்றாலறு. 48

வழக்குடையானிற்பவலியானைக்கூடி
வழக்கையழிவழக்குச்செய்தோன்-வழக்கிழந்தோன்
சுற்றமுந்தானுந்தொடர்ந்தழுதகண்ணீரால்
எச்சமறுமென்றுலறு. 49

வெண்பாவிருகாலிற்கல்லானைவெள்ளோலை
கண்பார்க்கக்கையாலெழுதானைப்-பெண்பாவி
பெற்றாளேபெற்றாள்பிறர்நகைக்கப்பெற்றாளே
எற்றேமற்றெற்றேமற்றெற்று. 50

கருங்குளவிசூரைத்துறீச்சங்கனிபோல்
வருந்தினர்க்கொன்றீயாதான்வாழ்க்கை-அரும்பகலே
இச்சித்திருந்தபொருள்தாயத்தார்கொள்வாரே
எற்றேமற்றெற்றேமற்றெற்று. 51

வானமுளதான்மழையுளதான் மண்ணுலகிற்
றானமுளதாற்றயையுளதால்-ஆனபொழு
தெய்த்தோமிளைத்தோமென்றேமாந்திருப்போரை
எற்றேமற்றெற்றேமற்றெற்று. 52

எண்ணாயிரத்தாண்டுநீரிற்கிடந்தாலும்
உண்ணீரம்பற்றாக்கிடையேபோற்-பெண்ணாவாய்
பொற்றொடிமாதர்புணர்முலைமேற்சாராரை
எற்றேமற்றெற்றேமற்றெற்று. 53

கருங்காலிக்கட்டைக்குநாணாக்கோடாலி
இருங்கதலித்தண்டுக்குநாணும்-பெருங்கானிற்
காரெருமைமேய்க்கின்றகாளைக்குநான்றோற்ற
தீரிரவுந்துஞ்சாதென்கண். 54

## கொடியது

கொடியதுகேட்கி னெடியவெவ்வேலோய்
கொடிதுகொடிது வறுமைகொடிது
அதனினுங்கொடிது இளமையில்வறுமை
அதனினுங்கொடிது ஆற்றொணாக்கொடுநோய்
அதனினுங்கொடிது அன்பிலாப்பெண்டிர்
அதனினுங்கொடிது
இன்புறவவர்கையிலுண்பதுதானே. 55

## இனியது

இனியதுகேட்கிற் றனிநெடுவேலோய்
இனிதுவினிது ஏகாந்தமினிது
அதனினுமினிது ஆதியைத்தொழுதல்
அதனினுமினிது அறிவினர்ச்சேர்தல்
அதனினுமினிது அறிவுள்ளாரைக்
கனவினுநனவினுங் காண்பதுதானே. 56

## பெரியது

பெரியதுகேட்கி னெரிதவழ்வேலோய்
பெரிதுபெரிது புவனம்பெரிது
புவனமோ நான்முகன்படைப்பு
நான்முகன்கரிய மாலுந்திவந்தோன்
கரியமாலோ வலைகடற்றுயின்றோன்
அலைகடல்குறுமுனி கையிலடக்கம்
குறுமுனியோகல சத்திற்பிறந்தோன்
கலசமோ புவியிற்சிறுமண்
புவியோவரவினுக் கொருதலைப்பாரம்
அரவோவுமையவள் சிறுவிரன்மோதிரம்
உமையோவிறைவர் பாகத்தொடுக்கம்
இறைவரோதொண்ட ருள்ளத்தொடுக்கம்
தொண்டர்தம்பெருமை சொல்லவும்பெரிதே. 57

## அரியது

அரியதுகேட்கின் வரிவடிவேலோய்
அரிதரிது மானிடராதலரிது
மானிடராயினுங் கூன்குருடுசெவிடு
பேடுநீங்கிப் பிறத்தலரிது
பேடுநீங்கிப் பிறந்தகாலையும்
ஞானமுங்கல்வியு நயத்தலரிது
ஞானமுங்கல்வியு நயந்தகாலையும்
தானமுந்தவமுந் தான்செயலரிது
தானமுந்தவமுந் தான்செய்வாராயின்
வானவர்நாடு வழிதிறந்திடுமே. 58

மாடில்லான்வாழ்வுமதியில்லான்வாணிபநன்
னாடில்லான்செங்கோனடாத்துவதுங்-கூடுங்
குருவில்லாவித்தைகுணமில்லாப்பெண்டு
விருந்தில்லான்வீடுவிழல். 59

நேசனைக்காணாவிடத்தினெஞ்சாரவேதுதித்தல்
ஆசானையெவ்விடத்துமப்படியே-வாச
மனையாளைப்பஞ்சணையின்மைந்தர்தமைநெஞ்சில்
வினையாளைவேலைமுடிவில். 60

ஆலைப்பலாவாக்கலாமோவருஞ்சுணங்கன்
வாலைநிமிர்க்கவசமாமோ-நீலநிறக்
காக்கைதனைப்பேசுவிக்கலாமோகருணையிலா
மூர்க்கனைச்சீராக்கலாமோ. 61

நிழலருமைவெய்யிலிலேநின்றறிமினீசன்
கழலருமைவெவ்வினையிற்காண்மின்-பழகுதமிழ்ச்
சொல்லருமைநாலிரண்டிற்சோமன்கொடையருமை
புல்லரிடத்தேயறிமின்போய். 62

காசினியிற்பிள்ளைக்கவிக்கம்புலிபுலியாம்
பேசுமுலாவிற்பெதும்பைபுலி-ஆசு
வலவர்க்குவண்ணம்புலியாமற்றெல்லாப்
புலவர்க்குவெண்பாபுலி. 63

ஈதலறந்தீவினைவிட்டீட்டுபொருளெஞ்ஞான்றுங்
காதலிருவர்கருத்தொருமித்-தாதரவு
பட்டதேயின்பம்பரனைநினைந்திம்மூன்றும்
விட்டதேபேரின்பவீடு. 64

தாயோடறுசுவைபோந்தந்தையொடுகல்விபோம்
சேயோடுதான்பெற்றசெல்வம்போம்-ஆயவாழ்
வுற்றாருடன்போமுடன்பிறப்பாற்றோள்வலிபோம்
பொற்றாலியோடெவையும்போம். 65

போந்தவுதாரனுக்குப்பொன்றுரும்புசூரனுக்குச்
சேர்ந்தமரணஞ்சிறுதுரும்பு-ஆய்ந்த
அறிவோர்க்குநாரியருந்துரும்பாமில்லத்
துறவிக்குவேந்தன்றுரும்பு. 66

மேற்பார்க்கமைந்தரும்மூவாவெருதும்விளங்குகங்கை
நீர்ப்பாய்ச்சலுநன்னிலமுமூண்டாகியுநின்னிடத்திற்
பாற்பாக்கியவதிநீங்காதிருந்தும்பலிக்குழன்றீர்
ஏற்பார்க்கிடாமலன்றேபெருங்கோவிலிறைபவனே. 67

அகவல்

மூவர்கோவையு மூவிளங்கோவையும்
பாடியவென்றன் பனுவல்வாயால்
என்னையும்பாடுக வென்றனேயங்ஙனம்
பாடுதுமியாங்க ளிறுபடுசெங்களம்
கண்ணிற்காணீர் வெளிறுபடுநல்யாழ்
விருப்பமாய்க்கேளீர்
இலவவாய்ச்சிய ரிளமுலைபுல்லீர்
புலவர்வாய்ச்சொற் புலம்பனுக்கிரங்கிலீர்
ஊடீருண்ணீர் கோடீர்கொள்ளீர்
ஓவாக்கானத் துயர்மரம்போலத்
தாவாக்கனியிற் றேன்றினீரே 68

கல்வியுடையீர்கருங்கானகத்திடையே
செல்வியிலையுதிர்ந்துநிற்பதெவன்-வல்லாய்கேள்
வெல்லாவழக்கைவிலைவாங்கிவெல்விக்கும்
வல்லாளன்சுற்றம்போன்மாண்டு. 69

வண்டமிழைத்தேர்ந்தவழுதிகலியாணத்
துண்டபெருக்கமுரைக்கக்கேள்-அண்டி
நெருக்குண்டேன்றள்ளுண்டேனீள்பசியினாலே
சுருக்குண்டேன்சோறுண்டிலேன். 70

ஆக செய்யுள்-229.

---

# ஒளவையார் முதலிய

## எழுவரும் பாடியது

### ஒளவையார்

இட்டமுடனென்றலையிலின்னபடியென்றெழுதி
விட்டசிவனுஞ்செத்துவிட்டானோ-முட்டமுட்டப்
பஞ்சமேயானாலும்பாரமவனுக்கன்னாய்
நெஞ்சமேயஞ்சாதேநீ. 1

P.17

உப்பை

அத்திமுதலெறும்பீறானவுயிரத்தனைக்குஞ்
சித்தமகிழ்ந்தளிக்குந்தேசிகன்-முற்றவே
கற்பித்தான்போனானோகாக்கக்கடனிலையோ
அற்பனோவன்னையரன். 2

அதிகமான்

கருப்பைக்குண்முட்டைக்குங் கல்லினுட்டேரைக்கும்
விருப்புற்றமுதளிக்குமெய்யன்-உருப்பெற்றால்
ஊட்டிவளர்க்கானோவோகெடுவாயன்னாய்கேள்
வாட்டமுனக்கேன்மகிழ். 3

உறுவை

சண்டைப்பைக்குள்ளுயிர்தன்றாயருந்தத்தானருந்தும்
அண்டத்துயிர்பிழைப்பதாச்சரியம்-மண்டி
அலைகின்றஅன்னையரனுடையவுண்மை
நிலைகண்டுநீயறிந்துநில். 4

கபிலர்

கண்ணுழையாக்காட்டிற்கருங்கற்றவளைக்கும்
உண்ணும்படியறிந்தேயூட்டுமவர்-நண்ணும்
நமக்கும்படியளப்பார்நாரியோர்பாகர்
தமக்குத்தொழிலென்னதான். 5

வள்ளியம்மை

அன்னைவயிற்றிலருத்திவளர்த்தவன்றான்
இன்னும்வளர்க்கானோவென்றாயே-மின்னவாஞ்
சூடும்பெருமான்சுடுகாட்டினின்றுவிளை
யாடும்பெருமானவன். 6

வேழமுடைத்துமலைநாடுமேதக்கச்
சோழவளநாடுசோறுடைத்துப்-பூழியர்கோன்
தென்னாடுமுத்துடைத்துத்தெண்ணீர்வயற்றொண்டை
நன்னாடுசான்றோருடைத்து. 7

தெய்வப்புலமைத்

## திருவள்ளுவநாயனார்

அவ்வவ்வமயங்களிற் கூறிய

# தனிப்பாடற்றிரட்டு

---

எவ்வுயிருங்காக்கவொருவீசனுண்டோவில்லையோ
அவ்வுயிரில்யானொருவனல்லனோ-வவ்வி
அருகுவதுகொண்டிங்கலைவதேனன்னே
வருகுவதுதானேவரும். 8

பூவிலயனும்புரந்தரனும்பூவுலகைத்
தாவியளந்தோனுந்தாமிருக்க-நாவில்
இழைநக்கிநூனெருடுமேழையறிவேனோ
குழைநக்கும்பிஞ்ஞகன்றன்கூத்து. 9

ஐயரென்றுரைத்தீர்நாயேற்கடுக்குமோவருளிலேனைப்
பொய்யொடுகளவுமற்றுப்புலன்களையொடுக்கிக்கொண்டு
உய்யவேபுலன்களைந்துமுயர்பரவெளியுள்ளாக்கி
வெய்யவன்மதியம்போலவிரவுவாரையராவர். 10

ஞானவானென்றுசொன்னீர்நாதவிந்துவுங்கடந்து
கானலைவரையுஞ்சுட்டுக்கடுவெளிபரமாநந்தந்
தானெனுமவையிரண்டுந்தவிர்ந்துதன்வசமுங்கெட்டு
மோனமுங்கடந்தேயப்பான்முடிந்தவர்ஞானியாவார். 11

சாதியிலேதொண்ணூற்றென்பானுஞ்சாதி
    சமயத்திற்பதின்மூன்றுஞ்சமயமாகும்
நீதியிலேசிவனுடையநீதியாகும்
    நிலைமையிலேவேதாந்தநிலைமையாகும்
ஆதியிலேயெங்களூர்கருவூராகும்
    அந்தத்திற்போயடைவோம்பேரூர்தன்னிற்
சோதியிலேபரஞ்சோதிக்கூட்டமாகுஞ்
    சொல்லுதற்குமெங்கள்குலஞ்சுக்கிலமதாமே. 12

எந்தவூரென்றீரிருந்தவூர்நீர்கேளீர்
அந்தவூர்ச்செய்தியறியீரோ-அந்தவூர்

முப்பாழும்பாழாய்முடிவிலொருசூனியமாய்
அப்பாலும்பாழென்றறி. 13

நில்லுநில்லென்றுசொன்னீர்நேசபாசங்களைந்தும்
புல்லறிவோடுவாங்காப்புலைகொலைகளவுமற்றுச்
சொல்லுதற்கரியஞானச்சுழிமுனைமுடியின்மீதில்
எல்லையுங்கடந்தேயப்பாலேகமானவர்கணிற்பார். 14

இருமிருமென்றுசொன்னீரேற்குமோவேழையேற்குத்
தருபொருளுணர்ந்துசைவசமயமுமனைத்துநீங்கி
மருடருவினையுநீங்கிமாசிலாவுண்மைஞானம்
பொருந்தினரிருப்பர்பின்புபொருதவரிறப்பர்தாமே. 15

போமெனவுரைத்தீரென்னைப்பொறியொடுபுலன்களைந்தும்
ஆமெனும்விச்சையோடுமங்ஙனமதித்துக்கொண்டே
ஏமமுஞ்சாமமற்றேயிரவொடுபகலுமற்றுச்
சோமனூர்பதியைவிட்டுத்துறந்தவர்போவரன்றே. 16

அடிசிற்கினியாளேயன்புடையாளே
படிசொற்றவறுதபாவாய்-அடிவருடிப்
பின்றூங்கிமுன்னெழுந்தபேதையேபோதியோ
என்றூங்குமென்கணிரா. 17

ஆக செய்யுள்-246.

---

மகா கவியாகிய

## கம்பர்

அவ்வவ்வமயங்களிற் கூறிய

# தனிப்பாடற்றிரட்டு



கடல்கிழக்குத்தெற்குக்கரைபொருவெள்ளாறு
குடதிசையிற்கோட்டைக்கரையாம்-வடதிசையில்
ஏணாட்டுப்பண்ணையிருபத்துநாற்காதஞ்
சோணாட்டுக்கெல்லையெனச்சொல். 1

வெள்ளாறதுவடக்காமேற்குப்பெருவழியாந்
தெள்ளார்புனற்கன்னிதெற்காகும்-உள்ளார
ஆண்டகடல்கிழக்காமைம்பத்தறுகாதம்
பாண்டிநாட்டெல்லைப்பதி. 2

வடக்குத்திசைபழனிவான்கீழ்தென்காசி
குடக்குத்திசைகோழிக்கோடாம்-கடற்கரையின்
ஓரமோதெற்காகுமுள்ளெண்பதின்காதம்
சேரனாட்டெல்லையெனச்செப்பு. 3

மேற்குப்பவளமலைவேங்கடநேர்வடக்காம்
ஆர்க்குமுவரியணிகிழக்கு-பார்க்குளுயர்
தெற்குப்பினாகினிதிகழிருபதின்காதம்
நன்றொண்டைநாடெனவேநாட்டு. 4

ஆழியான்பள்ளியணையேயவன்கடைந்த
ஆழிவரையின்மணித்தாம்பே-பூழியான்
பூணேபுரமெரித்தபொற்சிலையிற்பூட்டுகின்ற
நாணேயகலநட. 5

மங்கையொருபங்கர்மணிமார்பிலாரமே
பொங்குங்கடல்கடைந்தபொற்கயிறே-திங்களையும்
சீறியதன்மேலூருந்தெய்வத்திருநாணே
ஏறியபண்பேயிறங்கு. 6

பாரைச்சுமந்தபடவரவேபங்கயக்கண்
வீரன்கிடந்துறங்குமெல்லணையே-ஈரமதிச்
செஞ்சடையான்பூணுந்திருவாபரணமே
நஞ்சுடையாய்தூரநட. 7

சிரம்பார்த்தானீசனயன்றேவிதனைப்பார்த்தான்
கரம்பார்த்தான்செங்கமலக்கண்ணன்-உரஞ்சேர்
மலைவெளுத்ததிண்புயத்துவண்ணான்சீராமன்
கலைவெளுத்தநேர்த்திதனைக்கண்டு. 8

ஆரார்தலைவணங்காராரார்தான்கையெடார்
ஆரார்தான்சத்திரத்திலாறாதார்-சீராருந்
தென்புலியூர்மேவுஞ்சிவனருள்சேரம்பட்டத்
தம்பிபுகான்வாசலிலேதான். 9

கொற்கையான் மாறன் குலசேகரப்பெருமான்
பொற்கையானானகதைபோதாதோ-நற்கமல
மன்றலைவாரிமணிவாசலையசைக்கத்
தென்றலையேன்வந்தாய்செப்பு. 10

பேரரசர்தேவிமார்பெற்றமதலையர்தம்
மார்பகலங்கண்டுமகிழ்வரே-போர்புரிய
வல்லானகளங்கன்வாணன்றிருநாமம்
எல்லாமெழுதலாமென்று. 11

உலைக்குரியபண்டமுவந்திரக்கச்சென்றால்
கொலைக்குரியவேழங்கொடுத்தான்-தலைக்குரிய
வாணர்கோனாறைமகதேவனுக்கிந்தப்
பாணனோடென்னபகை. 12

வாணன்பெயரெழுதாமார்புண்டோமாகதர்கோன்
வாணன்புகழுரையாவாயுண்டோ-வாணன்
கொடிதாங்கிநில்லாதகொம்புண்டோவுண்டோ
அடிதாங்கிநில்லாவரசு. 13

உமையவளுநீயுமொருக்கொப்பேயொப்பே
உமையவளுக்குண்டங்கோரூனம்-உமையவடன்
பாகந்தோய்ந்தாண்டான்பலிக்குழன்றான்பாண்டியனின்
ஆகந்தோய்ந்தாண்டானரசு. 14

மோட்டெருமைவாவிபுகமுட்டுவராற்கன்றென்று
வீட்டளவும்பால்சொரியும்வெண்ணையே-நாட்டில்
அடையாநெடுங்கதவுமஞ்சலென்றசொல்லும்
உடையான்சடையப்பனூர். 15

வெற்றிபுனைதாதகிக்கும்வேம்புக்கும்பெண்ணைக்கும்
சுற்றும்பெருநிழலாய்த்தோன்றுமே-கற்றோர்
திறந்தாங்குந்தாங்குஞ்செகமுழுதுந்தாங்கும்
அறந்தாங்குந்தொண்டையரசு. 16

கந்தமலர்ப்பிரமன்கன்னிமடவார்க்கெல்லாம்
அந்தவிளநீரைமுலையாக்கினான்-சுந்தரஞ்சேர்
தோற்றமிகுவல்லிக்குத்தோப்பைமுலையாக்கினான்
எற்றமிதில்யார்தானியம்பு. 17

இருந்தவளைப்போனவளையென்னையவளைப்
பொருந்தவளைபறித்துப்போனான்-பெருந்தவளை
பூத்தத்தத்தேன்சொரியும்பொன்னிவளநன்னாட்டின்
மாத்தத்தன்வீதியினில்வந்து. 18

ஆழியானாழியயனெழுத்தாணியென்பார்
கோழியான்குன்றெறியவேலென்பான்-பூழியான்
அங்கைமழுவென்பானருள்பெரியமாவண்டூர்ச்
சிங்கனுலைக்களத்திற்சென்று. 19

குடகர்குணகடலென்பர்குடகுக்
கிடகர்வடகடலென்பர்-வடகடலோர்
தென்கடலென்பர்திருந்துதாரச்சுதனின்
முன்கடனின்றார்க்குமுரசு. 20

தினைவிளைத்தார்முற்றந்தினையுணங்குஞ்செந்நெல்
தனைவிளைத்தார்முற்றமதுதானாங்-கனையு
முரசுணங்கச்சங்குணங்குமூரித்தேர்த்தானை
அரசுணங்குமச்சுதன்முற்றம். 21

குறையுளாரெங்கிரார்கூர்வேலிராமன்
விறையாறுதிங்களிருந்தான்-முறைமையால்
ஆலிக்குந்தார்மார்பாவச்சுதாவந்நாளில்
வாலிக்கிளையான்கடை. 22

அரசனகளங்கனச்சுதன்முற்றத்
தரசரவதரித்தவந்நாள்-முரசதிரக்
கொட்டிவிடுமோசையினுங்கோவேந்தர்காற்றளையை
வெட்டிவிடுமோசைமிகும். 23

தலையவிழ்நாண்மாலைத்தாயாரேயாவி
களையினுமென்கண்டிறந்துகாட்டேன்-வளைகொடுபோம்
வன்கண்ணன்மாவிசயன்மால்யானைதன்னொடும்வந்
தென்கண்புகுந்தானினி. 24

பாண்டியனைப்பேர்மாற்றிப்பாணர்க்கரசளித்த
வாண்டகையென்றன்னையறியேனோ-மூண்டெழுந்த
கார்மாற்றுஞ்செங்கைக்கடகரிவாணாவுனது
பேர்மாற்றுவதரிதோபேசு. 25

வாட்டானைத்தென்னவர்கோன்மாகதற்குத்தோற்றசெய்தி
கேட்டானத்தீங்குரலுங்கேட்டதற்பி-னாட்டம்
பொருந்தாயிரவிழியான்பொன்முடியைச்சாய்த்தங்
கிருந்தானிங்கென்னாகுமென்று. 26

பாணன்மதுரைப்பதியாளவைத்தபிரான்
வாணர்புகழவருமேகம்ப-வாணன்
கரும்போதகமேநின்கால்பணிவேன்மீண்டு
வரும்போதகமேவரின். 27

படுபருந்துஞ்சூர்ப்பேயும்பன்மிருகஞ்செந்நாய்
கொடுகழுகுமித்தனையுங்கூடி-வடிவுடைய
கோமான்களப்பாளன்கொல்யானைபோமாறு
போமாறுபோமாறுபோம். 28

என்சிவிகையென்கவிகையென்றுவசமென்கவசம்
என்பரியீதென்கரியீதென்பரே-மன்கவன
மாவேந்தன்வாணன்வரிசைபரிசுபெற்ற
பாவேந்தரைவேந்தர்பார்த்து. 29

சேற்றுக்கமலவயற்றென்னாறைவாணனையான்
சோற்றுக்கரிசிதரச்சொன்னக்கால்-வேற்றுக்
களிக்குமாவைத்தந்தான்கற்றவர்க்குச்செம்பொன்
அளிக்குமாறெவ்வாறவன். 30

தேருளைப்புரவிவாரணத்தொகுதிதிறைகொணர்ந்துவருமன்னநின்
தேசமேதனதுநாமமேதுபுகல்செங்கையாழ்தடவுபாணகேள்
வாருமொத்தகுடிநீருநாமுமகதேவனாறைநகர்காவலன்
வாணபூபதிமகிழ்ந்தளிக்கவெகுவரிசைபெற்றுவருபுலவன்யான்
நீருமிப்பரிசுபெற்றுமீளவரலாகுமேகுமவன்முன்றில்வாய்
நித்திலச்சிகரமாடமாளிகைநெருங்குகோபுரமருங்கெலாம்
ஆருநிற்குமுயர்வேம்புநிற்கும்வளர்பனையுநிற்குமதனருகிலே
அரசுநிற்குமபசைச்சுமந்தசிலவத்திநிற்குமடையாளமே. 31

அலங்கலணிமார்பனாறையர்கோன்வாணன்
விலக்குகொடுவருகவென்றான்-இலங்கிழையீர்
சேரற்கோசோழற்கோதென்பாண்டிநாடாளும்
வீரர்கோயார்க்கோவிலக்கு. 32

பரப்போதனாலமொருதம்பியாளப்பனிமதியக்
குரப்போனொருதம்பிபின்வரத்தானுந்துணைவியுடன்
வரப்போனமைந்தற்குத்தாதைபொறுதுயிர்மாய்ந்தனனெஞ்
சுரப்போவெனக்கிங்கினியாருவமையுரைப்பதற்கே. 33

கண்டாயோபார்வேந்தா கானகத்துக்கள்ளியின்கீழ்
வெண்டாமரைபூத்துவிளக்கெரியப்-பெண்டாலி
பூட்டுதற்குமுன்னமொருபுத்திரனைப்பெற்றெடுத்தாள்
காட்டிற்கழுகோட்டுங்கை. 34

கன்னிக்கலசமுலையாடன்காமக்குரோதபஞ்சத்தில்
என்னுக்கெழுதிக்கொடுத்தேனென்றியம்பக்கேளாயிகல்வேந்தே
மின்னுக்கெழுதியிடைக்கெழுதிவேண்டும்பொருட்குமெழுதியருட்
பொன்னுக்கெழுதிக்கொடுத்தேன்யான்பொய்யுமுரையேன்புகல்வேந்தே.

பாண்டியன் பாடியது

போற்றினும்போற்றுவர்பொருள்கொடாவிடில்
தூற்றினுந்தூற்றுவர்சொன்னசொற்களை
மாற்றினுமாற்றுவர்வன்கணாளர்கள்
கூற்றினும்பாவலர்கொடியராவரே. 36

மன்னவனுநீயோவளநாடுமுன்னதோ
உன்னையறிந்தோதமிழையோதினேன்-என்னை
விரைந்தேற்றுக்கெள்ளாதவேந்துண்டோவுண்டோ
குரங்கேற்றுக்கொள்ளாதகொம்பு. 37

அன்றையிலும்வையமகன்றதோவல்லவென்று
குன்றெடுத்துநீதிருத்திக்கொண்டாயோ-என்றும்
அடைந்தாரைக்காக்குமகளங்காதுங்கா
நடந்தாயேநாலாறடி. 38

காதமிருபத்துநான்கொழியக்காசினியை
ஓதக்கடல்கொண்டொளித்ததோ-மேதினியிற்
கொல்லிமலைத்தேன்சொரியுங்கொற்றவாநீமுனிந்தால்
இல்லையோவெங்கட்கிடம். 39

நீரெலாஞ்சேற்றுநாற்றநிலமெலாங்கல்லுமுள்ளும்
ஊரெலாம்பட்டிதொட்டியுண்பதோகம்பஞ்சோறு
பேரெலாம்பொம்மன்திம்மன்பெண்களோநாயும்பேயும்
காருலாங்கொங்குநாட்டைக்கனவிலுநினைக்கொணாதே. 40

குமிண்டியும்பண்ணையுங்கூட முளைக்கின் றகொல்லைக்கம்பை
நிமிண்டியுமூதியுந்தின்னவல்லோரிந்தநீணிலத்திற்
றுமிண்டியக்காய்தன்னைமொட்டையம்பாலெய்யுஞ்சூரர்கண்டீர்
நிமிண்டியிற்பள்ளிகளத்தனைபேர்களுநல்லவரே. 41

செட்டிமக்கள்வாசல்வழிசெல்லோமேசெக்காரப்
பொட்டிமக்கள்வாசல்வழிப்போகோமே-முட்டிபுகும்
பார்ப்பாரகத்தையெட்டிப்பாரோமேயெந்நாளுங்
காப்பாரேவேளாளர்காண். 42

மேழிபிடிக்குங்கைவேல்வேந்தர்நோக்குங்கை
ஆழிதரித்தேயருளுங்கை-சூழ்வினையை
நீக்குங்கையென் றுநிலைக்குங்கைநீடுழி
காக்குங்கைகாராளர்கை. 43

பற்கொண்டதிண்புயத்தான்மாநகர்விட்டிங்குவந்து
சொற்கண்டபாவின்சுவையறிவா ரீங்கிலையே
விற்கொண்டவாணுதலாள்வேலிதருங்கூலி
நெற்கொண்டுபோமளவும்நில்லாய்நெடுஞ்சுவரே. 44

விருத்தம்

தேரையார்செவ்விளநீருண்ணுப்பழிசுமப்பர்
நாரியார்தாமறிவார்நாமவரைநத்தாமை
கோரைவாய்ப்பொன்சொரியுங்கொல்விமலைநன்னுடா
ஊரைவாய்மூடவுலைமூடிதானிலையே. 45

மட்டுப்படாக்கொங்கைமானார்கலவிமயக்கத்திலே
கட்டுப்பட்டாயென்னகாதல்பெற்றாய்மதன்கையம்பினாற்
பட்டுப்பட்டாயினுந்தேறுவையேயென் றுபார்த்திருந்தேன்
வெட்டுப்பட்டாய்மகனேதலைநாளின்விதிப்படியே. 46

வில்லம்புசொல்லம்புமேதினியிலிரண்டுண்டு
வில்லம்பிற்சொல்லம்பேமேலதிகம்-வில்லம்பு
பட்டதடாவென்மார்பிற்பாண்டியாநின்குலத்தைச்
சுட்டதடாவென்வாயிற்சொல். 47

கரைக்குவடக்கிருக்குங்காளிகாளம்மைக்
கரைத்துவழிசாந்தைத்தொட்டப்பேய்-உரைத்தும்

மறைக்கவறியாதவன்பேயின்கையைக்
குறைக்குமாங்கூன்கத்திகொண்டு. 48

காலப்புயனிகர்காராளர்தம்மைக்கடலுடுத்த
தாலக்குலமங்கைபெற்றதனுற்சதாகாலமுமால்
கோலத்திருமுகத்தாலேமுகந்தனன்கூடவிலே
சூலக்கரப்படையான்றலைமீதுசுமந்தனனே. 49

கல்லங்காடுதனில்விளையாக்கடுகநிலத்திற்றுன்முளையா
அல்லனிருந்தகருங்கூந்தலணங்குக்கணங்குபோலாவாள்
செல்லன்றேவிமனைகடொறுந்தேடித்திரிந்துங்காணுத
நெல்லஞ்சோறேகம்பஞ்சோற்றினைநீசுமந்திரிவாயே. 50

கம்பர் கற்றுச்சொல்லி

மாவுறங்கினபுள்ளுறங்கினவண்டுறங்கினதண்டலைக்
காவுறங்கினவெங்கண்மானிருகண்ணுறங்கிலளையகோ
கோவுறங்குகடைத்தலைக்குலதீபவள்ளைகுதட்டிவாய்
ஆவுறங்குபகாரசஞ்சலமஞ்சலென்னவடுக்குமே. 51

அம்பிகாபதியும் கம்பரும் பாடியது

இட்டடிநோவவெடுத்தடிகொப்பளிக்க
வட்டில்சுமந்துமருங்கசையக்-கொட்டிக்
கிழங்கோகிழங்கென்றுகூறுவாணுவில்
வழங்கோசைவையம்பெறும். 52

அம்பிகாபதி

சற்றேபருத்ததனமேகுலுங்கத்தரளவடந்
துற்றேயசையக்குழையூசலாடத்துவர்கொள்செவ்வாய்
நற்றேனொழுகநடனசிங்காரநடையழகின்
பொற்றேரிருக்கத்தலையலங்காரம்புறப்பட்டதே. 53

வெங்கண்சிவந்துவெடிவான்முறுக்கிவெகுண்டெழுந்தென்
அங்கம்பிளக்கவருங்களிறேயன்றிரணியனைப்
பங்கம்படவுரங்கீண்டேயுதிரம்பருகுநர
சிங்கமிருக்குதுகாண்கெடுவாயென்றன்சிந்தையிலே. 54

வீரமுண்டோமதன்தையம்பினல்வெந்துவீழுகைக்கு
நேரமுண்டோவஞ்சிநேர்பட்டகாலையினெஞ்சைவிடப்

பேரமுண்டோசொலவொண்ணுதகாமப்பெருநெருப்புக்
கீரமுண்டோவையனேயென்னபாவமினிச்சொல்வதே. 55

உருகியுடல்கருகியுள்ளீரல்பற்றி
எரிவதவியாதென்செய்வேன்-வரியரவ
நஞ்சிலேதோய்ந்தகளினவிழிப்பெண்பெருமாள்
நெஞ்சிலேயிட்டநெருப்பு. 56

வாணன்புகழ்க்கெல்லைவாழ்த்துவோர்நாவெல்லை
வாணன்புகழ்க்கெல்லைமண்ணெல்லை-வாணன்
படைக்கெல்லைதிக்கெல்லைபைந்தமிழ்தேர்வாணன்
கொடைக்கெல்லையேற்பவர்தங்கோள். 57

நில்லாதபல்லும்பறிபட்டகூந்தலுநீண்டகரிப்
பொல்லாவழுக்குப்புடைவையுமாய்வெகுபூச்சியம்போய்ச்
செல்லாப்பணத்துக்குத்தேட்டுணுமற்றுத்தியங்கியொன்றும்
இல்லாதபாவிதனக்கார்துணைபொன்னிராட்டினமே. 58

வாசமலர்மடந்தைபோல்வார்மருதவனத்
தீசனடியாரெழுபதின்மர்-நேசத்
திரவலர்மேனீட்டுவர்கையீண்டுலகையாளும்
புரவலர்மேனீட்டுவர்பொற்றாள். 59

## இடைக்காடர் பாடிய ஊசிமுறி

ஆற்றங்கரையினருகிருக்குமாமரத்திற்
காக்கையிருந்துகககவெனக்-காக்கைதனை
எய்யக்கோலில்லாமல் ० ० ० என்றானே
வையைக்கோனாரின்மகன். 60

## ஏகம்பவாணன் மனைவி

சேனைதழையாக்கிச்செங்குருதிநீர்தேக்கி
ஆனைமிதித்தவருஞ்சேற்றின்-மானபரன்
மாவேந்தர்வேந்தன்பறித்துநட்டானேகம்பன்
மூவேந்தர்தங்கண்முடி. 61

## கம்பர்வீட்டு வெள்ளாட்டி

நெற்படிவிளைகழனிபுடைசூழ்நென்மலிவாழ்தச்சன்
கற்படிபனைதோளான்பெயரோகங்கணகணவன்

விற்படிவாணுதலாண்மனைவிமின்மினிமினிமினிமி
சொற்படிவேலைசெயும்மவளோதுந்துமிதுரிதுரிதி. 62

வட்டமதிபோலிருக்கும்வன்னிக்கொடிதாவுங்
கொட்டுவார்கையினின்றுகூத்தாடும்-சுட்டால்
அரகராவென்னுமேயம்பலசோமாசி
ஒருநாள்விட்டேனீதுரை. 63

தென்னவாமீனவாசீவிலிமாறுமதுரை
மன்னவாபாண்டிவரராமா-துன்னுஞ்
சுரும்புக்குத்தாரளித்ததுய்யதமிழ்நாடா
கரும்புக்குவேம்பிலேகண். 64

மாப்பைந்தார்க்கல்லமுத்துவண்ணத்தார்க்கல்லவஞ்சி
வேப்பந்தார்க்காசைகொண்டுவிட்டாளே-பூப்பைந்தார்
சேர்ந்திருக்குநெல்வேலிச்சீவிலிமாறுதமிழை
ஆய்ந்திருக்கும்வீரமாறு 65

வேம்பாகிலுமினியசொல்லுக்குநீபுனைந்த
வேம்பாகிலுமுதவவேண்டாமோ-மீன்பாயும்
வேலையிலேவேலைவைத்தமீனவாநின்புயத்து
மாலையிலேமாலைவைத்தாண்மான். 66

இலகுபுகழாறையேகம்பவாணன்
அலகைவரும்வருமென்றஞ்சி-உலகறிய
வானவர்கோன்சென்னிமிசைவண்கைவளையெறிந்த
மீனவர்கோன்கைவிடான்வேம்பு. 67

பாண்டியன் மனைவி

வேண்டியபோதின்பம்விளைக்குமடந்தையரைத்
தீண்டியகையாலென்னைத்தீண்டாதே-பாண்டியா
முல்லைக்கதிபாமுகம்பார்த்தகலநின்று
சொல்லக்கடவதெல்லாஞ்சொல். 68

கலையான்முலைமூடிக்கண்வலைக்குள்ளாக்கும்
விலைமாதர்தாம்வரவிட்டாரோ-விலைமாதர்
கொங்கையிலேதோய்ந்தகுறைதீரத்துய்யசிவ
கங்கையிலேநீராடிவா. 69

ஆக செய்யுள்-315.

---

### இலக்கணக்கவிகளாகிய

## ஒட்டக்கூத்தரும், புகழேந்திப்புலவரும்

### அவ்வவ்வமயங்களிற் கூறிய

# தனிப்பாடற்றிரட்டு

---

கலைவாணிநீயுலகிலிருப்பதுவுங்கல்வியுணர்கவிவல்லோரைத்
தலையாகக்காப்பதுவுமவர்நாவில்வாழ்வதுஞ்சத்யமன்றோ
சிலைவாணனுவிருந்தாயிரம்புயக்கடுணிந்துமுயர்சிவனுற்றான்
தலையாவிகொடுத்திடுஞ்செங்குந்தருயிர்பெற்றிடநீதயைசெய்வாயே.

நிலைதந்தாருலகினுக்குமியாவருக்குமானமதைநிலைக்கத்தந்தார்
கலைதந்தார்வணிகருக்குச்சீவனஞ்செய்திடவென்றேகையிற்றந்தார்
விலைதந்தார்தமிழுனுக்குச்செங்குந்தரென்கவிக்கேவிலையாகத்தான்
தலைதந்தாரெனக்குமொட்டக்கூத்தனெனப்பெயரினையுந்தாந்தந்தாரே.

பத்துக்கொண்டனதிக்கும்பதறிப்போயுலையப்
பைம்பொற்றாரகைசிந்தப்பகிரண்டத்திடைநீள்
மத்துக்கொண்டுமதிக்குந்திரையாழிநெடுமால்
வடிவாகிப்புவிகைக்கொண்டருண்மானுபானு
முத்துப்பந்தரினிற்குங்குருளைக்குஞ்சினவேன்
முருகற்கும்பொதியைக்கோமுனிவர்க்குஞ்சடிலக்
கொத்தற்கும்பதுமக்கொந்தயனுக்குமலதிக்
கூழைத்தண்டமிழுக்கேன்கொடியுஸ்காளமுமே. 3

இன்றல்லோகம்பனிறந்தநாளென்கவிதை
இன்றல்லோராசசபைக்கேற்குநாள்-இன்றல்லோ
பூமடந்தைவாழப்புவிமடந்தைவீற்றிருக்க
நாமடந்தைநூல்வாங்குநாள். 4

இன்றல்லோகம்பனெழுந்தநாளென்கவிதை
இன்றல்லோராசசபைக்கேறுநாள்-இன்றல்லோ
பூமடந்தைவாழப்புவிமடந்தைவீற்றிருக்க
நாமடந்தைநூல்பூட்டுநாள். 5

### கட்டளைக்கலித்துறை

மாங்குயிலால்வில்வி தன்னம்பினாற்கம்பவாரிதியால்
ஓங்கியபூமெல்லணையொன்றினானும்பரூர்மதியாற்
தீங்குறுமேநல்லெழில்குன்றுமேகொம்புசீர்கெடுமே
காங்கேயனேசொல்லகளங்கனேகம்பைக்காவலனே. 6

கரண்டகண்டத்தொனிக்கஞ்சியமான்கருங்கங்குலிலே
திரண்டவெள்ளத்திற்பிணமீதுசென்றனள்சேர்ந்தவனை
அரண்டவின்பங்கொடுமீளக்காப்பற்றவங்கொலுசால்
குரண்டகன்னத்திலுதைத்தனள்காணக்குலோத்துங்கனே. 7

கோரத்துக்கொப்போகனவட்டமம்மானை
கூறுவதுங்காவிரிக்குவைகையோவம்மானை
ஆருக்குவேம்புநிகராகுமோவம்மானை
ஆதித்தனுக்குநிகரம்புலியோவம்மானை
வீரர்க்குள்வீரனொருமீனவனோவம்மானை
வெற்றிப்புலிக்கொடிக்குமீன்கொடியோவம்மானை
ஊருக்குறந்தைநிகர்கொற்கையோவம்மானை
ஒக்குமோசோணாட்டுக்குப்பாண்டிநாடம்மானை. 8

### புகழேந்தி

திருநெடுமாலவதாரஞ்சிறுபுலியோவம்மானை
சிவன்முடியிலேறுவதுஞ்செங்கதிரோவம்மானை
ஒருமுனிவனேரியிலோவுரைதெளிந்ததம்மானை
ஒப்பரியதிருவிளையாட்டுறைந்தையிலோவம்மானை
கரையெதிரேறியதுகாவிரியோவம்யானை
கடிப்பகைக்குத்தாதகியங்கண்ணியோவம்மானை
பரவைபடிந்ததுஞ்சோழன்பதந்தனிலோவம்மானை
பாண்டியனார்பராக்கிரமம்பகரெளிதோவம்மானை. 9

### ஒட்டக்கூத்தரும், சோழராஜனும் பாடியது

ஆடுங்கடைமணிநாவசையாமலகிலமெங்கும்
நீடுங்குடையைத்தரித்தபிரானிந்தநீணிலத்தில்
பாடும்புலவர்புகழொட்டக்கூத்தன்பதாம்புயத்தைச்
சூடுங்குலோத்துங்கசோழனென்றேயெனைச்சொல்லுவரே. 10

### ஒட்டக்கூத்தன்

இன்னங்கலிங்கத்திகல்வேந்தருண்டென்றோ
தென்னன் றமிழ்நாட்டைச்சீறியோ-சென்னி
அகளங்காவுன் றனயிராவதத்தின்
நிகளங்கால்விட்டநினைவு. 11

### புகழேந்தி

தென்னவன்றென்னர்பெருமான் றிறன்மதுரை
மன்னவன்கோக்களிற்றின்வல்லிக்கும்-பொன்னிநா
டாலிக்கும்வேந்தாமபயகுலமகளிர்
தாலிக்குமொன்றேதளை. 12

### புகழேந்தி

சத்தம்பயிலும்புலவோர்கதலித்தண்டோட்டம்புகும்
பித்தனிவனென்பரென்னைக்கண்டாற்பெருத்துப்பணைத்துத்
தத்தம்பிறகிடும்பார்வேந்தர்தங்கள் தடமகுட
சத்தமபசத்தங்காண்கங்குல்யானைச்சயதுங்கனே. 13

### ஒட்டக்கூத்தன்

மானிற்குமோவிந்தவாளரிவேங்கைமுன்வற்றிச்செத்த
கானிற்குமோவிவ்வெரியுந்தணன்முன்கனைகடலின்
மீனிற்குமோவிந்தவெங்கண்சுறுமுனம்வீசுபனி
தானிற்குமோவிக்கதிரவன்றோற்றத்திற்றூர்மன்னனே. 14

### புகழேந்தி

மானவனுனந்தவாளரிவேங்கைமுன்வற்றிச்செத்த
கானவனுனவ்வெரியுந்தணன்முன்கனைகடலின்
மீனவனுனந்தவெங்கண்சுறுமுனம்வீசுபனி
தானவனுனக்கதிரவன்றோற்றநற்றூர்மன்னனே. 15

### ஒட்டக்கூத்தன்

நானேயினியுனைவேண்டுவதில்லைநளினமலர்த்
தேனேகபாடந்திறந்திடுவாய்திறவாவிடிலோ
வானேறனையவிரவிகுலாதிபன்வாயில்வந்தாற்
றானேதிறக்குநின்கையிதழாகியதாமரையே. 16

புகழேந்தி

இழையொன் றிரண்டுவகிர்செய்த நுண்ணிடையேந்துவள்ளைக்
குழையொன் றிரண்டுவிழியணங்கேகொண்டகோபந்தனி
மழையொன் றிரண்டுகைமானுபரணனின்வாயில்வந்தாற்
பிழையொன் றிரண்டுபொறுரோகுடியிற்பிறந்தவரே. 17

ஒட்டக்கூத்தன்

வெள்ளத்தடங்காச்சினவாளைவேலிக்கமுகின்மீதேறித்
துள்ளிமுகிலைக்கிழித்துமழைத்துளியோடிறங்குஞ்சோணாடா
கள்ளக்குறும்பர்குலமறுத்தகண்டாவண்டர்கோபாலா
பிள்ளைமதிகண்டெம்பேதைபெரியமதியுமிழந்தாளே. 18

ஔவையார்

ஒட்டாவோருமதி கேட்டாய்

புகழேந்தி

பங்கப்பழனத்துழுமுழவர்பலவின்கனியைப்பறித்ததென்று
சங்கிட்டெறியக்குரங்கிளநீர்தனைக்கொண்டெறியுந்தமிழ்நாடா
கொங்கைக்கமராபதியளித்தகோவேராஜகுலதிலகா
வெங்கட்பிறைக்குங்கரும்பிறைக்கும்மெலிந்தபிறைக்கும்விழிவேலே.

ஒட்டக்கூத்தன்

புள்ளிருக்குந்தார்மார்பன்பூம்புகார்வாழ்களியேம்
சுள்ளிருக்குங்கள்ளையுண்டுஞ்சோர்விலேம்-உள்ளபடி
சொல்லவாவாலிதுரோபதையைமூக்கரிந்த
தல்லவாமாபாரதம். (வாலி-அரவக்கொடியுடைய துரியோதனன்)

என்றுபெறுவேன்யானீசன்றிருமுடிமேல்
சென்றுவிளையாடுகின்றதீபமே-என்றும்
செருப்புக்குத்தோல்வாங்குஞ்சென்னியகளங்கன்
பொருப்புக்குத்தோலாப்புயம். (தோல்-யானை) 21

வேளாளன்

கோக்கண்டுமன்னர்குரைகடற்புக்கிலர்கோகனகப்
பூக்கண்டுகொட்டியும்பூவாதொழிந்திலபூதலமேழ்
காக்கின்றமன்னகவியொட்டகூத்தநின்கட்டுரையாம்
பாக்கண்டொளிப்பர்களோதமிழ்ப்பாடியபாவலரே. 22

## கருமான்

செல்லன்புதல்வன்றிருவேங்கடவன்செகத்குருவாங்
கொல்லன்கவியைக்குறைசொல்லுவோரைக்குறடுகொண்டு
பல்லைப்பிடுங்கிப்பருந்தாட்டமாட்டிப்பகைவர்முன்னே
அல்லும்பகலுமடிப்பேன்கவியிருப்பாணிகொண்டே. 23

## அம்பட்டன்

விண்பட்டகொக்குவல்லூறுகண்டென்னவிலவிலத்துப்
புண்பட்டநெஞ்சொடுமிங்குநின்றாய்பொட்டையாய்புகலாய்
கண்பொட்டையாயினுமம்பட்டனான்கவிவாணர்முன்னே
பண்பட்டசெந்தமிழ்நீயுந்திடுக்கிடப்பாடுவனே. 24

## குயவன்

மோனைமுத்தமிழ்மும்மதமும்பொழி
யானைமுன்வந்தெதிர்த்தவனாரடா
கூனையுங்குடமுங்குண்டுசட்டியும்
பானையும்வனையக்குசப்பையல்யான். 25

## தச்சன்

சொன்னசந்தக்கவியாவருஞ்சொல்லுவர்சொற்சுவைசேர்
இன்னசந்தக்கவியேதென்றபோதிலெதிர்த்தவரை
வன்னசந்தங்கெடவாயைக்கிழித்திந்தவாய்ச்சியினாற்
கன்னசந்தங்களினிற்கவியாப்பைக்கடாவுவனே. 26

## தட்டான்

திகிரிவட்டக்குடைச்செங்கோலபயன்செழுஞ்சிலம்பிற்
பகுதியொட்டக்கூத்தபட்டனைநானப்பணைக்கவியின்
மிகுதவொட்டத்தட்டிவிட்டகையோட்டிலுருக்கிக்குத்திப்
புகுதவொட்டித்தட்டிமேலனுகாவண்ணம்போர்செய்வனே. 27

## ஒட்டக்கூத்தனும் புகழேந்தியும்

வென்றிவளவன்விறல்வேந்தர்தம்பிரான்
என்றுமுதுகுக்கிடான்கவசம்- துன்றும்
வெறியார்தொடைகமழுமீனவர்கோன்கைவேல்
எறியான்புறங்கொடுக்கினென்று. 28

பழியும்புகழுமெவர்க்குமுண்டாமிந்தப்பாரிலுனக்
கழியுஞ்சிலையுக்கயலுமென்றுலகளங்கதுங்கா
மொழியும்பொழுதெங்கள்பெண்சக்ரவர்த்திமுகத்திரண்டு
விழியும்புருவமுமாகியந்தோவுனைவெல்கின்றவே. 29

திக்குளெட்டுக்கயந்துக்கமுற்றுதிடுக்கிட்டலற
மைக்கடற்குட்சரந்தைக்கவிட்டோர்க்கிடமாமதுர
இக்குமுற்றிக்கணுச்சற்றுவிட்டுத்தெறித்திட்டமுத்தைக்
கொக்குமொக்கிவிக்கிக்கக்குமச்சோலைக்குறுங்குடியே. 30

ஆக செய்யுள்-345.

---

# கவி. வீரராகவமுதலியார்

தேன்பொழிந்தவாயான்றிருவேங்கடத்துடனே
ஏன்பிறந்தான்கண்ணனுக்கினியானே-வான்சிறந்த
சிதேவியாருடனேசெய்யதிருப்பாற்கடலில்
மூதேவியேன்பிறந்தாள்முன். 1

இம்பர்வானெல்லையிராமனையேபாடி
என்கொணர்ந்தாய்பாணனீயென்றாள்பாணி
வம்பதாங்களபமென்றேன்பூசுமென்றாள்
மாதங்கமென்றேன்யாம்வாழ்ந்தேமென்றாள்
பம்புசீர்வேழமென்றேன்றின்னுமென்றாள்
பகடென்றேனுழுமென்றாள்பழனந்தன்னைக்
கம்பமாவென்றேனற்களியாமென்றாள்
கைம்மாவென்றேன்சும்மாகலங்கினளே. 2

இல்லெனுஞ்சொல்லறியாதசீகையில்வாழ்
தானனைப்போயாழ்ப்பாணன்யான்
பல்லைவிரித்திரந்தக்கால்வெண்சோறும்
பழந்தூசும்பாலியாமற்
கொல்லநினைந்தேதனதுநால்வாயைப்
பரிசென்றுகொடுத்தான்பார்க்குள்
தொல்லையெனதொருவாய்க்குநால்வாய்க்கு
மிரையெங்கேதரப்புவேனே. 3

முன்னாளிருவர்க்கும்யாக்கையொன்றாகமுயங்கினமால்
பின்னாட்பிரியன்பிரியையென்றாயினம்பேசலுறும்
இந்நாட்கொழுநன்மனைவியென்றாயினமின்னமுமோர்
சின்னாளிலெப்படியோவையநீயின்றுசெப்புகவே. 4

வாழுமிலங்கைக்கோமானில்லைமானில்லை
எழுமராமரமோவீங்கில்லை-ஆழி
அலையடைத்தசெங்கையபிராமாவின்று
சிலையெடுத்தவாறெமக்குச்செப்பு. 5

செஞ்சுடரின்மைந்தனையுந்தென்னிலங்கைவேந்தனையும்
பஞ்சவரிற்பார்த்தனையும்பாராதே-விஞ்சு
விரதமேபூண்டிந்தமேதினியையாண்ட
பரதனையும்ராமனையும்பார். 6

வடவைக்கனலைப்பிழிந்துகொண்டுமற்றுமொருகால்வடித்தெடுத்து
வாடைத்துருத்திவைத்தூதிமறுகக்காய்ச்சிக்குழம்புசெய்து
புடவிக்கயவர்தமைப்பாடிப்பரிசுபெறாமற்றிரும்பிவரும்
புலவர்மனம்போல்சுடுநெருப்பைபுழுகென்றிறைத்தாற்பொறாப்
அடவிக்கதலிப்பசுங்குருத்தைநச்சுக்குழலென்றஞ்சியஞ்சி [பாளோ
அஞ்சொற்கிளிகள்பஞ்சரம்விட்டகலாநிற்குமகளங்கா
திடமுக்கடவாரணமுகைத்ததேவேதேவசிங்கமே
திக்குவிசயஞ்செலுத்திவருசெங்கோனடாத்துமெங்கோனே. 7

மாதரணிமென்முலைதோய்மாராசிதம்பரப்பூ
மாதரணிராசர்மகிழ்மாவசன-மாதர்
மறுகிடத்தேயம்பொன்மடவார்பழிக்கநெஞ்ச
மறுகிடத்தேங்குந்துரைப்பெண்வா. 8

சொல்லுமல்லும்பகலுஞ்சோறுங்கிடைக்குங்
கல்லுமுருகக்கனிந்தாற்றும்-புல்லியனை
விண்கலக்குங்கீர்த்திவேள்சிதம்பரக்குமுணா
பெண்கலக்கங்கொண்டுநின்றன்பேர். 9

வந்தனந்தமென்பூமணந்தோய்ந்துபாயப்பா
வந்தனம்விம்மிச்சோர்ந்தாள்வாகோடி-வந்தனங்கல்
அன்னமனங்கொள்ளாமலாள்சிதம்பரக்குமுணா
அன்னமனங்கொண்டுயவேயாங்கு. 10

மாவாரிமுத்தவெண்பன்மாதுமயலேத்தணிசோ
மாவாரிமுத்தனித்தவைபோகா-மாவுச்
சிதம்பரவையாரீதிக்குளுயர்பூமா
சிதம்பரவையாரீதிக்கு. 11

பங்கஜமேன்மேவியசௌபாக்கியசுபமானளித்த
அங்கஜவேள்வெங்கணையாலாவிநொந்த-எங்களிட
மாரஞ்சிதம்பரவுமாதினையாள்கோடிநமஸ்க்
காரஞ்சிதம்பரயோகா. 12

இன்னங்கலைமகள்கைமீதிற்புத்தகமேந்தியந்தப்
பொன்னம்பலந்தனிற்புக்கிருந்தாளென்னபுண்ணியமோ
கன்னன்களந்தைக்கவிவீரராகவன்கச்சியிலே
தன்னெஞ்சமேடெனக்கற்றுணருமுத்தமிழையுமே. 13

முன்னாட்டுத்தவமுனியுஞ்சேடனும்வான்மீகனுமுன்முன்னில்லாமற்
றென்னாட்டுமலையிடத்தும்பாரிடத்தும்புற்றிடத்துஞ்சென்றுசேர்ந்
இந்நாட்டுப்புலவருனக்கெதிரிலையேகவிவீரராகவாநீ [தார்
பொன்னாட்டுப்புலவருடன்வாதுசெய்யப்போயினையோபுகலுவாயே.

கோளரவேந்துலகிவிந்தப்புதுமையுண்டோவெனமொழிந்தகுமுணுகேளாய்
ஆளரைவர்தமைத்தோய்ந்தகற்புடையபாஞ்சாலியணைந்தவீமன்
வாளரிபோலருகிருக்கமலயவெற்பிலிருந்துவந்தமாமனுரைச்
சாளரவாசலைத்திறந்துவரவழைத்துமுலையாரத்தழுவினளே. 15

பணியாரந்தோசையிலக்கொங்கைதோய்ந்திடப்பார்ப்பர்பல்லி
பணியாரந்தோசையிலாச்செந்துவாய்ப்பிறப்பார்களென்னே
பணியாரந்தோசைமுன்னேனுக்கிட்டேத்திப்பழனிச்செவ்வேள்
பணியாரந்தோசைவராகாரன்னேர்க்கென்னபாவமிதே. 16

வீரஞ்சொரிகின்றபிள்ளாயுனக்குப்பெண்வேண்டுமென்றால்
ஆருங்கொடாருங்களப்பன்கபாலியம்மான்றிருடன்
ஊருஞ்செங்காடுகின்றன்முகம்யானையுனக்கிளையோன்
பேருங்கடம்பனுன்றாய்நீலிநிற்கும்பெருவயிறே. 17

கட்டேச்சோற்றைப்பறிகொடுத்தபோது பாடியது

சீராடையற்றவைரவன்வாகனஞ்சேரவந்து
பாராருநான்முகன்வாகனந்தன்னைமுன்பற்றிக்கௌவி
நாராயணனுயிர்வாகனமாயிற்றுநம்மைமுகம்
பாரான்மைவாகனன்வந்தேவயிற்றினிற்பற்றினனே. 18

(மைவாகனன்-அக்கினிதேவன்.)

பாண்டியன்மாலைகண்டாய்மகளேநினைப்பார்த்தவர்க்கு
வேண்டியவின்பமிகவருமோவெண்ணையேதிருடித்
தாண்டிக்குதித்தநற்கோதண்டராமன்றடவரைமேல்
ஆண்டியிருப்பிடந்தாதனிருப்பிடமானபின்னே. 19

சோலையுங்காத்துநல்லானையுங்காத்துதுரோபதைதன்
தானையுங்காத்தடைந்தானையுங்காத்துத்தடத்தகலி
மானையுங்காத்தனுமானையுங்காத்துமடுவில்விழும்
ஆனையுங்காத்தவனேயெனைக்காப்பதரிதல்லவே. 20

பொய்யருக்குப் பொய்யுரைத்தால் வெற்றியா மவருக்குப்பொய் யாகாத, மெய்யருக்குப் பொய்யுரைத்தாற் றேய்பிறைபோற்றவங் குறையு மிடியுண்டாகும், துய்யதாய்தந்தையர்க்குப் பொய்யுரைத் தால் வறுமைபிணி தொலையாவென்றும், உய்யவருடேசிகற்குப்பொய் யுரைத்தா னரகமது வுண்மைதானே. 21

ஆக செய்யுள்-366.

---

# பொற்களந்தை படிக்காசுத்தம்பிரான்

அடகெடுவாய்பலதொழிலுமிருக்கக்கல்வி
அதிகமென்றேகற்றுவிட்டோமறிவில்லாமல்
திடமுளமோகனமாடக்கழைக்கூத்தாடச்
செப்பிடுவித்தைகளாடத்தெரிந்தோமில்லைத்
தடமுலைவேசையராகப்பிறந்தோமில்லைச்
சனியானதமிழைவிட்டுத்தையலார்தம்
இடமிருந்துதூதுசென்றுபிழைத்தோமில்லை
என்னசென்மமெடுத்துலகிலிரக்கின்றோமே. 1

பெற்றுளொருபிள்ளையென்மனையாட்டியப்பிள்ளைக்குப்பால்
பற்றுதுகஞ்சிகுடிக்குந்தரமல்லபாலிரக்கச்
சிற்றாளுமில்லையிவ்வெல்லாவருத்தமுந்தீரவொரு
கற்றுதரவல்லையோவல்லைமாநகர்க்காளத்தியே. 2

வழிமேல்விழிவைத்துவாடாமலென்மனையாளுமற்றோர்
பழியாமற்பிள்ளையும்பாலென்றழாமற்பகீரெனுஞ்சொல்
மொழியாமலென்னைவரவிட்டபாவிமுசித்துச்சதை
கழியாமலாவளித்தாய்வல்லமாநகர்காளத்தியே. 3

## சீதக்காதிபேரில்

ஓர்தட்டிலேபொன்னுமோர்தட்டிலேநெல்லுமொக்கவிற்குங்
கார்தட்டியபஞ்சகாலத்திலேதங்கள்காரியப்பேர்
ஆர்தட்டினுந்தட்டுவாராமலேயன்னதானத்துக்கு
மார்தட்டியதுரைமால்சீதக்காதிவரோதயனே. 4

நேசித்துவந்தகவிராசர்தங்கட்குநித்தநித்தம்
பூசிக்குநின்கைப்பொருளொன்றுமேமற்றபுல்லர்பொருள்
வேசிக்குஞ்சந்துநடப்பார்க்கும்வேசிக்குவேலைசெய்யுந்
தாசிக்குமாகுங்கண்டாய்சீதக்காதிதயாநிதியே. 5

ஈயாதபுல்லரிருந்தென்னபோயென்னவெட்டிமரம்
காயாதிருந்தென்னகாய்த்துப்பலனென்னகைபரப்பிப்
போயாசகமென்றுரைப்போர்க்குச்செம்பொன்பிடிபிடியாய்
ஓயாமலீபவன்வேள்சீதக்காதியொருவனுமே. 6

காய்ந்துசிவந்ததுசூரியகாந்திகலவியிலே
தோய்ந்துசிவந்ததுமின்னார்நெடுங்கண்கடொல்பலநூல்
ஆய்ந்துசிவந்ததுபாவாணர்நெஞ்சமனுதினமும்
ஈந்துசிவந்ததுமால்சீதக்காதியிருகரமே. 7

தேட்டாளன்காயற்றுறைசீதக்காதிசிறந்தவச்ர
நாட்டான்புகழ்க்கம்பம்நாட்டிவைத்தான்றமிழ்நாவலரை
ஒட்டாண்டியாக்கியவர்கடம்வாயிலொருபிடிமண்
போட்டானவனுமொளித்தான்சமாதிக்குழிபுகுந்தே. 8

வேல்கொடுத்தாய்திருச்செந்தூரர்க்கம்மியின்மீதுவைக்கக்
கால்கொடுத்தாய்நின்மணவாளனுக்குக்கவுணியர்க்குப்
பால்கொடுத்தாய்மதவேளுக்குமூவர்பயப்படச்செங்
கோல்கொடுத்தாயன்னையேயெனக்கேதுங்கொடுத்திலையே. 9

பொல்லாதமூர்க்கருக்கெத்தனைதான்புத்திபோதிக்கினும்
நல்லார்க்குண்டானகுணம்வருமோநடுராத்திரியிற்

சல்லாப்புடவைகுளிர்தாங்குமோபெருஞ்சந்தையினிற்
செல்லாப்பணஞ்செல்லுமோதில்லைவாழுஞ்சிதம்பரனே. 10

மூவேந்தருமற்றுச்சங்கமும்போய்ப்பதின்மூன்றொடெட்டுக்
கோவேந்தருமற்றுமற்றொருவேந்தன்கொடையுமற்றுப்
பாவேந்தர்காற்றிலிலவம்பஞ்சாகப்பறக்கையிலே
தேவேந்திரதாருவொத்தாய்ரகுநாதசெயதுங்கனே. 11

முன்னநின்னன்னைமுலையூட்டிமையிட்டுமூக்குச்சிந்திக்
கன்னமுங்கிள்ளியகாளல்லவேயென்னைக்காப்பதற்கே
அன்னமுமஞ்ஞையும்போலிருபெண்கொண்டவாண்பிள்ளைநீ
இன்னமுஞ்சின்னவன்றானோசெந்தூரிலிருப்பவனே. 12

முற்கரையப்பரையேறவிட்டாட்கொள்முதல்வருள்ளக்
கற்கரைக்கும்படிபோதித்திடுங்கருணைக்கடலைச்
சிற்பரைக்குட்டியையெங்கெங்குந்தித்திக்குஞ்செங்கரும்பின்
சர்க்கரைக்கட்டியைக்கண்டேன்செந்தூரெனுந்தானத்திலே. 13

சின்னஞ்சிறுபிள்ளைசெங்கோட்டுப்பிள்ளைசிவந்தபிள்ளை
பொன்னன்மணிப்பிள்ளைபூலோகமெங்கும்புகழும்பிள்ளை
சொன்னெஞ்சுழல்கின்றசூரனைவென்றசொக்கேசர்பிள்ளை
வன்னக்கிளிப்பிள்ளைசெந்திற்குறத்திக்குமாப்பிள்ளையே. 14

நாட்டிற்சிறந்ததிருமலையாதுங்கநாகரிகா
காட்டில்வனத்திற்றிரிந்துழலாமற்கலைத்தமிழ்தேர்
பாட்டிற்சிறந்தபடிக்காசனென்றொருபைங்கிளியைக்
கூட்டிலடைத்துவைத்தாயிரைதாவென்றுகூப்பிடுதே. 15

விண்ணுக்குமண்ணுக்கும்பேராய்விளங்குதேவேந்திரனென்னுங்
கண்ணுக்கினியதுரைசீதக்காதிகமலநிகர்
தண்ணுக்கிசைந்தவதனசந்த்ரோதயசாமியிந்த
மண்ணுக்குள்ளேயொளித்தான்புலவோர்முகம்வாடியதே. 16

மறந்தாகிலுமரைக்காசுங்கொடாமடமாந்தர்மண்மேல்
இறந்தாவதென்னவிருந்தாவதென்னவிறந்துவிண்போய்ச்
சிறந்தாளுங்காயற்றுரைசீதக்காதிதிரும்பிவந்து
பிறந்தாலொழியப்புலவோர்தமக்குப்பிழைப்பில்லையே. 17

என்னனைக்கன்றுமுத்தனைகுனிக்குமிறையனையனைக்குமேயன்று
மன்னனைக்கன்றிப்பின்னனைக்குதவாவன்புளாய்வருந்திவாடுவனோ

முன்னனைக்கொன்றுபின்னனைப்புரந்தமுதுபகையவன்பிதாவுருமற்
கன்னனைக்கொன்றுவிசயனைப்புரந்தகவுத்துவாகாயலாதிபனே. 18

கல்லடிக்குமுளியிரண்டுகாதடிக்குளடிப்பதெனக்கவிதைகேட்டுப்
பல்லடிக்கக்கிடுகிடெனப்பறையடிக்குநெஞ்சர்தமைப்பாடுவேனோ
வில்லடிக்கும்பிரம்படிக்குங்கல்லடிக்கும்விரும்பிநின்றமெய்யனீன்ற
செல்லடிக்குந்தடவரையிற்சேறடிக்கவலையடிக்குஞ்செந்திலானே. 19

குட்டுதற்கோபிள்ளைப்பாண்டியனிங்கில்லைக்
குறும்பியளவாய்க்காதைக்குடைந்துதோண்டி
எட்டினமட்டறுப்பதற்கோவில்லியில்லை
இரண்டொன்றாய்முடிந்துதலையிறங்கப்போட்டு
வெட்டுதற்கோகவியொட்டக் கூத்தனில்லை
விளையாட்டாக்கவிதைதனைவிரைந்துபாடித்
தெட்டுதற்கோவறிவில்லாத்துரைகளுண்டு
தேசமெங்கும்புலவரெனத்திரியலாமே. 20

சீதக்காதியின்பேரில் தாசிபாடியது

தினங்கொடுக்குங்கொடையானே
தென்காயற்பதியானேசீதக்காதி
இனங்கொடுத்தவுடைமையல்ல
தாய்கொடுத்தவுடைமையல்லவெளியாளாசை
மனங்கொடுத்துமிதழ்கொடுத்துமபிமானந்
தனைக்கொடுத்துமருவிரண்டு
தனங்கொடுத்தவுடைமையெல்லாங்கள்ளர்கையிற்
பறிகொடுத்துத்தவிக்கின்றேனே. 21

ஆக செய்யுள்-387.

---

## சவ்வாதுப்புலவர்



கிளையாளன்சேதுபதிரகுநாயகன்கிஞ்சுகவாய்
இளையார்கலவியிடத்துநம்மீசரிடத்துமென்றும்
வளையாதபொன்முடிசற்றேவளையுமகுடமன்னர்
தளையாடியகையிற்காளாஞ்சியேந்துஞ்சமயத்துமே. 1

பானுகிரணம்பார்க்கும்பங்கேருகநிலவு
தானும்வரப்பார்க்குஞ்சகோரங்கள்-வானமரும்
மையைப்பார்க்கும்மயில்கண்மாவிசயானந்தரங்கன்
கையைப்பார்க்கும்புலவோர்கண். 2

பாலையிலாள்பின்னங்காற்பஞ்சுளியென்றேசுளிப்பாள்
பாலையிலாள்பின்னென்படுவாளோ-சோலையிலே
ஆடுமயிற்பிரம்பூரானந்தரங்கதுரை
நாடுதனிலென்னிளமின்னுள். (பஞ்சு-உளியென்றுகோபிப்பாள்) 3

அலையான்கவடுபடானுருடனுங்காயான்
இலையென்பதோர்நாளுமில்லை-கலைதேர்ந்த
சாலைமுத்துகிருஷ்ணனருள்சற்குணசிந்தாமணியைச்
சோலையென்றுசொன்னவராற்சொல். 4

செல்லப்பன்கச்சியிலேசேர்ந்ததற்பினுமணிகள்
நல்லதருமேகநவநிதியம்-சொல்லவே
முட்டின்றியொன்றிரண்டுமூன்றுநான்கைந்தாறேழ்
எட்டொன்பான்பத்தானவே. 5

கச்சிச்செல்லப்பன்றோன்றினபின் அவனோடுசேர்ந்து ஆ-ஒன்று இரண்டாயின மணி - மூன்று நான்காயின, தரு - ஐந்து ஆறாயின, மேகம்-ஏழு எட்டாயின. நிதியம் ஒன்பது பத்தாயின.

ஆக செய்யுள்-392.

---

# காளிமுத்துப்புலவர்

நெல்லைச்சொன்னுபரணத்தைக்கைம்மாவைநிதநிதமும்
வெல்லச்சொன்னுலவர்க்கியுங் குழந்தைவிசயநின்பாற்
செல்லச்சொன்னுளென்னையிப்போதென்மையலைத்தீர்த்திடென்று
சொல்லச்சொன்னுளந்தமின்னுள்பன்னுண்மலர்ச்சோலையிலே. 1

பழுத்தான்மரத்திற்பறவையைப்போலநற்பாவலர்க்குக்
கொழுத்தான்வழங்குங்குழந்தையென்கொங்கையைக்கூருகிரால்
அழுத்தாதவேளையில்வெந்நீர்பன்னீர்மதியும்மழல்சேர்
கொழுத்தான்மதனுங்கொழுத்தான்பருவக்குறிப்பறிந்தே. 2

பொன்னார்மருமத்தன்பூம்பாவைவேலப்பபூபனருள்
மன்னாகுழந்தைக்குருநாதநீதவரோதயனே
பன்னாண்மலர்க்குழற்பின்னாளென்னாளும்பரிந்தணைய
நன்னாளிந்நாள்வரச்சொன்னாண்மின்னாண்மணநாளென்னவே. 3

மாகமழைக்கரன்பூம்பாவைவேலப்பன்மைந்தன்மின்னார்
மோகன்குழந்தைக்குருநாதன்வெற்பினின்மோடிவைத்துப்
பாகமொழிக்குழன்மாதேவிரித்துப்படமெடுக்கும்
நாகமறைத்துக்குழனமக்கீதனலமல்லவே. 4

போதத்தைமேவுமயிலைக்குழந்தைக்குப்போர்மதன்செய்
கேதத்தையுங்குயினாதத்தையுந்தனக்கிண்ணத்தினால்
மோதத்தையுந்துயிலாதத்தையும்மயன்மூட்டுதென்றல்
வாதத்தையுந்தரியாதத்தையுஞ்சொல்லிவாதத்தையே. 5

வண்டாங்கிசைபயின்மாலையன்வேலப்பன்மைந்தனிதி
கொண்டான்கிளையைவளர்த்தான்குழந்தைக்குவட்டின்மின்னே
பண்டாங்கிசையினண்மால்கொண்டுபாம்பன்குளத்தினடுக்
கண்டாங்கியைக்கிழித்தாலென்னபாவங்கருதுவதே. 6

பாம்பன்-அரவாபரணன். குளத்தினடுக்கண் - நெற்றிக்கண்ணாகிய அக்கினி. தாங்கி-அவன்வாகனமாகிய ஆடு.

வனக்குந்தளவஞ்சிபூஞ்சோலைத்தஞ்சிவளருமிரு
தனக்குன்றுசெய்யுந்தொழில்சொல்லவோதமியேனைக்கண்டாற்
கனக்கும்புளகிக்கும்பாரிக்கும்பூரிக்குங்கண்கழுக்குஞ்
சினக்குந்தனக்குமெனக்குமுண்டாக்குந்தினஞ்சண்டையே. 7

ஆக செய்யுள்-399.

---

# பாண்டியன் கலித்துறை

சரராஜசம்புவைரியென்மாதுசரீரமெல்லாம்
பொரராசரத்துக்கிவள்பொருட்டோபசும்பொற்கிரண
சுரராசதிவ்யகிரீடவிபாடத்துடித்தடக்கைப்
பரராஜராவணராமாபராக்கிரமபாண்டியனே. 1

காளைமுகிற்குலமெல்லாம்விலங்குகடிந்திட்டநீ
வேளையுமப்படிச்செய்திலையேவிளைநெல்வயலில்
வாளைகுதித்துவளர்பூங்கமுகின்மடலொடியப்
பாளைமுறிக்குந்துறைவாபராக்ரமபாண்டியனே. 2

ஆர்க்குங்குளிருநிலவுயர்கோனின்னலங்கல்பெரு
வார்க்குங்குமமுலையாட்கனலாகும்வடக்குந்தெற்கும்
மேற்குங்கிழக்குமொருவெளுப்பாய்நின்றுவிண்ணையெட்டிப்
பார்க்கும்புகழுக்கிறைவாபராக்ரமபாண்டியனே. 3

கூரம்பொறுத்தவிழியாள்கதலிக்குருத்திலிட்ட
ஈரம்பொறுக்கவறிந்திலளேயிந்திரனிட்டசெம்பொன்
ஆரம்பொறுத்தபுயமீதிலாயிரநாவுரக
பாரம்பொறுத்தபுயலேபராக்கிரமபாண்டியனே. 4

வெறிக்குங்குமக்கொங்கைமீதேயிளம்பிறைவெள்ளைநிலா
எறிக்கும்பொழுதுவந்தாயிலையேயிலங்காபுரியைக்
குறிக்கின்றராவணன்பொன்முடிபத்துங்குரங்கைவிட்டுப்
பறிக்கின்றசண்பகமாறுபராக்ரமபாண்டியனே. 5

சுரும்பேய்க்கும்வாட்கண்ணிபங்காளர்கண்கொண்டுசுட்டுவிட்ட
பெரும்பேய்க்குவேப்பிலைக்காப்புதவாய்பிணர்சேர்பசுங்கோங்
கரும்பேய்க்குமென்முலையாரமுதூட்டியடர்ந்துகொல்ல
வரும்பேய்க்குவானுதவுங்குலசேகரமன்னவனே. 6

பூணித்திலத்துப்புயல்வீரமாறன்புகல்கவிக்கு
நாணிப்புலவர்செல்லாதென்செய்வாரிந்தநானிலத்தில்
ஆணிக்கனகமணந்தரிற்பூமணம்யார்கொள்ளுவார்
மாணிக்கந்தித்திக்கிலென்னாகுமற்றமதுரங்களே. 7

எண்ணீர்மைநூலுக்ககத்தியனாமிவனென்பதெல்லாம்
வெண்ணீர்மையன்றிவிரக்கல்லவேயிவ்வியனுலகிற்
பண்ணீர்மைதேரும்பராக்கிரமமாறன்பதங்கழுவுந்
தண்ணீர்குடித்தல்லவோகும்பயோனிதமிழ்கற்றதே. 8

காம்புவனம்புக்கதோளாட்குநின்றன்கழுத்திலிட்ட
வேம்புதனக்கும்விதியில்லையோவெகுண்டாச்சியர்கள்
தாம்பினடிக்கவுரலோடுகட்டத்தடைப்பட்டுச்சிப்
பாம்பினடிக்கின்றமாலேபராக்ரமபாண்டியனே. 9

கடந்தூங்குவேழப்பிடர்க்கேவரக்கண்டுகண்கண்முத்து
வடந்தூங்கவாடும்கிளிக்கென்செய்வேன்மணிவாய்திறக்க
விடந்தூங்குபாம்பின்படத்தின்மிசைதிமித்தித்தியெனப்
படந்தூங்கவாடும்புயலேபராக்கிரமபாண்டியனே. 10

சடம்பழுக்குங்கிழட்டுக்குருகிர்தலைசாய்த்துநின்று
முடம்பழுக்குங்கைதைநற்றுறையிற்றெங்குமுப்புடைக்காய்
குடம்பழுக்குங்கொற்கையாங்குலசேகரன்கூடலிலென்
உடம்பழுக்குஞ்சிறையும்பழிகாரருணர்ந்திலரே. 11

மற்றிருப்பிலாக்கொடைச்சண்பகமாறவரோதயநின்
வெற்றிக்கிரண்டுண்டடங்காதகாரியமேருகிரிச்
சுற்றிலுங்கீர்த்தியடங்காதுநின்னுடைததோடமூவாக்
கற்றைக்குழலிக்குமாலடங்காதிதுகைகண்டதே. 12

விருத்தம்

ஒருவாணுதல்பண்டுளங்களிக்கவுயர்வான்முகடுகிழித்தெழுந்து
மருவார்தருவின்மரங்கொணர்ந்தமதுரைவடிவேலதிவீரா
அரவார்வேம்பின்பசுங்கண்ணியந்தியிறைவிக்கருளென்னு
இரவாதிருக்கநீயளித்தற்கிரங்கார்திருந்தாயிதுநாளே. 13

இரட்டையர்

தேங்குபுகழாங்கூர்சிவனேயல்லாளியப்பா
நாங்கள்பசித்திருக்கைஞாயமோ-போங்காணும்
கூறுசங்குதோன்முரசுகொட்டோசையல்லாமற்
சோறுகண்டமூளியார்சொல். 14

மூடர்முன்னேபாடன்மொழிந்தாலறிவாரோ
ஆடெடுத்ததென்புலியூரம்பலவா-ஆடகப்பொற்
செந்திருவைப்போலணங்கைச்சிங்காரித்தென்னபயன்
அந்தகனேநாயகனுனல். 15

வேயீன்றமுத்தர்தமைவெட்டினனேயிடையன்
தாயீன்றமேனிதயங்கவே-பேயாகேள்
எத்தனைநாளென்றேயிடறுவான்பாற்குடத்தை
அத்தனையும்வேண்டுமவர்க்கு. 16

மாங்காட்டுவேளான்மகளைமருமகன்பாற்
போங்காட்டிலின்பம்புணர்ந்தானே-ஆங்காணும்

மக்கண்மெய்தீண்ட லுடற்கின்பமற்றவர்
சொற்கேட்டலின்பஞ்செவிக்கு. 17

குன்றுங்குழியுங்குறுகிவழிநடப்ப
தென்றுவிடியுமெமக்கென்கோவே-ஒன்றுங்
கொடாதானைக்கோவென்றுங்காவென்றுங்கூறில்
இடாதோநமக்கிவ்விடி. 18

காளமேகப்புலவரும் இரட்டையரும்

நாணென்றானஞ்சிருக்குநற்சாபங்கற்சாபம்
பாணந்தான்மண்டின்றபாணமே-தாணுவே
சீராளூர்மேவுஞ்சிவனேநீயெப்படியோ
நேரார்புரமெரித்தநேர். 19

ஆசுகவியாலகிலவுலகெங்கும்
வீசுபுகழ்க்காளமேகமே-பூசுரா
விண்கொண்டசெந்தணலாய்வேகுதேதையையோ
மண்டின்றபாணமென்றவாய். 20

கட்டளைக்கலித்துறை

புராதனமானதமிழ்ப்புலவீரிந்தப்புன்குரங்கு
மராமரம்விட்டிங்குவந்தெதன்னேவகைகேட்டிலையோ
தராதலம்வென்றதமிழ்மாறனையுந்தன்றம்பியையும்
இராகவனென்றுமிலக்குவனென்றுமிருந்ததுவே. 21

ஆக செய்யுள்-420.

---

# ஒப்பிலாமணிப்புலவர்

அகவல்

ஆடெரிபடர்ந்தகோடுயரடுப்பில்
ஆம்பிபூப்பத்தீம்பசியுழல
இல்லிதூர்ந்தபொல்லாவறுமுலை
சுவைதொறுஞ்சுவைதொறும்பால்காணமற்
குழவிதாய்முகநோக்க
மனைவியென்முகநோக்கயாமும்
நின்முகநோக்கிவந்தனங்குமுண. 1

குமுணராஜன்

அந்தநாள்வந்திலையருங்கவிப்புலவோய்
இந்தநாள்வந்துநீநொந்தெனையடைந்தாய்
தலைதனைக்கொடுபோய்த்தம்பிகைக்கொடுத்தநன்
விலைதனைப்பெற்றுன்வெறுமைநோய்களையே. 2

மாங்குயிலேவாழுமகுடத்தியாகியுனக்
கேந்துதழும்போவிரண்டுளதே-வேந்தர்
முடித்தழும்புன்காலிலேமுத்தமிழோர்க்கீயும்
படித்தழும்புன்கையிலேபார். 3

வெம்புங்காலைவெதும்பிவிழுஞ்சிரம்
செம்பொன்கோடிவிலையெனச்சிந்தித்தான்
உம்பர்நாடுமுலகினுந்தேடினும்
எம்பிபோலெமக்கியாவருரியரே. 4

ஆறுபெருக்கற்றருந்திடான்பட்டாலும்
ஊறலமையாதோவுலகாற்றத்-தேற
வறியையேயானுமென்கலியைமாற்றச்
சிறியையோசீர்க்குமுணசெப்பு. 5

வில்லைவளையாதேமீசைமுறுக்கிச்சினத்து
முல்லைமலரம்பையென்மேன்மோதாதே-நில்லடா
வந்தாரடாமுருகர்வந்துகடப்பந்தாரைத்
தந்தாரடாமன்மதா. 6

செந்திற்குமாரன்றிருவழகைக்கண்டவுடன்
வந்திக்குமாரன்வதைக்கிறான்-அந்திக்கு
முன்னமேசென்றெனதுமோகமெலாஞ்சொல்லிவந்தால்
அன்னமேகும்பிடுவேன்யான். 7

தங்கடனமிருக்கத்தார்வேந்தரெல்லோரும்
எங்கடனத்துக்கேயிச்சிப்பார்-எங்கடனம்
கச்சிருக்கும்பாலிருக்குங்காமபாணங்கள்பட்டுப்
பிச்சிருக்கும்வேண்டாம்பிளாய். 8

இடுவோர்சிறிதிங்கிரப்போர்பெரிது
கெடுவாய்நமனேகெடுவாய்-படுபாவி
கூவத்துநாரணனைக்கொன்றாயேகற்பகப்பூங்
காவெட்டலாமோகரிக்கு. 9

மையூருங்கண்ணார்மயங்கப்பொருகரும்பு
கையூருங்காமாவுன்கண்ணாணை-செய்யூர்
வளவனையினான்பிரிந்தவாறுனக்குச்சொன்ன
உளவனையினானென்றுரை (வளவன்-நயினான்) 10

ஆழிவாய்ச்சத்தமடங்காதோயான்வளர்த்த
கோழிவாய்மண்கூறுகொண்டதோ-ஊழி
திரண்டதோகங்குறினகரனுந்தேரும்
உருண்டதோபாதாளத்துள். 11

அரவங்கரந்ததோவச்சுமரமிற்றுப்
புரவிக்கயிறுருவிப்போச்சோ-இரவிதான்
செத்தானோவில்லையோதீவினையோபாங்கியெனக்
கெத்தால்விடியுமிரா. 12

முலையுங்குழலுமுளைப்பதற்குமுன்னே
கலையும்வளையுங்கழன்றாள்-மலையில்
சிராப்பளியானேறிவருஞ்சேவின்மணியோசைக்
கிராப்பளியுங்கொள்ளாளிவள். 13

பாண்டியன்றாரானேன்பசலைமுலைப்பாலானேன்
ஆண்டிகையிலேந்தியதொன்றானேனே-வேண்டியபோ
துள்ளங்கைத்தேனானேனோர்மதலைபூத்தபின்
புள்ளங்கைத்தேனானுனக்கு. 14

முட்டத்துப்பன்றிமுளரித்திருப்பதத்தைக்
கிட்டத்துப்பன்றிக்கிடந்தேனே-தொட்டு
மருங்கிலேசங்கெடுத்தமாலேயெனக்கு
வருங்கிலேசங்கெடுக்கவா. 15

மாதர்க்கிதங்கவிவாணர்க்குச்சாலவணக்கங்குரு
நாதர்க்குநீதியோடாசாரநண்பினயந்தவர்க்குக்
கோதற்றவாசகம்பொய்க்குப்பொய்கோளுக்குக்கோளறிவி
லாதர்க்கிரட்டியறிவுடையோர்செய்யுமாண்மைகளே. 16

குழற்காலரவிந்தங்கூம்பக்குமுதமுகையவிழ
நிழற்கான்மதியமன்றோநின்றிருக்குலநீயவன்றன்
அழற்காலவிர்சடைமீதேயிருந்துமவ்வந்திவண்ணன்
கழற்கால்வணங்குதியோவணங்காமுடிக்கைதவனே. 17

பாட்டானதைவண்டுபாடுங்குழற்சண்பகவல்லிதன்
ருட்டாமரையைத்தொழுதேனினியென் றலையில்விதி
தீட்டான்கருமுகில்போலேவருமந்தச்சேட்டெ ருமை
மாட்டானினிவரமாட்டான்வந்தாலும்வணங்குவனே. 18

சீமானுநாமகள்கோமானுமேத்தித்தினம்பணிந்து
பூமாலைசாத்தியரத்னசபாபதிபொன்னடிக்குப்
பாமாலைசாத்திநின்றேனவனுன்மிகப்பாடுபட்ட
ஏமாவுன்னுலினியாமாவென்பாலினியெய்துதற்கே. 19

தடங்கொண்டகல்வில்லின்மெல்லெனப்பூட்டித்தமதுரத்தில்
வடங்கொண்டுசாத்திவிடங்கொண்டுபார்த்துமணிகிளரும்
படங்கொண்டபாம்பிற்பழகியபின்மலைப்பாவைதன்னை
இடங்கொண்டவொற்றித்தியாகேசர்புற்றினிடங்கொண்டதே. 20

விடங்காட்டிக்கண்டத்திற்றேலுரிகாட்டித்தன்மெய்யினைப்புற்
றிடங்காட்டிவாலையொருபுறங்காட்டிவண்டேறுமலர்த்
தடங்காட்டியபொழிலாரூர்த்தியாகர்தமதுபொற்றுட்
படங்காட்டியாடிநின்றருலகேழும்பணியென்னவே. 21

புரந்தனைமாலைச்சதுரானனத்தனைப்போகியைமுப்
புரந்தனைச்சாதித்திமையாதநாட்டப்புலோமசைவாழ்
புரந்தனைமானுந்திருவொற்றியூரநின்பொன்மணிக்கோ
புரந்தனைக்கண்டனன்காணேனுதிக்கும்புரந்தனையே. 22

வெண்பா

நல்லம்புலியணிந்தோனுளதனுக்கெட்டாநாள்
வில்லம்புடன்கூடிவிட்டாலும்-வல்லி
இடையாளேமுன்னுலகமேழளந்தோன்மைந்தன்
குடையானதன்றேகொடிது. 23

அம்புலியணிந்தோனுள் - ஆதிரை. எட்டாநாள்-அத்தம், கை. வில்-புருவம். அம்பு-கண்.

வாழ்நிலைசேர்பொன்னுலகம்வண்களந்தைக்கோபுரத்தின்
ஏழ்நிலைமேலேறிடினுமேறலாம்-பாழ்மனமே
அன்புன்னைக்காட்டவரனறிவதேயருமை
தென்புன்னைக்காட்டனடிசேர். 24

கஞ்சிகுடியாளேகம்பஞ்சோறுண்ணாளே
வெஞ்சினங்களென்றும்விரும்பாளே-நெஞ்சதனில்
அஞ்சுதலையாவாருக்காறுதலையாவாளே
கஞ்சமுகக்காமாட்சிகாண். 25

சீதாரவிந்தைபுயன்றென்னவன்றன்றிண்சிலம்பிற்
போதாலுங்கண்ணாலும்போர்செய்வோர்க்-கோதும்
கொடியிடையார்தம்மாற்குணமாமோவிந்தத்
துடியிடையார்கொண்டதுயர். 26

போதாற்போர் செய்வான் - மன்மதன். கண்ணாற்போர் செய்வான்-பரமசிவன். இவர்கள்கொடி-மீனம், இடபம். இவற்றிடையிலுள்ளது-மேஷம் ஆடு.

அப்பிலேதோய்த்திட்டடுத்தடுத்துநாமதனைத்
தப்பினானம்மையதுதப்பாதோ-இப்புவியில்
இக்கலிங்கம்போனாலென்னேகலிங்கமாமதுரைச்
சொக்கலிங்கந்தானிருக்கச்சொல். 27

ஆக செய்யுள்-446.

---

## பட்டினத்துப் பிள்ளையார்

நாப்பிளக்கப்பொய்யுரைத்துநவநிதியந்தேடி
நலமொன்றுமறியாதநாரியரைக்கூடிப்
பூப்பிளக்கவெழுகின்றபுற்றீசல்போலப்
புலபுலெனக்கலகலெனப்புதல்வர்களைப்பெறுவீர்
காப்பதற்கும்வகையறியீர்கைவிடவுமாட்டீர்
கவட்டுத்தொன்மரத்திடுக்கிற்கானுழைத்துக்கொண்டே
ஆப்பதனைப்பிடித்தசைத்தபேய்க்குரங்குபோல
அகப்பட்டீர்கிடந்துழலவகப்பட்டீர்நீரே. 1

## சிவப்பிரகாச சுவாமிகள்

ஐயநின்சென்னிமிசை யுறைகின்றமடமங்கையாரென்ன வுமை வினவவும், அன்னதொருமடமங்கையன்று வெண்டிரைகொழித்தழகொழுகுதண்புனலெனத், துய்யவொளியானனங் கரியவிழிகாதுவாய்

தோயத்திலுண்டோவெனச், சொல்லருங்கமலமலர் காவிமலர்கொடி வள்ளை தூயசெங்குமுதமென்னப், பொய்யெனநினைத்து நற்கொங்கையுங் கூந்தலும்புனலிடை யுண்டோவெனப், புற்புதஞ்சைவலமதெனவேமறுத்துப் புகன்றிடுதிநங்காயெனத், தையலவளேனென்ன நாணொடுவணங்கியென்றன் பிழைபொறுத்திடென்றே, சங்கரனுரைத்திடத் திருவுளமகிழ்ந்தசிவ சங்கரியுமைக்காக்கவே. 2

அரனவனிடத்திலே யைங்கரன்வந்துதானையவென் செவியை மிகவும், அறுமுகன்கிள்ளினனென்றேசினுங்கிடவு மத்தன்வேலவனை நோக்கி, விரைவுடன்வினவவேயண்ணனென் சென்னியில்விளங்கு கண்ணெண்ணினனென, வெம்பிடும்பிள்ளையைப் பார்த்துநீயப்படி விகடமேன்செய்தாயென, மருவுமென்கைந்நீள முழமளந்தானென்ன மயிலவனகைத்துநிற்க, மலையரையனுதவவரு முமையவளைநோக்கிநின் மைந்தரைப்பாராயெனக், கருதரியகடலாடை யுலகுபலவண்டங்கருப் பமாய்ப்பெற்றகன்னி, கணபதியையருகழைத் தகமகிழ்வுகொண்டனள் களிப்புடனுமைக்காக்கவே. 3

அம்பிகையரன்றன்னை நோக்கியுன்னுபரண மரவமெனவுமையை நோக்கி, அரியரவசயனத்தையரவுருவமானத்தை யறியாய்கொல்சிறிதுமென்ன, நம்பிமனைதொறுமிரந்துணுமாண்டிநீயென்ன நான்முதனறிவேனென, நவையுறும்பொய்புகன்றீரெனப்பாரத நடந்ததேகரியாமென, வெம்பியொருவன்பிரம்பாலடித்தானென விளங்கிழையொருத்திதாம்பால், வீசினதுசொல்லென்ன வெண்ணுபிரம்பெண்கள்மிகு கற்பை நீக்கினையெனப், பம்புகற்பினிலோ ரிரட்டிப்புநீக்கினது பதருமனீகேளெனப், பரமருடனிவ்வாறு விளையாடுபச்சைப் பசுங்கொடியுமைக்காக்கவே. 4

அச்சுதனளிப்பனிலமுமதுநேயன் வித்தையருளுவன் பலபத்திரன், அலமுதவுவன்சமன்பகடீவனந்த மக்காளதோரெருதுமுண்டே, முச்சிரவயிற்படையினைக் கொழுவதாக்குவோ மொய்ம்புடனிழுத்திறுக்க, முந்தியவடக்கயிற்றுடன்மற்று நமதன்பர்முன்போ யிரந்துகொள்வோம், இச்சையுடைநமதிளையதனையனுகிய கந்தனினிமையொடு மாடுமேய்ப்பன், இனியுழுதுபயிரிடுதனன்று நன்றிதைவிட்டிரந்துண் பதீனமெனவே, கச்சுமுலைமாதுமை யுரைத்திடும்புத்தியைக் கைக்கொண்டுளத்திலிதுநற், காரியமெனக்கருதி மெத்தக்களித்திடுங் கண்ணுதலுமைக்காக்கவே. 5

கவுரிகமலாயரனிரந்தசோறிதுவெனக் கமலைமண்கண்டேனெனக் காளையொன்றே யரற்கென மாடுமேய்த்ததைக் கட்டிடையனோ வெனச், சிவனொருவர் தூதென்னவத்தூதுசென்றகதை செப்பி லொரு பாரதமெனச், சேரோடுதிருடினா னரனெனக்கட்டுண்ட செய்திநாமறிவோமென, அவையினடமாடினா னரனென்ன வவ்வாட லரவமறியாதோவென, ஆலமதையுண்டனனரனென்ன மண்ணுண்ட வதனை யறியோமோவென, விவரமொடு மலைமகளு மலர்மகளு மிவ்வாறு விளையாடுமிவர்கடுணையா, மேவிவருபுத்ர மித்திரகளத்திரருடன் மேன்மேலு மிகவாழியே. 6

நிறையவுளதோவெளிதோகொளுவோம்
பிறையைமுடிக்கணிந்தபெம்மான்-உறையும்
திருக்காட்டுப்பள்ளிதிரிபாவாய்நீயிங்
கிருக்காட்டுப்பள்ளியெமக்கு. 7

அடுத்துவருந்தொண்டனுக்காவந்தகனைத்தாளால்
அடர்ந்ததுவுஞ்சத்தியமேயானால்-எடுத்ததொரு
மாங்கனிக்காவென்னைமடிபிடித்தமாபாவி
சாங்கனிக்காதித்தன்வரத்தான். 8

குடக்கோடுவானெயிறுகொண்டார்க்குக்கேழன்
முடக்கோடுமுன்னமணிவார்க்கு-வடக்கோடு
தேருடையான்றெவ்வுக்குத்தில்லைதோன்மேற்கொள்ளல்
ஊருடையானென்னுமுலகு. 9

விருத்தம்

சேய்கொண்டாருக்கமலச்செம்மனுடனேயரவப்
பாய்கொண்டானும்பணியும்பட்டீச்சுரத்தானே
நோய்கொண்டாலுங்கொளலாம்நூறுவயதாமளவும்.
பேய்கொண்டாலுங்கொளலாம்பெண்கொள்ளலாகாதே. 10

நிட்டையிலே யிருந்துமனத்துறவடைந்த பெரியோர்க ணிமலன் றாளைக், கிட்டையிலேதொடுத்து முத்திபெறுமளவும் பெரியசுகங் கிடைக்குங்காம, வெட்டையிலே மதிமயங்கிச்சிறுவருக்கு மணம் பேசி விரும்பித்தாலி, கட்டையிலே தொடுத்துநடுக்கட்டையிலே கிடத்துமட்டுங் கவலைதானே. 11

திருந்துதமி ழிலக்கணவைந்திணைக்கோவை விருத்தகிரிச் செல்வற்கோதும், பெருந்தகைமையுடையம்யாம் விடுமோலை வெங்கனூர்ப்பிடாரிகாண்க, இரும்புவியிலொரு முருங்கைக் கொம்பொடியாமற் காத்திங்கிருக்குநேம், முருங்கைதனை வேரோடுங்களைந்தனையென்று லுனக்குமுறைநன்றுமோ 12

முன்னமொருதமிழ்ப்புலவன் றனையுண்டுகண்டசுவைமுதிர்ச்சியாலே
தன்னியலைமுழுதுமுரைத்தமையாமுன்னினைக்கவர்ந்துதடங்காளத்தி
மன்னவனுண்டானெனதுமாதவத்தின்வலிதீரமண்ணின்மீதே
என்னுடன்வந்தவதரித்தவிளங்கருணைப்பிரகாசனென்னுங்கோவே. ()

நாணியென்பதைநாரியென்றுரைத்திடுநசையால்
வேணுவானதுவளைந்துபோய்புகுந்ததுவென்றாற்
காணலாவதோருருவமெய்ந்நாரியைக்கண்டால்
பூணுவார்மயல்காளையரென்பதும்புதிதோ. 14

அல்லிமலர்ப்பண்ணவனுமாராய்ந்தறிகவிதை
சொல்லுமிருவரிடைத்தோன்றியயான்-முல்லை
அரும்பிற்பொலியுமணிமுறுவனல்லாய்
கரும்பிற்கணுநிகர்த்தேன்காண். 15

வேலையசுவாமிகள்

ஆண்டதனுலெனையொவ்வாய் வித்தையினிற்றமையனினு மதிகமென்றே, பூண்டவுலகதனிலுள்ளோர் புகல்வதுகேட்டிருந்து மென்னபுதுமைதானே, காண்டகுகண்மணியே நல்லிளங் கருணைப்பிரகாசக்காளாய்நீதான், மாண்டனையென்றறிந்திருந்து முயிர்தரித்தேன்யானுமிருவன்னெஞ்சேனே. 16

இவர்பிதா

கயல்வாய்த்தகண்ணியுலகீன்றவல்லிபங்காவுனது
செயல்வாய்த்தவன்பர்க்குமல்லாதவர்க்குஞ்சிரிப்பல்லவோ
இயல்வாய்த்தவெந்தைக்கியான்வாய்த்ததுவுமிங்கென்றெனக்கு
வயல்வாய்த்ததுமனைவாய்த்ததுமைந்தர்கள்வாய்த்ததுமே. 17

---

## சத்திமுத்தப்புலவர்

நாராய்நாராய்செங்காலுராய்
பழம்படுபனையின்கிழங்குபிளந்தன்ன

பவளக்கூர்வாய்ச்செங்காலுராய்
நீயுநின்மனைவியுந்தென்றிசைக்குமரியாடி
வடதிசைக்கேகுவீராயின்
எம்மூர்ச்சத்திமுத்தவாவியுட்டங்கி
நனைசுவர்க்கூரைக்கனைகுரற்பல்லி
பாடுபார்த்திருக்குமெம்மனைவியைக்கண்டு
எங்கோன்மாறன்வழுதிகூடலில்
ஆடையின்றிவாடையின்மெலிந்து
கையதுகொண்டுமெய்யதுபொத்திக்
காலதுகொண்டுமேலதுதழீஇப்
பேழையுளிருக்கும்பாம்பெனவுயிர்க்கும்
ஏழையாளனைக்கண்டனமெனுமே. 18

வெறும்புற்கையுமரிதாங்கிள்ளைசோறுமென்வீட்டில்வரும்
எறும்புக்குமாற்பதமில்லைமுன்னாளென்னிருங்கலியாம்
குறும்பைத்தவிர்த்தகுடிதாங்கியைச்சென்றுகூடியபின்
தெறும்புற்கொல்யானைகவளங்கொள்ளாமற்றெவிட்டியதே. 19

வரதுங்கபாண்டியன்

அஞ்சலென்றகரதலமுங்கணபணகங்கணமு
மரைக்கிசைந்தபுலியுடையுமம்புலிச்செஞ்சடையுங்
கஞ்சமலர்ச்சேவடியுங்கனைகழலுஞ்சிலம்புங்
கருணைபொழிதிருமுகமுங்கண்களொருமூன்று
நஞ்சையுண்டமணிமிடறுமுந்நூலுமார்பும்
நலந்திகழ்வெண்ணீற்றொளியுமறிமானுமழுவும்
பஞ்சடிச்சிற்றிடையுமையாளொப்பனைபாகமுமாய்ப்
பால்வண்ணனுளத்திருக்கப்பயமுண்டோவெமக்கே. 20

அவர்மனைவி

ஆக்கையெனும்புழுக்குரம்பையனைந்தனையாப்பொருளை
யருளொளியைப்பராபரத்துக்கப்புறமாமறிவை
நீக்கமறமயிர்முனைக்குமிடமறவெங்கெங்கு
நிறைந்துநின்றமுழுமுதலைநினைவிலெழுஞ்சுடரைப்
பாக்கியங்கள்செய்தனந்தந்தவக்குறைகண்முடிக்கும்
பழவடியார்தமக்குதவும்பசுந்துணர்க்கற்பகத்தை

வாக்குமனவிகற்பத்தாலளவுபடாவொன்றை
மாசற்றவெறுவெளியைமனவெளியிலடைப்பாம். 21

ஆக செய்யுள்-467.

---

## பலபட்டைச்சொக்கநாதப்புலவர்

நின்றுபடியளக்குநீலக்கொடிகளிரண்
டென்றுமுளவாங்குடந்தையீச்சுரருக்-கொன்றுக்
குரைக்குமரையீந்தாரொன்றதனுக்கென்னே
வரைக்குமரையீயாரவர். 1

எடுத்தசனனங்கடொறுமீன்றெடுத்ததாய்மார்
கொடுத்தமுலைப்பாலனைத்துங்கூட்டில்-அடுத்தமணிப்
பைந்நாகணை துயின்மால்பாலாழியுஞ்சிறிதா
மன்னுசிதம்பரதேவா. 2

முக்கண்ணனென்றரனைமுன்னோர்மொழிந்திடுவார்
அக்கண்ணற்குள்ளதரைக்கண்ணே-மிக்க
உமையாள்கண்ணொன்றரைமற்றான்வேடன்கண்ணொன்
றமையுமிதனாலென்றறி. 3

பாணியிலேபுள்ளிமான்பாகத்தேபச்சைமான்
வேணிதனிலேயோர்வெள்ளமான்-காணுமலர்ச்
செம்மானுலவுந்திருமறைக்காட்டீசரே
எம்மானுக்கெங்கேயிடம். 4

கட்டளைக்கலித்துறை

வான்பணிந்தாலவனென்பேயுரைக்குமலரிலயன்
தான்பணிந்தாலவன்றன்றலையேசொல்லுந்தாரணியுண்
பான்பணிந்தாலவன்கண்ணேபரிந்துபரிந்துரைக்கும்
நான்பணிந்தாலெனக்கார்சொல்லுவார்சொக்கநாயகற்கே. 5

மெய்க்கேயணியும்பணியேயென்பேமுடிமேற்கிடந்த
கொக்கேவெண்கூன்பிறையேயரைசேர்ந்தகொடும்புலியே
அக்கேயுமக்குக்கிடைத்தவுபாயங்களாவெமக்குஞ்
சொக்கேசர்பாதத்தைக்கிட்டுமுபாயத்தைச்சொல்லுங்களே. 6

தாண்டித்திரியும்விடையேறியோடொன்றுதாங்கிப்பிச்சை
வேண்டிக்கலியுககாலந்தள்ளாமல்விரும்பிச்சொக்கர்
ஆண்டித்தொழிலைவிட்டையோமதுரைக்கரசிருந்து
பாண்டித்துரைத்தனஞ்செய்தேபிரம்படிபட்டனரே. 7

ஆகத்திலேயொருபாதியென்னம்மைக்களித்தவடன்
பாகத்திலேயொன்றுகொண்டாயவண்மற்றைப்பாதியுமுன்
றேகத்திற்பாதியுஞ்சேர்ந்தாலிருவருண்டேசிவனே
ஏகத்திராமலிருப்பாய்களந்தையுமென்னெஞ்சுமே. 8

துணையானநாரிபுவியையெல்லாம்பெறுந்தொல்லைவடிக்
கணையானதுபுவியெல்லாமெடுத்துண்ணுங்கைச்சிலைகல்
லணையாகநின்றுபுவியினைத்தாங்குமென்றாலினியான்
பணியார்களந்தைப்பதியார்செயலையென்பன்னுவதே. 9

முன்னானைகூப்பிடவோடிவந்தானைமுளரிமலர்ப்
பொன்னானையேறியிருப்பானைப்பூழியன்கைக்கரும்பைத்
தின்னானையென்றுகல்லானைக்கிட்டானைத்திருமதுரை
மன்னானவீதியிலேறிவந்தானைவணங்குதுமே. 10

நமக்கின்றொருவரம்நீர்தரவேண்டும்நலந்திகழ்குங்
குமக்கொங்கைபாகத்துக்கொச்சையுள்ளீர்கொடுங்கோளரவிற்
கிமைக்கும்பிறையையளித்தாலதற்குமிரும்பசிபோ
முமக்குந்தலைச்சுமைபோமெங்கண்மானுமுயிர்பெறுமே. 11

ஆனையுரித்துமதடனைப்போர்த்திட்டடியும்பட்டு
மானமழிந்தங்கிரந்தேதிரிந்தமதுரைச்சொக்கர்
ஞானமிகப்பெற்றுவாழ்வதெல்லாஞ்சொக்கநாயகியாள்
பானைபிடித்தமுகுர்த்தத்தினால்வந்தபாக்கியமே. 12

ஆய்முத்துப்பந்தரின்மெல்லணைமீதுன்னருகிருந்து
நீமுத்தந்தாவென்றவர்கொஞ்சும்வேளையினித்தநித்தம்
வேய்முத்தரோடென்குறைகளெல்லாமெல்லமெல்லச்சொன்னால்
வாய்முத்தஞ்சிந்திவிடுமோநெல்வேலிவடிவன்னையே. 13

குதியானமனையுதைத்துள்ளங்காலினிற்கூனிமிர
மதியாகந்தேய்த்தவ்விலங்கேசன்மாமுடிபத்துநக
நுதியான்மிதித்துமுயலகன்மேனிநறுங்கவின்னு
மிதியாநின்றாலருளெங்கேசொக்கேசர்தம்மெல்லடிக்கே. 14

மண்ணென்றமண்டலமெல்லாம்புரக்கும்வழுதிசற்றுந்
தண்ணென்றநெஞ்சந்தரித்திலனேதனுவேடனெச்சில்
உண்ணென்றபோதுண்டவர்சொக்கர்பாதியுடலம்பச்சைப்
பெண்ணென்றறிந்துமடித்தானெவ்வாறுபிரம்புகொண்டே. 15

இன்றொக்கவேண்டிலெவ்வாறொக்குமோவெழில்சேர்களந்தைக்
குன்றொக்குங்கோபுரங்கோபுரமொக்குமக்குன்றதுபோல்
அன்றொக்கவேண்டுமென்னல்வினைதீவினையாமிரண்டும்
என்றொக்குமோவினித்தென்களக்காடனையான்பெறவே. 16

மாதாம்படியுண்டுமெய்சிவந்தான்குழல்வைத்திசைத்துச்
சேதாம்பலங்கனிவாய்சிவந்தான்செம்மலர்த்திருவின்
சூதாந்தனந்தைத்துரஞ்சிவந்தானவர்தூதுசென்று
பாதாம்புயஞ்சிவந்தான்சிவந்தான்மல்லைப்பல்லவனே. 17

பாடுந்தமிழ்க்குச்சிவந்தெழுந்தான்மல்லைப்பல்லவர்கோன்
காடுஞ்செடியுந்திரியாதிரட்டைக்கடுக்கன்செய்து
போடும்பொழுதென்னபூட்டகமாயற்பப்புல்லரைக்கொண்
டாடும்பொழுதிருகன்னத்திலேன்றடிக்கின்றதே. 18

கான்றெண்டனிட்டகனங்குழலாளையென்கண்மணியைத்
தேன்றொண்டைவாய்ச்சியைத்தென்கூடல்வாழ்சிறுபெண்பிள்ளையை
யான்றெண்டனிட்டபொழுதேயியமனெனக்குமடி
யேன்றெண்டனிட்டவிண்ணப்பமென்றோலையெழுதுவனே. 19

மற்றோரொருவரைக்கண்டதுண்டோசத்தியவாசகராய்
உற்றோர்கழஞ்சுவெண்ணெய்க்கீன்றதாய்க்கொருகோடிபொய்கள்
சொற்றோனுந்தாழைமலர்சாட்சியென்றுசொன்னோனுமல்லால்
கற்றோர்கள்வம்மின்கள்சென்மின்கள்போமின்களந்தையிலே. 20

அண்டத்தமரருமாயனும்வேதனுமந்தணரும்
பண்டெத்தனைதவஞ்செய்தனரோமணப்பந்தலிலே
துண்டப்பிறையணிசொக்கர்கைத்தாலிக்குநீதுணிந்து
கண்டத்தைநீட்டினையேகூடல்வாழுங்கயற்கண்ணியே. 21

அற்பீன்றதாயென்றுனைப்பணிந்தாலென்னவதியெல்லாம்
பொற்பீன்றபூஷணம்போற்குறித்தாய்புகழ்க்கூடலில்வாழ்
கற்பீன்றகட்டிக்கரும்பேயுனக்குக்கன்னெஞ்சதுதான்
வெற்பீன்றவாசனையோவுள்ளவாறுவிளம்பெனக்கே. 22

பேயல்லவோவொருவேளை வரந்தந்துபேசிடுங்கல்
லாயல்லவோநின் மனங்கெட்டியான துமற்புதந்தான்
நீயல்லவோமதுரேசர்பங்குற்றவணீயெனக்குத்
தாயல்லவோபிள்ளைநானல்லவோசிவசாம்பவியே. 23

பண்டோதரியமறைபாடுங்கூடற்பசுங்கிளியைக்
கண்டோதினேனென்கவலையெல்லாமினிக்காலன்றிண்டு
முண்டோதிவந்திடும்போதம்மைகோயின்முன்னே திரியும்
குண்டோதரன்கண்டுகொண்டாற்றுடைதட்டிக்கொள்ளுவனே. 24

செகத்தாயெனவந்ததெள்ளமுதேதென்கைலையெனு
நகத்தார்பணியுங்கயற்கணம்மேநின்னயனத்தினால்
மிகத்தான்கருநிறங்கொண்டமையாலும்விளங்குதிரு
முகத்தாமரைக்கொருவண்டானதுமுத்துமூக்குத்தியே. 25

செகமதின்மிக்கமதுரையின்மாணிக்கஞ்செட்டியதாய்
மிகமதிரத்தினம்விற்றசொக்கேசரைமேவியன்பாச்
சுகமதிதந்தெனையாள்கயற்கண்ணிநின்சுந்தரமா
முகமதியீன்றகதிர்மணியோமுத்துமூக்குத்தியே. 26

பொன்னேமலையத்துசனாகியபுயலீன்றெடுத்த
மின்னேயுனதுவதனத்தையேவெண்மதியமெனத்
தன்னேயத்தாலொருதாரகையானதுதான்விரும்பி
முன்னேகிடந்தினம்பார்க்கின்றதோமுத்துமூக்குத்தியே. 27

வடிகொண்டசெந்தமிழ்க்கூடலில்வாழ்சொக்கர்வந்திதரும்
பிடிகொண்டபிட்டுக்குமண்ணேசுமந்துபெருமகரக்
கொடிகொண்டவெற்றித்துரைப்பாண்டியன்கைக்கொடுபிறம்பால்
அடிகொண்டபோதிலடியாரவர்பொன்னடிகண்டதே. 28

அக்குவடம்புனையானந்தவெள்ளத்தையங்கயற்கண்
பக்கத்திருந்தபவளாசலத்தைப்பழம்பொருளை
முக்கட்கனியைக்கடம்பாடவிக்கண்முளைத்தெழுந்த
சொக்கைக்கண்டாலன்றித்தீராதுநெஞ்சிற்றுயரங்களே. 29

பொன்போலுங்கூடற்பிராட்டியைச்சேவிக்கப்போம்பொழுதில்
என்பால்வரவுமெதிர்நின்றுபேசவுமென்றலைமேல்
தன்பாதஞ்சூட்டவுங்கேட்டதெல்லாந்தந்தருளவுமே
அன்பாகவந்திடுவாள்கலிகாலமென்றஞ்சுவளே. 30

உரையேனுன்பேரையுணரேனின்சீரையுனைக்கருதிக்
கரையேனெவ்வாறுகடப்பேன்வினையைக்கடந்தகுண
வரையேயருட்பெருவாரிதியேமதுராபுரிக்குத்
துரையேயழகியசொக்கேதமிழ்தந்தசுந்தரமே. 31

முக்கட்பராபரைசொக்கப்பிரானெனுமுன்னவனோ
டொக்கச்சிறந்தகயற்கண்ணிசந்நிதியுற்றுமிகச்
செக்கச்சிவந்தபொற்றாமரைப்பாததெரிசனைக்கே
பக்கத்தடுத்தவர்சொர்க்கத்தினையெட்டிப்பார்ப்பவரே. 32

மட்டார்குழலங்கயற்கணம்மேயிம்மட்டென்றுதொகைக்
கெட்டாதெனதுதுயரநின்பாற்சொல்லியேசலிக்க
ஒட்டாரநீசெய்யலாகாதுபாருன்னடிமைதன்னை
நட்டாட்டிற்கைவிட்டிடாதேபழிவெகுநாணிற்குமே. 33

விரித்தான்சடையைமகாமேருவாசுகிவில்லைவிட்டுச்
சிரித்தான்புரத்தையெரித்தான்பரகுருதேசிகன்முன்
உரித்தான்கரியையுடுத்தான்பகிரண்டத்துள்ளுலகும்
பரித்தான்மதுரைதரித்தான்சவுந்தரபாண்டியனே. 34

மைக்காற்குழற்பெண்வடிவாளைத்தென்னவன்மாமகளை
அக்காளையோன்பங்கிலாத்தாளைமாறங்கையானவளைத்
திக்கார்தொழுங்கயற்கண்ணாளையோர்தினஞ்சேவைசெய்தால்
எக்காலமுமவர்சொர்க்காதிபோகத்திருப்பவரே. 35

வண்டிட்டகூந்தலும்வாரிட்டகொங்கைவரைகளுங்கற்
கண்டிட்டசொல்லுங்கயற்கண்ணிபாதமுங்கைதொழுதேன்
தண்டிட்டடிக்குமறலிவந்தாற்சன்னையிட்டுநகைத்
துண்டிட்டுவாசிறுபிள்ளாயென்றாருக்கனுப்புவனே. 36

பொன்னேபொருந்தற்புதமேபொலிந்தமென்பூந்திருவே
தென்னேசிறந்தசெந்தேனேதிருந்தருட்சின்மயமே
அன்னேயமுதேயருளேயமரர்க்கரும்பொருளே
மின்னேவியன்சுடரேமதுராபுரிமீனம்மையே. 37

தேட்டேதுமில்லைகொடுப்பாருமில்லைதிரத்துழவில்
பூட்டேருமில்லையிதெல்லாமெம்பாலில்லைபூர்ணவரம்
கேட்டேனதற்குப்பிறிதில்லையேயினிக்கேட்கவுநான்
மாட்டேனுன்மேற்பழிபோட்டேன்மதுரைமனோன்மணியே. 38

உள்ளக்கவலையெலாம்விள்ளும்போதுமுனதுமனம்
எள்ளத்தனையிரங்காதிருந்தாயெளியேனினிமேல்
தள்ளப்புரத்தினிலென்றாலும்போவதுதானிலைப்பொன்
வள்ளத்தமுதுண்ணுங்கிள்ளாய்கடம்பவனவல்லியே. 39

எப்படியெப்படிச்சொன்னாலுநானிரங்கேனெனவே
அப்படியப்படிநீயிருக்கின்றவதிசயத்தை
இப்படியிப்படியென்றாகிலுமெனக்கேதெரியச்
செப்படிசெப்படியம்மாமதுரைச்சிவாநந்தியே. 40

செப்பத்திலுன்னைத்தொழவாயிரங்கண்ணுஞ்செல்லும்பொல்லேன்
தப்பத்தவறத்தொழுதாலுஞ்சொக்கர்தடம்புயத்துக்
கொப்பத்திரண்டகொங்காயுன்னவயவமொன்றுக்கொன்று
முப்பத்திரண்டுகண்வேண்டுங்கண்டாயென்முகத்தினுக்கே. 41

துடியார்கரத்துமதுரேசரேயும்மைத்துள்ளியசேற்
கொடியானடித்ததுங்குற்றமன்றேகிழக்கோதையிவள்
அடியாளென்றேசுட்டபிட்டையெல்லாமள்ளியள்ளித்தின்று
வடியாநதியிற்கரைத்துவிட்டீரவள்வல்வினையே. 42

காஞ்சொன்னங்கண்டதெங்காளோதொடுத்தகலிக்கெவர்கள்
உரஞ்சொன்னதோவந்திறுத்ததிவ்வேளையுதவுனக்கே
பரஞ்சொன்னேனின்னம்பராமுகமேதிதுபத்துலட்சம்
தரஞ்சொன்னதாயெண்ணுவாய்சிவகாமசவுந்தரியே. 43

ஒருபாதிமால்கொளமற்றொருபாதியுமைய்வள்கொண்
டிருபாதியாலுமிறந்தான்புராரியிருநதியோ
பெருவாரிதியிற்பிறைவானிற்சர்ப்பம்பிலத்திற்கற்ப
தருவானபோஜகொடையுன்கையோடென்கைதந்தனனே. 44

பாலனைப் பழித்தல்

அரும்பாலகாமுனம்பூமணஞ்சொற்பொருளாகமுயிர்
கரும்பாஞ்சுவையெள்ளுமெண்ணெயும்போலொத்தகாதலரைப்
பெரும்பாலிநல்லன்னங்கங்காசலத்தைப்பிரிப்பதுபோல்
சுரும்பாம்புலவர்யமனுலைசெக்கெனத்தோன்றினையே. 45

அரும்பாக்கியகொங்கைபாலாக்கியுமுங்களப்பனெஞ்சை
இரும்பாக்கியென்னெஞ்சைப்பித்தளையாக்கியவ்வேந்திழையைக்

கரும்பாக்கியென்னையும்வேம்பாக்கியிவ்வண்ணங்கண்டனையே
பெரும்பாக்கியமல்லவோமகனேயுனைப்பெற்றதுவே. 46

## கலவிமேற் பிரிதல்

விண்ணுக்குமாமதிகாயவெங்காமவெரிகொளுந்தப்
பண்ணுக்குமாமொழிமாதங்கமாம்பஞ்சபூதியம்போம்
கண்ணுக்குமூக்குச்செவியாக்கைபற்றகடத்திலங்கம்
பெண்ணுக்குவார்தமைப்போலோதிவாரும்பிரிபவரே. 47

உனக்கின்றியான்செய்தகுற்றமொன்றில்லையுனைப்பிரிந்தால்
வனக்குன்றிலேறிவிழவறியேன்வண்மைசேர்மயிலே
எனக்கென்றுவட்டமிட்டண்ணாந்துவிம்மியிருக்குமுன்றன்
தனக்குன்றிலேறிவிழுவேனின்னல்குற்றடாகத்திலே. 48

சுண்ணம்புதீட்டநல்லாள்காட்டமோதிரஞ்சூட்டமலர்க்
கண்ணுரைக்கூட்டவிரனுன்கிருக்கக்கதிர்க்கம்பிபோல்
எண்ணாநடுவிரற்கேதாமுலோபருக்கேதுகண்டாய்
கண்ணார்நுதலண்ணல்சேய்வணிகாசெந்தில்காத்தவனே. 49

நிணம்போதத்தள்ளிப்பெரும்பூதம்போலப்பின்னேற்றுசெத்த
பிணம்போற்கிடந்துபுரளுவர்காண்பிறர்க்கீட்டிவைத்த
பணம்போனபின்புவிவேகமுண்டாகுமப்பஞ்சைகள்வங்
கணம்போதும்போதுங்கறுப்பாதென்மாவையிற்காவலனே. 50

ஏவைக்குங்கூன்சிலைதொட்டானனங்கனிருவிசும்பில்
தீவைக்குந்திங்கட்குடையெடுத்தான்றென்றற்றேருகைத்தான்
காவைக்குங்கண்மணிகஸ்தூரியீன்றகறுப்பன்வரை
மாவைக்கும்பாவைக்கும்பூவைக்கும்போதுவடுவைக்குமே. 51

பொன்னுகத்தார்பணிமாயோன்கரந்தைப்பொறுப்பில்வரும்
மின்னுண்முகங்கண்டனஞ்சாயல்போற்பெறவேண்டியன்றோ
வந்நாட்கமலமலர்கடன்மேருவணிமயிலும்
தன்னுலயனரிசங்கரன்வேலனைத்தாங்கியதே. 52

குண்டைக்கொருத்தனைக்கூத்தாடும்பித்தனைக்குண்டுணியைக்
கண்டக்கருப்பனைப்பிள்ளையைத்தின்னியைக்காணவயன்
மண்டைக்கரத்தனைக்கண்ணப்பனெச்சிலைவாரியுண்ட
பண்டைப்பறையனையோதேவனென்றுபகருவதே. 53

அந்தங்கரும்பள்ளிபாசாங்குசத்திகண்ணம்படைச்சி
நைந்தவிடச்சிகுறத்திக்குமாமிநவில்வலைச்சி
சந்தம்புழுக்கச்சிபாம்பணையோனுக்குத்தங்கச்சியாம்
இந்தப்பறச்சியையோசிவகாமியென்றேத்துவதே. 54

நிலமேழளந்தநெடுமால்பணியுநிமலர்பொன்னம்
பலமேவுதில்லைப்பதிநடராயர்பனிவரையில்
கலமேதிமிங்கலமேசங்கமேநற்கயலினமே
சலமேசலஞ்சலமேயென்றுதீருமென்சஞ்சலமே. 55

பொரடக்கயம்பிடியென்றான்மதனுமிப்பூவையுமா
தரடக்கமுஞ்சற்றறிந்திலளேமலர்த்தாள்வணங்கா
முரடக்கவுடக்கெடிமன்னர்வெற்றிமுடிபிடுங்குங்
கரடக்களிற்றண்ணலேவல்லைமாநகர்க்காளத்தியே. 56

கவியாகுமாதினைப்பெற்றோன்புலவன்கற்றோனையாம்
செவியாரக்கேட்டங்குணர்வான்சகோதரன்செந்தமிழ்க்கு
தவியாவருமையறிவான்பதியவன்றானிலையேல்
புவியாகுமண்ணுக்குளென்பலமாமந்தப்பூங்கொடிக்கே. 57

சேராதவேடன்செருப்பாலடிக்கவுந்தீண்டவுந்தண்
ணீர்வாயுமிழவுமுச்சிட்டம்போடவுநீண்டசிலைத்
தாராலடிக்கவுங்கண்ணீர்ததும்பவுந்தாய்தமர்கள்
ஆராகிலுமில்லையோதிருக்காளத்தியப்பனுக்கே 58

ஒட்டாகவொட்டியுங்காற்பொன்னின்மாப்பொன்னுபாயமதாத்
தெட்டாதிரான்பணிசெய்யாதிரான்செம்பொன்மேருவினைக்
கட்டாகக்கட்டிக்கடுகளவாநிறைகாட்டவல்ல
தட்டானுக்கஞ்சியல்லோவணிந்தான்சிவன்சர்ப்பத்தையே. 59

ஏராட்டும்பூந்தொங்கன்மோகனக்காரற்கினியசுகம்
பாராட்டநானினியாளல்லவேபசுமென்குழவி
தாராட்டவுஞ்சங்கிற்பால்பிள்ளைக்கூட்டித்தடவிமஞ்சள்
நீராட்டமையிடப்போமேயெனக்குள்ளநேரமுமே. 60

## விருத்தம்

மட்டாருந்தென்களந்தைப் படிக்காசனுரைத்ததமிழ் வரைந்த வேட்டைப், பட்டாலேசூழ்ந்தாலு மூவுலகும் பரிமளிக்கும் பரிந்த வேட்டைத், தொட்டாலுங் கைம்மணக்குஞ் சொன்னாலும் வாய்

மணக்குந் துய்யசேற்றில் நட்டாலுந்தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினிட நளினந்தானே. 61

வெண்பா

ஆலெங்கேயங்கேயரும்பறவையாற்றுயிலும்
மாலெங்கேயங்கேமலர்மடந்தை-கோலஞ்சேர்
செங்கைதகைமணக்குஞ்செங்கொன்றையூரனெங்கே
அங்கேயிரவலரெல்லாம். 62

ஊரைச்சுடுமோவுலகந்தனைச்சுடுமோ
ஆரைச்சுடுமோவறியேனே-நேரே
பொருப்புவட்டமானமுலைப்பூவையரேயிந்த
நெருப்புவட்டமானநிலா. 63

நற்றோரணவீதிநண்ணும்வல்லைக்காளத்தி
கற்றோர்தமக்களிக்குங்கையேகை-மற்றோர்கை
வேங்கையலகைமுகைவேட்கைபலகைநகை
காங்கையமுகைவிழுகை. 64

போசநீயோர்புயலாப்பூமுழுதும்பொன்மாரி
வீசுவாயங்கதிலோர்விந்தேனும்-பேசுமென்மேல்
பட்டதிலையென்வறுமைபாரக்குடையாகி
முட்டக்கவித்திடுதலால். 65

காலையரவிந்தங்கழுநீருடன்கலந்தால்
மாலையரவிந்தமயக்காதோ-பாலைப்
பழிக்கின்றமென்மொழியீர்பாண்டியனூருரை
அழிக்கின்றதென்னேவது. 66

(பாண்டியனூர்-கூடல். அது-புணர்ச்சி.)

ஆக செய்யுள் - 533

---

# பொய்யாமொழிப்புலவர்



வாய்த்தவயிரபுரமாகாளியம்மையே
ஆய்த்தமணிலணிவரையிற்-காய்த்த

கதிரைமாளத்தின் னுங்காளிங்கனேறுங்
குதிரைமாளக்கொண்டுபோ. 1

இவருபாத்தியாயர்

பொதியிலகத்தியனுப்பொய்யாமொழியாய்ச்
சிதைவில்புலவர்சிகாமணியாய்த்-துதிசேரும்
செங்காட்டங்கோட்டைத்துறையூரெ னுந்தலத்தில்
தங்காட்டங்கொண்டிருப்பாய்தான். 2

அகவல்

வாழிசோழவென்வாய்மொழிகேண்மோ
ஊழிநிலவெறிமாளிகையின்வயிற்
கட்டிளங்கணவன் கவின்பெருசேக்கை
என்றறிமனைவிநெடிதுதுயில்கொளச்
செல்லக்கிடமினெனக்கிடந்தருகெனைச்
சொல்லியகன்பன்றனிற்செல்பவனே
நானுமேகுவனற்றுணையவற்கே. 3

வெண்பா

அன்றுநீசெல்லக்கிடவென்றாயாயிழையோ
டின்றுநீவா னுலகமேறினாய்-மன்றல்கமழ்
மானெக்கும்வேல்விழியார்மாரனேகண்டியூர்
சீனக்காசெல்லக்கிட. 4

பூவேந்தர்முன்போற்புரப்பாரிலையெனினும்
பாவேந்தருண்டென் னும்பான்மையாற்-கோவேந்தன்
மாறனறியமதுராபுரித்தமிழோர்
வீறணையேசற்றேமித. 5

உங்களிலேயானொருவனெவ்வுவனேவொவ்வேனே
திங்கட்குலனறியச்செப்புங்கள்-சங்கத்தீர்
பாடுகின்றமுத்தமிழ்க்கென்பைந்தமிழுமொக்குமோ
ஏடெழுதாரேழெழுவீரின்று. 6

பொன்போலுங்கள்ளிப்பொறிபறக்குங்கானலிலே
என்பேதைசெல்லற்கியைந்தனளே-மின்போலும்

மானவேன்முட்டைக்குமாறாயதெவ்வர்போங்
கானவேன்முட்டைக்குங்காடு. 7

### முருகக்கடவுள்

விழுந்ததுளியந்தரத்தேவேமென்றும்வீழின்
எழுந்துசுடர்சுடுமென்றேங்கிச்-செழுங்கொண்டல்
பெய்யாதகானகத்திற்பெய்வளையுஞ்சென்றனளே
பொய்யாமொழிப்பகைஞர்போல். 8

### ஔவையார்

ஐம்பொருளுநாற்பொருளுமுப்பொருளும்பெய்தமைத்த
செம்பொருளையெம்மறைக்குஞ்சேட்பொருளைத்-தண்குருகூர்ச்
சேய்மொழியதென்பர்சிலரியானிவ்வுலகில்
தாய்மொழியதென்பேன்றகைந்து. 9

சேய்மொழியோதாய்மொழியோசெப்பிலிரண்டுமொன்றே
வாய்மொழியையாருமறையென்பர்-வாய்மொழிபோல்
ஆய்மொழிகள்சாலவுளவெனினுமம்மொழியுஞ்
சாய்மொழியவென்பேன்றகைந்து. 10

### மதுரைச்சோக்கநாதர்

கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ
பயிலியதுகெழீஇயநட்பின்
மயிலியற்
செறியெயிற்றரிவைகூந்தலின்
நறியவுமுளவோநீயறியும்பூவே. 11

### அகவல்

மதிமலிபுரிசைமாடக்கூடற்
பதிமிசைநிலவும்பாணிறவரிச்சிற
கன்னம்பயில்மொழியாலவாயின்
மன்னியசிவன்யான்மொழிந்திடுமாற்றம்
பருவக்கொண்மூப்படியெனப்பாவலர்க்
கொருமையினுரிமையினுதவியணிதிகழ்
குருமாமணிதிகழ்குலவியகுடைக்கீழ்ச்

செருமாவுகைக்குஞ்சேரலன்காண்க
பண்பால்யாழ்பயில்பாணபத்திரன்
தன்போலென்பாலன்பன்றன்பால்
காண்பதுகருதிப்போந்தனன்
மாண்பொருள்கொடுத்துவரவிடுப்பதுவே. 12

அங்கம்வளர்க்கவரிவாளினெய்தடவிப்
பங்கம்படவிரண்டுகால்பரப்பிச்-சங்கதனைக்
கீர்கீரெனவறுக்குங்கீரனோவென்கவியைப்
பாரிற்பழுதென்பவன். 13

நக்கீரர்

சங்கறுப்பதெங்கள்குலஞ்சங்கரர்க்கங்கேதுகுலம்
பங்கமுறச்சொன்னாற்பழுதாமோ-சங்கை
அரிந்துண்டுவாழ்வோமரனாரைப்போல
இரந்துண்டுவாழ்வோமினி. 14

திருஞானசம்பந்தமூர்த்தி

கடியுண்டநெடுவாளைகராவிற்றப்பிக்
கயத்துக்குளடங்காமல்விசும்பிற்பாய
அடியுண்டவுயர்தெங்கின்பழத்தாற்பூகம்
அலையுண்டுகுலைசிதறுமாவிநாடா
படியுண்டபெருமானைப்பறித்துப்பாடிப்
பதம்பெற்றபெருமானே தமியேன்பெற்ற
கொடியொன்றுநின்பவனிக்கெதிரேசென்று
கும்பிட்டாளுயிரொன்றுங்கொடுவந்தாளே. 15

திருமங்கையாழ்வார்

வருக்கைநறுங்கனிசிதறிச்செந்தேன்பொங்கி
மடுக்கரையிற்குளக்கரையின்மதகிலோடப்
பெருக்கெடுத்துவண்டோலஞ்செய்யுங்காழிப்
பிள்ளையார்சம்பந்தப்பெருமாள்கேளீர்
அருட்குலவுமயிலைதனிலனலால்வெந்த
அங்கத்தைப்பூம்பாவையாக்கினோமென்
றிருக்குமதுதகவன்றுநிலவால்வெந்த
இவளையுமோர்பெண்ணாக்கலியல்புதானே. 16

சேமங்குருகையோசெய்யதிருப்பாற்கடலோ
நாமம்பராங்குசனோநாரணனோ-தாமம்
துளவோவகுளமோதோளிரண்டோநான்கோ
உளவோபெருமானுனக்கு. 17

சங்கத்தார் அகவல்

காலைஞாயிறுகடுங்கதிர்பரப்பி
வேலையுங்குளனும்வெடிபடச்சுவறித்
தந்தைதாய்மக்கண்முகம்பாராமல்
வெந்தசாகமும்வெவ்வேறருந்திக்
குணமுடனுளுங்கொடுத்துறவாண்ட
கணவனைமகளிர்கண்பாராமற்
பழுத்தவுடலம்பசையறவற்றி
விழித்தவிழியெலாம்வேற்றதுவிழியா. 18
அறவுரையன்றிமறவுரைபெருகி
உறவறமொழிந்தவூழிகாலத்தில்
தாயிலார்க்குத்தாயேயாகியும்
தந்தையிலார்க்குத்தந்தையேயாகியும்
இந்தமாநிலத்திடுக்கண்டீர
வந்துதோன்றியமாநிதிக்கிழவன்
நீலஞ்சேரினெடுமாலானுன்
ஆலஞ்செறியினுன்றசடையன்
பிறந்தும்பிறர்கேடுநினையான்
பிறர்பொருள்வவ்வான்
மறந்தும்போகான்வாய்மையுங்குன்றான்
இறந்துபோகாதெம்மையுங்காத்தான்
வருந்தல்வேண்டாம்வழுதி
இருந்தனமிருந்தனமிடர்கெடுத்தனனே. 19

திருமழிசையார்

கணிகண்ணன்போவென்றான்காமருபூங்கச்சி
மணிவண்ணாநீயிங்கிராதே-துணிவுடனே
செந்நாப்புலவன்யான்செல்கின்றேனீயுமுன்றன்
பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள். 20

ஆக செய்யுள்-553.

# சொக்கநாதப்புலவர்



விருத்தம்

சீர்கறுத்த முகிற்காத்தான் கஸ்தூரிபூபனருள் சேயாவென்று, மோர்கறுப்புமில்லாத தொண்டைவளநாட்டிருக்கு முசிதவேளே, ஆர் கறுப்பனென்றுசொல்லி யழைத்தாலுநாமுன்னை யன்பினலே, பேர் கறுப்பனிறஞ்சிவப்பன்கீர்த்தியினல் வெளுப்பனெனப் பேசுவோமே.

பிள்ளைவயதினிற்கல்விகற்றோம்பின்பு
பெரியநரவாகனமும்பெற்றோம்பூமி
உள்ளளவுங்கீர்த்திநிலைநிறுத்திக்கொண்டோம்
ஒருகுறையுமில்லையினியுரைப்பக்கேண்மோ
தெள்ளிலகுசிதம்பரத்தைதெரிசித்தோம்பின்
சேற்கருங்கட்டவளநகைத்தெய்வயானை
வள்ளிபுணர்சிவப்பனையுந்துதித்தோமெங்கள்
மாவைவளர்கறுப்பவுன்னைவாழ்த்தினேமே. 2

எல்லப்பனம்மையப்பன் றருதிருவேங்கட ராமனெழிற் சீரா மன், வல்லக்கொண்டமனுடனே மாவைவெங்கடேசனைப்போல் வரி சைதந்தான், செல்வத்தம்பியருடனே மாவையில்வாழ் கறுப்பண்ணன் றெருவீதிக்கே, பல்லக்குத்தான்சுமந்தானது நமக்கோராயிரம்பொன் பரிசுதானே. 3

மெய்யிலேயொருபாதி யுமைக்களித்த செங்காட்டுவிமலனுரே, மையிலேதோய்ந்த விழிச்சந்தன மான்றலைக்கரியை வளமாயாவி, னெய்யிலேதான்சமைத்துக் கொடுத்திருந்தும் படைத்திருந்து நீர்தா னின்று, கையிலேமழுவெடுத்தாற் பொய்யாமோ பிள்ளைகொன்ற களவுதானே. 4

துப்பரையு மரகதத்தின்கொழுந்தரையு மொன்றாகத்துலங்கு மெய்யா, செப்பரியபுலியதனைத் தரிக்குமுத்தராபதியிற் சிவனே நீதான், அப்பரையும் விழுங்கியொருபிள்ளையுந் தின்றூற்றுமலையோ வின்னுங், கப்பரையுங்கையுமாய்ப் புறப்பட்டாய் நல்லதிருக்காட்சி தானே. 5

அடிபட்டீர்கல்லாலுமெறிபட்டீரத்தனைக்குமாளாயந்தப்
படிபட்டும்போதாமலுதைபட்டீரிப்படியும்படுவாருண்டோ

முடிபட்டசடையுடையீர்கழுக்குன்றீர்முதற்கோணன்முட்டக்கோண
விடிபட்டும்பொறுத்திருந்தீர்சிவசிவாவுமைத்தெய்வமென்னலாமே. 6

செல்லாரும் பொழில்புடைசூழ் புலியூரம்பலவாண தேவாவும் மைக், கல்லாலும்வில்லாலுஞ் செருப்பாலும் பிரம்பாலுங் கடிந்து சாடும், எல்லாருநல்லவரென் றெண்ணியரு ளீந்ததென்ன விகழ்ச்சி யொன்றும், சொல்லாமன்மலரால்விட் டெறிந்தவனைக் காய்ந்ததென்ன சொல்லுவீரே. 7

நல்லாளையிட மருவுந்தியாகையா வுமதிடத்தினியாயங்காணும், கல்லாலே யெறிந்தோர்க்குஞ் செருப்படியா லுதைத்தோர்க்குங் கடிந்துபோரில், வில்லாலே யடித்தோர்க்குங் கொடுத்தீரே யல்லாமல் விழிநீர்சோர, எல்லாமுன் செயலென்றே யிருப்போருக்கியாதெனு மீகிலீரே. 8

பண்காணுந் தமிழ்ப்புலவீரினத்தோடே யினஞ்சேரும் பரிசே போலத், தண்காவிமலர்த்தடஞ் சூழ்காவிரிநாட்டொருபுதுமை சாற் றக்கேளீர், கண்காணநரையான்மேல் வெண்காடை வீற்றிருக்கக் கண்டோமந்த, வெண்காடையிடப்புறத்தே பச்சையன்னங் கலந் திருக்கும் விதங்கண்டோமே. 9

இந்திரன் கலையாயென் மருங்கிருந்தானக்கினி யுதரம்விட்டக லான், இயமனெனைக்கருதான ரனெனக்கருதி நிருதிவந்தென்னையென் செய்வான், அந்தமாம்வருண னிருகண்விட்டகலா னகத்தினின் மக்களும்யானும், அநிலமதாகு மமுதினைக்கொள்வோம் யாரெதி ரெமக்குளாருலகில், சந்ததமிந்தவரிசையைப்பெற்றுத் தரித்திரரா ஜனைவணங்கித், தலைசெயுமெம்மை நிலைசெய்சற் கீர்த்திச்சாளுவ கோப்பையனுதவும் மந்தரபுயத்தான்றிப்பையராயன் மகிழ்வொடு விலையிலாவன்னேன், வாக்கினுற்குபேரனுக்கினனவனேமாசி லீசான பூபதியே. 10

வண்டுகிண்டியதொங்கலோதிகுணக்கெழுந்திடுமனிலமோ
மன்னுநூபுரமோபயோதரமூருவானவர்கனிகையோ
அண்டர்பூபதிவனிதையோமுகமமுதவாயிதழ்தும்பியோ
அரிகையாயுதமோபிறந்திடமன்னமென்னவுலாவுவீர்
கொண்டநண்புமுதாரமுந்தவரூதகோகனகானனன்
குத்திபல்லவராயமேருகுணுளதிப்பையன்வரையின்மேல்
துண்டவெண்பிறைவேணிகைச்சிலைநாணெனப்புகலாவிடின்
தூரமோவதிபாரமோவுயர்சேரனுக்கொருதொங்கலே. 11

(குணக்கெழுந்திடுமனிலம் - கீழ்காற்று - கொண்டல்மேகம்-ஓதி) (நூபுரம் - சிலம்பு - மலை - கொங்கை.) வானவர்கனிகை - அரம்பை-வாழைத்தொடை.) அண்டர்பூபதிவனிதை - சசி - சந்திரன் - முகம்) தும்பி - வண்டு. (தேன் - இதழ்.) (அரிகையாயுதம்-ஆழி-திருப்பாற்கடல்) துண்டவெண்பிறைசூடி கைச்சிலைநாண்-ஆதிசேடன்-வாசுகி-வா-சுகி-என்னுவிடின்) (சேரன்தொங்கல்-பனை) (மடலேறுவேனென்பது கருத்து)

சந்திரனுக்குடலூனந்தனதனுக்கோர்கண்ணூனந்தருவினீழல்
இந்திரற்கோபகக்குறியாமியமனுக்கோபுழுக்காலாமிரவியீன்ற
மைந்தனுக்கோகான்முடமாம்வனசனுக்கோர்தலைகுறையாய்வாழ்வாராயின்
பந்தமுளமானிடரைவிதிவிடுமோவாலவாய்ப்பதியுளானே. 12

கட்டளைக்கலித்துறை

அட்டாவதானமுந்தொல்காப்பியமுமகப்பொருளும்
தொட்டாதிதொட்டப்ரபந்தமெல்லாநம்மைச்சொல்லச்சொல்லி
ஒட்டாரங்கட்டிநம்பல்லக்குக்கொம்பையொடித்தெறிந்த
தட்டாரப்பையலரிகரபுத்ரனைச்சண்ணினமே. 13

பண்டனைப்பண்டனையோதுபெம்மானைப்பனிவரைக்கோ
தண்டனைத்தண்டனைசெய்யுமுத்தண்டனைத்தண்டனைமூ
தண்டனையண்டர்தொழுந்திருமாற்சேபறமர்ந்தமணி
கண்டனைக்கண்டனையாயினெஞ்சேமுத்திகண்டனையே. 14

துளைபடுமராமரமோரேழுமெய்தவன்றாதுகவி
உளைபடுவாரிதியொன்றேகடந்ததொளிர்தரள
வளைபடுவாவிமணவைமன்கூத்தன்வகுத்தகவி
தளைபடுகாலுடனேகடலேழையுந்தாண்டினதே. 15

துங்காதராதலமெங்குமொருமிக்கத்துய்த்தநர
சிங்காதராதரந்தானறிந்தேனல்கச்சேலம்வந்த
கெங்காதராநின்புகழ்கேட்டசைப்பன்கிரீடமென்றே
வெங்காதராவுக்குச்செய்தானிலைமலர்வேதத்தனே. 16

புரசைவடமலையப்பாவிருட்கயம்பூண்டுகொண்டு
முரசைவடமலையப்பாலுஞ்செல்லமுழக்கஞ்செய்தோய்
சிரசைவடமலையப்பாம்பின்வைத்துத்திருக்கண்வளர்
இரசைவடமலையப்பாவிப்பாவிப்பாருக்கோரிந்திரனே. 17

சோதிச்சவரிவிழிக்கோகரவில்லை தூயகுழல்
கோதிச்சவரிமுடிக்கறியாள்கொண்டகோலமென்னே
நீதிச்சவரிப்பெருமாளென்றேதிகினைந்துருகப்
போதிச்சவரிவிவட்காரோவறிகிலன்பூங்கொடியே. 18

சொல்லுக்கினியகழுக்குன்றரேயுமைச்சொல்லவென்றால்
அல்லற்பிழைப்புப்பிழைத்துவிட்டீர்முப்புராதியர்மேல்
வில்லைக்குனித்தெய்யமாட்டாமனீரந்தவேளைதனிற்
பல்லைத்திறந்துவிட்டீரிதுவோநும்படைத்தொழிலிலே. 19

துயிலையிலேயிடர்துன்னையிலேதெவ்வர்சூழையிலே
பயிலையிலேயிருட்பாதியிலேபசும்பாலனத்தை
அயிலையிலேவயதாகையிலேநமக்கார்துணைதான்
மயிலையிலேவளர்சிங்காரவேலர்மயிலையிலே. 20

போதாசிவகுருநாதாகலவைபுழுகொடுசவ்
வாதார்ந்தகொங்கைக்குறமாதுவள்ளிக்குவாய்த்திடுமின்
பாதாருகற்செற்றவேல்விடுத்தாலென்பகையையறுக்
காதாமனமிரங்காதாசிவகிரிக்காங்கேயனே. 21

காப்பிட்டபிள்ளைக்கறிக்கிச்சைப்பட்டுவையைக்கரைமேன்
மாப்பிட்டுவந்தமயிலேசனேமலையானநின்னைக்
கூப்பிட்டுநின்றுகுனிந்தொருகோலக்கொம்பாற்றடவிப்
பூப்பட்டகண்ணிச்சயமாக்கினன்மைப்புயல்வண்ணனே. 22

உம்பரைவாழ்வித்தநஞ்சங்கொண்டோமொண்புரமெரித்த
அம்பரையேற்றியசூலங்கண்டோமருளுங்குறைவில்
நம்பரைபாகமுங்கண்டோமவர்திருநாமஞ்சொல்லா
வம்பரையுங்கண்ணிற்கண்டோம்வெண்காடனைவாழ்த்துங்களே. 23

மாடேறுதாளுமதியேறுசென்னியுமாமலரோன்
ஓடேறுகையுமுடையார்தமக்கிடமோங்கியநெற்
சூடேறுசங்கஞ்சொரிமுத்தைமுட்டையென்றேகமலக்
காடேனுமன்னஞ்சிறகாலணைக்குங்கழுக்குன்றமே. 24

நெருப்புக்கறுக்கச்சிவப்புள்ளமேனியர்நீள்கனகப்
பொருப்பைக்குனித்துப்புரமெரித்தார்க்கிடம்போர்க்களிற்றின்
மருப்புக்கண்முத்தும்வளர்கழைமுத்தும்வளைக்கண்முத்தும்
கருப்புக்கண்முத்துமதிக்குலங்காட்டுங்கழுக்குன்றமே. 25

ஆலங்கிடக்குமனத்தார்க்கொருநன் றியம்பிலிட்ட
கோலங்கிடக்குங்கண்டாய்குறையாதகுணமுடைய
சீலங்கிடக்குமனத்தார்க்கொருநன்றிசெய்யில்வெகு
காலங்கிடக்குங்கண்டாய்வணிகாசெந்தில்காத்தவனே. 26

வெண்பா

வேளுக்குவாம்பரியும்வில்லுக்குநீலமுஞ்சேல்
வாளொக்குங்கண்மடவார்வாய்க்காடும்-நாளும்
மருதப்பனேயேவளர்த்துவிட்டதாலே
மருதப்பனேவணங்குவார். 27

சிந்தாமணிசங்குதேனுமலர்த்தாமரைசீர்
ஐந்தருவுநின்னவேயாயிருக்க-வந்தேதான்
கச்சவிடமேயுண்டகண்டாகடைதோறும்
பிச்சையிரந்துண்டதென்னபேசு. 28

அந்திக்கார்வந்துமயலாற்றுவாரன்னேயிடு
வந்திக்கார்வந்துவழக்குரைப்பார்-நந்திக்கார்
கச்சிக்காளத்திக்கார்காதலுரைப்பார்கனகக்
கச்சிக்காளத்திக்கார்காண். 29

இருப்போமென்றாலுமிராதுளமானேயிக்
கருப்போமென்றாலுங்கசக்கும்-விருப்பாரும்
காசண்முகனைக்கடல்புடைசூழ்கோவளம்வாழ்
மாசண்முகனைமறந்து. 30

பாரவிளநீர்சுமக்கப்பண்டேபொறாதவிடை
ஆரவடஞ்சுமக்கவாற்றுமோ-நேரே
புடைக்கனத்தகொங்கையின்மேற்பூங்களபஞ்சாத்தி
இடைக்கனத்தம்வைத்தவராரின்று. 31

வெங்காயஞ்சுக்கானால்வெந்தயத்தாலாவதென்ன
இங்கார்சுமந்திருப்பாரிச்சரக்கை-மங்காத
சீரகத்தைத்தந்தீரேற்றேடேன்பெருங்காயம்
ஏரகத்துச்செட்டியாரே. 32

என்னெஞ்சுகல்லாகுமென்றறிந்தகல்லுமையாள்
பொன்னன்சரணம்பொருதென்றே-முன்னாள்

இடத்தாளேயம்மியின்மேலேற்றுக்களக்காடா
இடத்தாளேயஞ்சாதேயின்று. 33

முன்னேயிரண்டுமுலைமுற்றியபின்னாலுமுலை
எந்நேரமென்மதலைக்கெட்டுமுலை-எந்நாளும்
பைந்நாகஞ்சூழ்மதுரைப்பாணாநின்பாகனுக்கிங்
கென்னாகமென்னாமினி. 34

நங்கையொருத்தியையுநாமிருவர்மூவரையும்
பொங்குமமளிபொறுக்குமோ-சங்கம்
குழையவரால்பாயுக்குருநாடர்கோவே
பழையவராலென்னபயன். 35

நங்கைபயணநமக்கென்றுரைத்தளவில்
அங்கம்பசலைநிறமானதே-செங்கை
வளைநெகிழப்பாதிமறுத்தேனென்றோத
உளநெகிழப்பாதியுடைந்து. 36

உன்னுயிருமென்னுயிருமொன்றென்பதின்றறிந்தேன்
மன்னுபுகழ்மச்சத்தார்மன்னவா-உன்னுடைய
பொன்னாகத்தெங்கையர்தம்போகநகச்சின்னங்கண்
டென்னாகத்தேயெரிகையால். 37

ஒருவர்க்கிடமாயுகந்திருந்தபாயல்
இருவர்க்கிடமாயதென்னோ-மருவலரைக்
கன்னாட்டவின்னாட்டுங்கண்டன்கரிகாலன்
தன்னாட்டிதுபுதுமைதான். 38

அம்பலவாவின்னொருகாலாடினாலாகாதோ
உம்பரெலாங்கண்டதெனக்கொப்பாமோ-சம்புவே
வெற்றிப்பதஞ்சலிக்கும்வெம்புலிக்குந்தித்தியென
ஒற்றிப்பதஞ்சலிக்குமூர். 39

மாதாவுடல்சலித்தாள்வல்வினையேன்கால்சலித்தேன்
வேதாவுங்கைசலித்துவிட்டானே-நாதா
இருப்பையிலேவாழ்சிவனேயின்னமோரன்னை
கருப்பையிலேவாராமற்கா. 40

இந்தவிடைநிற்பதறிதென்னாணையும்மாணை
சந்தேகமாகச்சமைத்தானே-அந்தவயன்

பாரதிராமன்வரையிற்பைங்தொடியீர்கொங்கையிள
நீரதிராமன்னடமின்னீர். 41

காளத்திகண்டத்தேகாளத்திநெற்றியிலே
காளத்தியுன்றன்கரத்திலே-காளத்தி
அங்கமெங்கும்வெவ்வழலையாற்றினுண் ஞானப்பூங்
கங்கையென்னும்பெண்ணொருத்திகண்டு. 42

மேவினுடனேவிடியும்விடியாது
கோவைமணிமார்பன்கூடாநாள்-தேவர்
திரண்டாதரிக்கின்றதென்னரங்கமாலே
இரண்டாலும்பொல்லாதிரா. 43

ஆகசெய்யுள்-567.

---

# அம்மானை



சித்தம்பூர்வாழுஞ்சிவனளித்தபிள்ளையார்
மெத்தப்பெருவயிறுவீங்கினர்காணம்மானை
மெத்தப்பெருவயிறுவீங்கினரேயாமாயின்
இத்தரையின்மீதவருக்கேச்சலவோவம்மானை
இரவுபகல்குட்டிணிக்கிங்கேச்சுண்டோவம்மானை. 1

விருப்பாரும்பூஞ்சோலைமேவுதிருவரங்கர்
திருப்பாற்கடலுடையசெல்வர்காணம்மானை
திருப்பாற்கடலுடையசெல்வரேயாமாயின்
இரப்பாற்குப்பெண்கொடுத்ததென்னமதியம்மானை
என்றல்லோமண்ணுண்டிருந்தனர்காணம்மானை. 2

ஆதாரமாங்குடந்தையாதிகும்பேச்சுரனர்
கோதாடுமன்மதனைக்கொன்றெரித்தாரம்மானை
கோதாடுமன்மதனைக்கொன்றெரித்தாராமாயின்
மாதாபிதாக்கள்பழிவாங்காரோவம்மானை
வாங்குதற்குமுன்வாயின்மண்விழுந்ததம்மானை. 3

தொல்லுலகிலெல்லோருஞ்சொன்னமாங்கனியொன்று
நல்லதொருகாஞ்சிநகரிலுண்டேயம்மானை

நல்லதொருகாஞ்சிநகரிலுண்டேயாமாயின்
எல்லார்க்குந்தானேயினிக்குமோவம்மானை
இனித்திருக்குமொருவேளையெரித்திருக்குமம்மானை. 4

மட்டுவார்கூந்தலுமையாண்மனமகிழக்
கட்டுமாவொன்றுளதுகச்சியிலேயம்மானை
கட்டுமாவொன்றுளதுகச்சியிலேயாமாயின்
இட்டமாய்நற்கனிகாயில்லையோவம்மானை
இல்லாமற்கல்லாலெறிவாரோவம்மானை. 5

கல்லாலின்கீழிருக்குங்காளத்திநாதருக்குப்
பொல்லாச்சிலந்திபுகுந்ததுகாணம்மானை
பொல்லாச்சிலந்திபுகுந்ததுவேயாமாயின்
வல்லானொருபணிக்கன்வாரானோவம்மானை
வந்தல்லோபண்டுவடுப்பட்டதம்மானை. 6

ஆரத்தடவயல்சூழாமாதைவாழழகர்
தாரொத்தமேனிதழலொத்ததம்மானை
தாரொத்தமேனிதழலொத்ததாமாயின்
ஈரக்கங்காநதியாளிருப்பதேனம்மானை
ஈரம்பெருநெருப்புக்கில்லையேயம்மானை. 7

மாசிலாத்தென்விரிஞ்சைமார்க்கசகாயலிங்கர்
வேசியர்பாற்றாதுசொல்லிமீண்டனர்காணம்மானை
வேசியர்பாற்றாதுசொல்லிமீண்டனரேயாமாயின்
வீசைமுனைவெழ்க்கமவர்க்கில்லையேயம்மானை
இல்லாமற்றலையிறக்கமேன்வந்ததம்மானை 8

வற்றாதவையையிலும்வாள்விஜயன்றன்கையிலும்
பற்றாமலண்ணலடிபட்டனர்காணம்மானை
பற்றாமலண்ணலடிபட்டனரேயாமாயின்
பெற்றாரில்லாதசிறுபிள்ளையோவம்மானை
பிள்ளைமதியுடையபித்தர்காணம்மானை. 9

பூங்காவனஞ்சூழும்புள்ளிருக்கும்வேளூரான்
பாங்கானதென்மதுரைப்பாணன்காணம்மானை
பாங்கானதென்மதுரைபாணனேயாமாயின்
தாங்காதிழையெடுத்துத்தைப்பனோவம்மானை
தையலுக்குநல்லசமர்த்தன்காணம்மானை. 10

இப்பூமி தன்னிலியல்பாந்திருத்தணியில்
முப்பூவிளையுமுருகருக்கேயம்மானை
முப்பூவிளையுமுருகருக்கேயாமாயின்
அப்பவருக்கங்கேயரிதல்லோவம்மானை
அவர்க்குமுகமாறுனலப்பரிதோவம்மானை. 11

மாந்தரொடுவிண்ணோர்வணங்குதணிகாசலத்தான்
போந்துதலையோட்டிலிரப்போன்மகன்காணம்மானை
போந்துதலையோட்டிலிரப்போன்மகனேயாமாயின்
காந்திவிடுமாடகப்பொற்காசரிதோவம்மானை
கல்லாரவெற்படைந்தார்க்காசரிதோவம்மானை. 12

பாலாறுசேரும்பரமர்திருவிற்கோலர்
நாலாறுசேரிநடுப்புகுந்தாரம்மானை
நாலாறுசேரிநடுப்புகுந்தாராமாயின்
தோலாமையோடெலும்புதொட்டதுண்டோவம்மானை
தொட்டனரென்றேமறையோர்தொட்டிலர்காணம்மானை. 13

கோணமலையுடையகோதையிடப்பாகனுர்
சேணுடர்போற்றுதிருவம்பலர்காணம்மானை
சேணுடர்போற்றுதிருவம்பலரேயாமாயின்
ஏனுதிமால்பிரமர்க்கெட்டாரோவம்மானை
இடைமதிக்குங்குசமதிக்குமெட்டுவரோவம்மானை. 14

அண்டரெல்லாம்போற்றுகின்றவண்ணமலைநாதர்
கண்டொருபெண்பாதியுடல்கைக்கொண்டாரம்மானை
கண்டொருபெண்பாதியுடல்கைக்கொண்டாராமாயின்
உண்டவிடமெல்லாமேஊராதோவம்மானை
ஊருமென்றேயுண்ணுமுலையாளுளம்மானை. 15

தேவாதிதேவன்றிருவல்லிக்கேணியண்ணல்
ஓவாப்பெருஞ்செல்வமுற்றவன்காணம்மானை
ஓவாப்பெருஞ்செல்வமுற்றவனேயாமாயின்
பூவாளுமாவலிபாற்போவதேனம்மானை
போனகதைகேட்கிலதுபூத்தானமம்மானை. 16

வில்வத்திருச்சடிலமேவுமயிலேச்சுரனுர்
செல்வந்தழைந்தநிறைசெல்வர்காணம்மானை

செல்வத்தழைந்தநிறைசெல்வரேயாமாயின்
இல்லங்கடோறுமிரப்பதேனம்மானை
இரந்தார்விதிதலைவந்தேறலாலம்மானை. 17

தீமைக்கடல்விடத்தைத்தேர்ந்தவிரிஞ்சேச்சுரனார்
வாமத்தொருமயிலைவைத்தனர்காணம்மானை
வாமத்தொருமயிலைவைத்தனரேயாமாயின்
ஏமமுடிமேலரவமேறுமோவம்மானை
ஏறாதோவன்புற்றிருந்தக்காலம்மானை. 18

இருவருக்குங்காண்பரியவீசர்மதுரேசர்
விருதுகட்டியங்கம்வெட்டிவென்றனர்காணம்மானை
விருதுகட்டியங்கம்வெட்டிவென்றனரேயாமாயின்
அருமையுடம்பிருகூறுவதேனம்மானை
ஆனாலுக்காயமில்லையரிவர்க்கம்மானை. 19

அடர்ந்துவாழுங்குடந்தையாராவமுதர்
மடந்தைபாகர்க்கேறுமாடுகாணம்மானை
மடந்தைபாகர்க்கேறுமாடுதானாமாயின்
கடந்தபாதம்மிரண்டுங்காணாரோவம்மானை
கண்ணிரண்டும்பூவானாற்காண்பாரோவம்மானை. 20

கொண்டறிகழ்சோலைவளர்கும்பபுரிவாழரனார்
பெண்டுகளைச்சுமந்தபித்தர்காணம்மானை
பெண்டுகளைச்சுமந்தபித்தரேயாமாயின்
கண்டவிடந்தங்குங்கருத்தரோவம்மானை
கண்டவிடந்தங்குங்கருத்தர்தாமம்மானை. 21

தெண்டிரைசூழ்தில்லைச்சிவகாமிதாயார்க்குக்
கண்டமெல்லாஞானக்கரும்பதுகாணம்மானை
கண்டமெல்லாஞானக்கரும்பதுவேயாமாயின்
அண்டர்பிரானாலைதனிலாடானோவம்மானை
ஆடிப்புலியூரமர்ந்தனன்காணம்மானை. 22

விருத்தசடைத்தில்லைநகர்மேவுஞ்சிதம்பரர்க்கு
வருத்தமிகுமொருகால்வாதமல்லோவம்மானை
வருத்தமிகுமொருகால்வாதமேயாமாயின்
பெருத்தகடனஞ்சாற்றிப்பிழையாரோவம்மானை
பிழைத்தல்லோநடமாடிப்பேருற்றாரம்மானை. 23

விரிந்தபுகழ்புள்ளிருக்கும்வேளூர்வயித்தியனார்
பரிந்துவினைதீர்க்கவல்லபண்டிதர்காணம்மானை
பரிந்துவினைதீர்க்கவல்லபண்டிதரேயாமாயின்
மருந்துவிலைகைக்கூலிவாங்காரோவம்மானை
வாயிலேமண்போட்டுவாங்குவர்காணம்மானை. 24

பாட்டுவரிச்சுரும்பர்பாடுஞ்சிதம்பரனார்
மாட்டிடையன்றேடமன்றிலாடெடுத்தாரம்மானை
மாட்டிடையன்றேடமன்றிலாடெடுத்தாராமாயின்
ஆட்டுக்காறன்னையறிந்ததெவரம்மானை
அறிந்தனகாண்காற்புலியுமரைப்பாம்புமம்மானை. 25

இன்னதிதுவென்றிறைவன்றிறமதனைச்
சொன்னமறையுந்துணிந்தறியாதம்மானை
சொன்னமறையுந்துணிந்தறியாதாமாயின்
கன்னிவனத்திடையேகாணலாமம்மானை
கண்டார்பிறிதென்றுங்காணார்காணம்மானை. 26

மாலறியாக்கள்ளனவன்வந்துமன்றுளேபுகுந்து
கோலமுடனெடுத்துக்குன்றொளித்தானம்மானை
கோலமுடனெடுத்துக்குன்றொளித்தானாமாயின்
காலுதலைதோலெலும்புகண்டதுண்டோவம்மானை
கண்டல்லோவிருகழுகுகாத்திருப்பதம்மானை. 27

கற்றச்சடைமுடியார்கச்சியேகம்பருக்கு
நெற்றிக்கண்ணொன்றுநெருப்பதுகாணம்மானை
நெற்றிக்கண்ணொன்றுநெருப்பதுவேயாமாயின்
பற்றிச்சடையிற்படாதோவம்மானை
படருமென்றேகங்கைபதிவிருந்தாளம்மானை. 28

செம்பொன்மலைவெள்ளிமலைசேரவிரண்டிருக்கக்
கம்பர்விரும்புவதுங்கஞ்சிகாணம்மானை
கம்பர்விரும்புவதுங்கஞ்சியேயாமாயின்
அம்புவியெல்லாமளக்கவன்னமெங்கேயம்மானை
அன்னந்திருக்கம்பையாற்றிலுள்ளதம்மானை. 29

ஈசன்பசுவாகியேமனொருகன்றாகி
வீசுபுகழாரூரின்வீதிவந்தாரம்மானை

வீசுபுகழாரூரின்வீதிவந்தாராமாயின்
காசளவுபாலுங்கறவாதோவம்மானை
கன்றையுதைத்தகாலிகறக்குமோவம்மானை. 30

ஒற்றியூர்த்தியாகரொருபெண்பாற்சுந்தரரை
உற்றுநீசத்தியம்பண்ணென்றொளித்தாரம்மானை
உற்றுநீசத்தியம்பண்ணென்றொளித்தாராமாயின்
குற்றமுண்டோவன்பர்மேற்கோபமோவம்மானை
கோபமேதோமகிழ்வாய்க்கொண்டிருந்தாரம்மானை. 31

அக்கரவம்பூண்டிருந்தவங்கயற்கண்ணம்மைபங்கர்
கைக்கொண்டுசெத்தகன்றைக்காவிவந்தாரம்மானை
கைக்கொண்டுசெத்தகன்றைக்காவிவந்தாராமாயின்
சொக்கர்மதுரைக்குத்தோட்டியோவம்மானை
தோட்டியென்றேகாமனையுஞ்சுட்டெரித்தாரம்மானை. 32

ஆரவயல்சூழருணையண்ணாமலைநாதர்
பேருலகில்வண்ணாரப்பெண்கொண்டாரம்மானை
பேருலகில்வண்ணாரப்பெண்கொண்டாராமாயின்
சாரும்புடைவையெல்லாந்தப்பினரோவம்மானை
தப்பினார்தாருவனத்தார்புடைவையம்மானை. 33

திருப்பாதிரிப்புலியூர்ச்செல்வச்சிவக்கொழுந்தர்
கருப்பாஞ்சிலையானைக்காய்ந்தனர்காணம்மானை
கருப்பாஞ்சிலையானைக்காய்ந்தனரேயாமாயின்
ஒருத்திக்கிருவருடன்கலப்பேனம்மானை
கலவாரோகன்னிவனங்காவல்கொண்டாலம்மானை. 34

மன்றாடியாமெங்கண்மாமாசிலாமணியார்
நன்றானமுல்லைக்குநாயகர்காணம்மானை
நன்றானமுல்லைக்குநாயகரேயாமாயின்
குன்றாமற்பெண்ணெங்கேகொண்டனர்காணம்மானை
கொண்டபெண்ணோநல்லகொடியிடைச்சியம்மானை. 35

சுந்தரஞ்சேர்தென்குடந்தைச்சோமநாதப்பெருமான்
கந்தரிடமாமிதனைக்கைப்பிடித்தாரம்மானை
கந்தரிடமாமிதனைக்கைப்பிடித்தாராமாயின்

இந்தவுலகதனுக்கேற்குமோவம்மானை
ஏற்குமென்றேகையின்மழுவேந்தினர்காணம்மானை. 36

அட்டதிக்கெண்கன்னிவனத்தாரப்பரைக்கடலில்
இட்டகற்றாேணுடுகரையேறவிட்டாரம்மானை
இட்டகற்றாேணுடுகரையேறவிட்டாராமாயின்
விட்டகற்றாணீரின்மிதக்குமோவம்மானை
மிதவாதோமுன்வளைந்துவில்லானலம்மானை. 37

தந்தைபிடித்தரியத்தாயானவள் சமைக்க
வெந்தவிடக்குய்ந்துமீண்டதுகாணம்மானை
வெந்தவிடக்குய்ந்துமீண்டதுவேயாமாயின்
மைந்தனுறுப்புமணத்ததோவம்மானை
மாதையரன்வல்லபத்தால்மணத்ததுகாணம்மானை. 38

நாணென்றானஞ்சிருக்குநற்சாபங்கற்சாபம்
பாணந்தான்மண்டின்றபாணங்காணம்மானை
பாணந்தான்மண்டின்றபாணமேயாமாயின்
சேணூர்புரமெரித்தசேவகமேதம்மானை
சேவகத்தைச்சொல்லச்சிரிப்பல்லோவம்மானை. 39

பொன்றிரளுஞ்சித்திரஞ்சூழ்பூம்புகலூர்தன்னில்வளர்
தந்திமுகன்பெருவயிறன் சப்பாணியம்மானை
தந்திமுகன்பெருவயிறன் சப்பாணியாமாயின்
இந்தவயிற்றுக்கிரையெங்கேவம்மானை
என்றல்லோவீசனிரக்கலுற்றானம்மானை. 40

தெள்ளுபுகழ்படைத்ததிருமுட்டத்தெம்பெருமாள்
உள்ளநிலமெல்லாமுழுதுண்டாரம்மானை
உள்ளநிலமெல்லாமுழுதுண்டாராமாயின்
கள்ளனிவனென்றுசொல்லிக்கட்டுவதேனம்மானை
கட்டாரோபோரிற்கதிர்மறைத்தாலம்மானை. 41

அடுத்ததிருக்காவிரிசூழணியரங்கரெப்போதும்
எடுத்ததிருக்கோயிலைவிட்டெழுந்திராரம்மானை
எடுத்ததிருக்கோயிலைவிட்டெழுந்திராராமாயின்
படுக்கையிலேவிடந்தீண்டிப்பட்டனரோவம்மானை
பட்டனரென்றல்லோபருந்தெடுத்ததம்மானை. 42

மட்டுற்றசோலைமதுராபுரிச்சொக்கர்
பிட்டுக்குமண்சுமந்தபித்தர்காணம்மானை
பிட்டுக்குமண்சுமந்தபித்தரேயாமாயின்
ஒட்டத்தொழிலவருக்குள்ளதோவம்மானை
உள்ளன்பிலாதவருக்கொட்டர்காணம்மானை. 43

நீண்மதில்சூழாயல்வளர்நீலகண்டேசுரனார்
சேணுயர்ந்தகீர்த்தித்தியாகர்காணம்மானை
சேணுயர்ந்தகீர்த்தித்தியாகரேயாமாயின்
காணக்கொடைக்கொடிதான்கட்டினரோவம்மானை
கையாற்சொன்னக்கொடியைக்கட்டினர்காணம்மானை. 44

அம்புலியூரென்னுமணிகொள்சிதம்பரத்தே
வெம்புலியொன்றெந்நாளுமேவுங்காணம்மானை
வெம்புலியொன்றெந்நாளுமேவுமேயாமாயின்
அம்பலத்தைத்தான்விட்டகலாதோவம்மானை
ஆட்டைவிட்டுவேங்கையகலுமோவம்மானை. 45

புட்படியுநாரணன்போற்பூவைவேங்கடாசலவேள்
மட்படியில்வாழும்வயித்தியன்காணம்மானை
மட்படியில்வாழும்வயித்தியனேயாமாயின்
கட்படுநர்நோய்தீரக்காண்பானோவம்மானை
காண்பானிவனுங்கடைமருந்தாலம்மானை. 46

செல்லார்வலஞ்சுழியிற்செங்கழுநீர்ப்பிள்ளையார்
எல்லார்க்குநல்லவரமீவர்காணம்மானை
எல்லோர்க்குநல்லவரமீவரேயாமாயின்
தொல்லுலகிலுள்ளோர்துதியாரோவம்மானை
துதிக்கையவர்தமக்குச்சொந்தமன்றோவம்மானை. 47

தேங்குபுகழ்த்தென்மயிலைச்சிங்காரவேன்முருகர்
வேங்கைவனத்திலன்றுவேட்டைவந்தாரம்மானை
வேங்கைவனத்திலன்றுவேட்டைவந்தாராமாயின்
பாங்காகவேமுயன்மான்பற்றினரோவம்மானை
பற்றினரோமான்கன்றைப்பாரறியவம்மானை. 48

வடவாறுசூழவரும்வாழ்மயிலின்வாகனனார்
விடமானெனும்புகொண்டவேடன்மகனம்மானை

விடமானெனும்புகொண்டவேடன்மகனுமாயின்
அடைவானவள்ளியறியாளோவம்மானை
அம்மான்மகளறிந்தாலச்சமுண்டோவம்மானை. 49

திரிச்சிராப்பள்ளியரன்செட்டிமகட்காவேடம்
தரிச்சுமருத்துவஞ்செய்தாயானாரம்மானை
தரிச்சுமருத்துவஞ்செய்தாயானாராமாயின்
மருத்தெண்ணெய்ச்சிக்கின்மணமிலையேயம்மானை
மட்டுவார்குழலிருந்தான்மணமரிதேவம்மானை. 50

நாடுந்திருச்சம்புநாதர்க்கிருப்பிடத்தில்
ஓடுஞ்சலம்பெருகியூற்றெடுத்ததம்மானை
ஓடுஞ்சலம்பெருகியூற்றெடுத்ததாமாயின்
நாடுமொருசிலந்திநண்ணினதோவம்மானை
நவைதீரொருசிலந்திநண்ணினதுண்டம்மானை. 51

எண்ணரியகாஞ்சியில்வாழேகாம்பரநாதர்
அண்ணறிருமேனியெங்குமாகாசமம்மானை
அண்ணறிருமேனியெங்குமாகாசமாமாயின்
வண்ணமுலைமார்பின்வடுப்படுமோவம்மானை
மாவடியில்வாழ்பவர்க்குவடுவரிதோவம்மானை. 52

பூங்கொன்றைநாதன்புகழ்கச்சியேகம்பன்
சேங்கண்ணின்மீதேறுஞ்செல்வன்காணம்மானை
சேங்கண்ணின்மீதேறுஞ்செல்வனேயாமாயின்
மாங்கண்ணின்கீழிருக்கவந்ததேனம்மானை
வந்தல்லோவிவ்வாறுவடுப்பட்டதம்மானை. 53

சேற்றூன்மடையடைக்குஞ்சேவகனார்கூடலிலே
வேற்றாளாய்மண்சுமக்கவேண்டினர்காணம்மானை
வேற்றாளாய்மண்சுமக்கவேண்டினரேயாமாயின்
மாற்றானடித்தவடுவிலையோவம்மானை
மாவடியில்வாழ்பவர்க்குவடுவரிதோவம்மானை. 54

எட்டுதிக்குள்ளோருமிறைஞ்சுமெங்கள்சொக்கலிங்கம்
கிட்டுகின்றவேகசந்தகிராகிகாணம்மானை
கிட்டுகின்றவேகசந்தகிராகியேயாமாயின்

கொட்டிமகவான்பல்காற்குழறுவதேனம்மானை
குழறுஞேவாசற்குக்கோளிழைத்தாலம்மானை. 55

பதமலராற்சகடுதைத்தபாரவடமலையர்
அதிகுணத்துகிலமகண்மேலாசைகொண்டாரம்மானை
அதிகுணத்துகிலமகண்மேலாசைகொண்டாராமாயின்
விதுமுகத்துமலர்மானைவிட்டனரோவம்மானை
விடுவாரோமாலானுன்மேதினிக்குளம்மானை. 56

மனஞ்சலியாமற்றினமுமாறுமற்றண்டலையார்
தினங்கீரைமாவடுவுந்தின்றுவந்தாரம்மானை
தினங்கீரைமாவடுவுந்தின்றுவந்தாராமாயின்
கனங்கொண்டுமெய்யிலனல்காணுதோவம்மானை
கண்டதுகாணெற்றியிலேகண்ணெரிச்சலம்மானை. 57

தண்டாமரைத்தடஞ்சூழ்தண்டலையாரெப்பொழுதும்
உண்டாரிளங்கீரைமாவடுவுமம்மானை
உண்டாரிளங்கீரைமாவடுவுமாமாயின்
பண்டேதான்றின்றுபழக்கமுண்டோவம்மானை
பழக்கமில்லைத்தாயானுர்பழக்கிவைத்தாரம்மானை. 58

பொன்னேறுமார்பர்புகழ்சேர்திருவரங்கர்
எந்நேரமும்பாம்பிலேகிடப்பாரம்மானை
எந்நேரமும்பாம்பிலேகிடப்பாராமாயின்
என்னேதலைக்குவிடமேறுதோவம்மானை
ஏறுமோசெங்கருடனேறினலம்மானை. 59

எந்தவுலகும்பரவுமெங்கள்சொக்கலிங்கேசர்
சந்ததமும்பொன்மன்றிற்ருனடிப்பாரம்மானை
சந்ததமும்பொன்மன்றிற்ருனடிப்பாராமாயின்
அந்தவெள்ளிமன்றதனிலாடினதேனம்மானை
ஆடினுர்கான்மாற்றதிகமென்றேயம்மானை. 60

நேயமிகுமாயல்வளர்நீலகண்டேச்சுரனுர்
ஆயுமவர்க்கெல்லாமருண்மேகமம்மானை
ஆயுமவர்க்கெல்லாமருண்மேகமாமாயின்
காயமுழுதுங்கறுக்காதோவம்மானை
கண்டமட்டுத்தான்கறுப்புகாட்டினதேயம்மானை. 61

மத்திமதிசூடிமயிலைவிருபாட்சிலிங்கர்
சுத்தவடிவெல்லாஞ்சுடர்வடிவேயம்மானை
சுத்தவடிவெல்லாஞ்சுடர்வடிவேயாமாயின்
மத்தகத்திற்றிங்கள்வயங்குமோவம்மானை
வயங்குமிருகண்ணய்மருவுதலாலம்மானை. 62

காரமருங்கண்டர்கயிலாயநாயகனர்
பாரறியக்கையிற்பணம்படைத்தாரம்மானை
பாரறியக்கையிற்பணம்படைத்தாராமாயின்
ஊர்தோறும்பிச்சைக்குழல்வதேனம்மானை
உழலாரோபங்காளிக்கொப்பித்தாலம்மானை. 63

பையரவஞ்சூடுதிருப்பட்டீச்சுரநாதர்
தையலாங்கங்கைதனைத்தரித்தாரம்மானை
தையலாங்கங்கைதனைத்தரித்தாராமாயின்
மெய்யிற்குளிர்வாதமேவாதோவம்மானை
மேவுமோவன்னிகையில்வீற்றிருந்தாலம்மானை. 64

ஆனபனந்தாளழகிக்கயன்வகுத்த
மானத்தனம்வளர்ந்துவாய்த்ததுகாணம்மானை
மானத்தனம்வளர்ந்துவாய்த்ததேயாமாயின்
ஏனதனின்வட்டப்பாடிருக்கின்றதம்மானை
இடைகுறைந்தால்வட்டப்பாடில்லையோவம்மானை. 65

பேரானபோரூரிற்பிள்ளையார்வேம்படியில்
சீராகவாழுஞ்சிவன்மைந்தனம்மானை
சீராகவாழுஞ்சிவன்மைந்தனுமாயின்
கூரானகொம்பொடிந்தகுற்றமேனம்மானை
ஒடிந்தல்லோபாரதமுமுண்டாச்சிதம்மானை. 66

அண்டர்புகழ்போரூரிளுறுமுகத்தன்முன்னேன்
பெண்டுகொள்ளமாட்டாப்பிரமங்காணம்மானை
பெண்டுகொள்ளமாட்டாப்பிரமமேயாமாயின்
கண்டவரெல்லாங்குட்டக்கணக்குண்டோவம்மானை
குட்டுவார்தங்கள்குறைதீரவம்மானை. 67

பொல்லாதபாவமெலாம்போக்குதிருப்போரூரில்
வல்லானிடத்திலுண்டோர்வாழானையம்மானை

வல்லானிடத்திலுண்டோர்வாழானையாமாயின்
நல்லாள்குறத்திநடுங்காளோவம்மானை
நடுங்காமற்றானிருவர்நடுவிருந்தானம்மானை. 68

மண்டலமெல்லாம்புகழுமாபோரூர்வேலவனுர்
பெண்டிரண்டுகொண்டபெருமான்காணம்மானை
பெண்டிரண்டுகொண்டபெருமானேயாமாயின்
சண்டையிடாரோவவர்சதாகாலமம்மானை
இட்டல்லோபோரூரென்றேறப்பட்டதம்மானை. 69

பேசுபுகழ்ப்போரூர்பேதைக்குறச்சிறுபெண்
ஓசைதனைக்கேட்டுவனத்தோடிவந்தாரம்மானை
ஓசைதனைக்கேட்டுவனத்தோடிவந்தார்மாயின்
ஆசையாய்ப்பெற்றதவளேமானம்மானை
அம்மான்மகளென்றேயறிந்துகொண்டாரம்மானை. 70

வீசுபுகழ்ப்போரூரில்வேலவர்முன்செய்தமணம்
காசுபணநேராக்கலியாணமம்மானை
காசுபணநேராக்கலியாணமாமாயின்
பேசரியவிந்திரனேன்பெண்கொடுத்தானம்மானை
கொடுத்தானேசூரன்குடிகெடுக்கவம்மானை. 71

நாடிவந்தபேர்க்கெல்லாநலங்கொடுக்கும்போரூரர்
பாடிகிரிநாதருக்குப்பண்பட்டாரம்மானை
பாடிகிரிநாதருக்குப்பண்பட்டாராமாயின்
ஆடினவரின்னமுவந்தாடாரோவம்மானை
ஆடுவார்பாடவறியார்காணம்மானை. 72

துள்ளிமயிலேறுந்துரைவேலன்போரூரில்
வள்ளுவர்தங்கச்சிதனைவைத்திருந்தாரம்மானை
வள்ளுவர்தங்கச்சிதனைவைத்திருந்தாராமாயின்
கொள்ளுக்குலங்கலக்கக்கூடுமோவம்மானை
கூடினதுந்தேடினதுங்கோடியுண்டேயம்மானை. 73

நம்பர்திருநாகைநாகலிங்கநாயகனுர்
அம்பொன்மலைவீடாவமர்ந்தனர்காணம்மானை

அம்பொன்மலைவீடாவமர்ந்தனரேயாமாயின்
அம்பலத்தினின்றுகூத்தாடுவதேனம்மானை
ஆடையணிபணிக்காவாடினர்காணம்மானை. 74

கற்றுணர்ந்தார்போற்றுங்கழுக்குன்றத்தீச்சுரனார்
உற்றெமனைக்காலாலுதைத்தனர்காணம்மானை
உற்றெமனைக்காலாலுதைத்தனரேயாமாயின்
பற்றியதோர்கால்வலியும்பட்டதோவம்மானை
பாடுமுயலகன்வலியும்பட்டதுகாணம்மானை. 75

அப்பார்வயல்சூழணிவிரிஞ்சைவாழரனார்
இப்பாரில்வணிகனுயிரிரட்சித்தாரம்மானை
இப்பாரில்வணிகனுயிரிரட்சித்தாராமாயின்
தப்பாதெவர்க்குஞ்சகாயரோவம்மானை
சதாகாலமார்க்கசகாயர்காணம்மானை. 76

நாடுதிருக்கோவனல்லூர்நாதர்தினமுமறைக்
காடுதனிற்றிரியுங்கள்ளர்காணம்மானை
காடுதனிற்றிரியுங்கள்ளரேயாமாயின்
மாடெடுக்கவாடெடுக்கமாட்டுவரோவம்மானை
மாட்டாரோவல்புலியைவைத்திருந்தாலம்மானை. 77

சங்கரனாராபத்சகாயனார்சந்ததமும்
மங்கையுடன்கோவனல்லூர்மகிழ்ந்திருந்தாரம்மானை
மங்கையுடன்கோவனல்லூர்மகிழ்ந்திருந்தாராமாயின்
கங்கைநீர்சென்னியின்மேற்கட்டுவதேனம்மானை
கட்டியல்லோவவர்தேகங்காய்ந்ததுகாணம்மானை. 78

மன்னுரையம்பேட்டைவாழ்சந்த்ரசேகரனார்
என்னாளுமெண்ணினவெல்லாமுடிப்பாரம்மானை
என்னாளுமெண்ணினவெல்லாமுடிப்பாராமாயின்
இன்னும்விவாகமவர்க்கேனில்லையம்மானை
இருப்பிடமில்லார்க்குப்பெண்ணெவர்கொடுப்பாரம்மானை. 79

அத்தர்நெடுவாயிலருணசலேச்சுரனார்
சுத்தமிகும்பெண்கொண்டசுந்தரன்காணம்மானை
சுத்தமிகும்பெண்கொண்டசுந்தரனேயாமாயின்

எய்த்துடம்புபாதியாயினைத்ததென்னவம்மானை
இசையினனங்காணுதினைத்ததுகாணம்மானை. 80

வீருனகோடைநகர்வேங்கியப்பர்க்கெப்பொழுதும்
நீராடுஞ்செஞ்சடைமேனீரெற்றமம்மானை
நீராடுஞ்செஞ்சடைமேனீரெற்றமாமாயின்
கூருருமேனிகுளிராதோவம்மானை
கோடைக்குமுன்னேகுளிருமோவம்மானை. 81

ஆரூரில்வாழ்கின்றவாதிவிடங்கப்பெருமான்
பேராரும்வாதப்பிணிக்காலனம்மானை
பேராரும்வாதப்பிணிக்காலனுமாயின்
ஆரார்பிணிக்குமருந்தருத்தினரோவம்மானை
அருத்திற்பிணியறுமோவாழிநஞ்சாலம்மானை. 82

வெள்ளெருக்கம்பூச்சூடும்வேதபுரிநாதர்
வள்ளலமரர்க்கெல்லாம்வாத்திகாணம்மானை
வள்ளலமரர்க்கெல்லாம்வாத்தியேயாமாயின்
பிள்ளைகையிலுபதேசம்பெற்றதென்னவம்மானை
பெற்றுலும்பின்னுற்பிழைபொறுத்தாரம்மானை. 83

காலனையுங்காமனையுங்காட்டுசிறுத்தொண்டனிட
பாலனையுங்கொன்றபழிகாரனம்மானை
பாலனையுங்கொன்றபழிகாரனுமாயின்
சாலவுயர்ந்தோர்முடியைச்சாய்க்காரோவம்மானை
சாய்த்தவரெல்லாம்பெரியசைவர்காணம்மானை. 84

நத்துலவுதென்மயிலைநாதர்திருவாலீசர்
சித்தசனையுற்றெரித்தசேவகர்காணம்மானை
சித்தசனையுற்றெரித்தசேவகரேயாமாயின்
அத்தலைத்தீக்கொண்டதெவராற்றினர்காணம்மானை
ஆறுதலையுள்ளார்க்கரிதலவேயம்மானை. 85

மன்னுவெள்ளியம்பலமுமாசறுபொன்னம்பலமும்
என்னுடையவீசற்கிவையிரண்டுண்டம்மானை
என்னுடையவீசற்கிவையிரண்டுண்டாமாயின்
இன்னுமிருப்பம்பலமொன்றில்லையோவம்மானை
இருப்பம்பலமடியாரிதயங்காணம்மானை. 86

காஞ்சீபுரம்-வித்வான்

# கச்சபால ஐயரவர்கள்

---

கட்டளைக்கலிப்பா

கந்தித்தாளையடித்தணிசங்கினங்கான்றகித்திலக்கச்சிட்டுக்கைகளால்
பந்தித்தாளைமருட்டுமுலைச்சியைப்பாரையாவுன்றன்பாதத்திலேவந்து
வந்தித்தாளையினிக்கைவிடாமலேமஞ்சமீதிலிருத்திமகிழ்ச்சியாய்ச்
சந்தித்தாளையமேனினஞ்சித்திரசத்ரமேவும்விநாயகதூயனே. 87

விருத்தம்

திருக்கோலம்பாரதத்தைமருவவகழ்ந்துங் காஞ்சிவனுக்கேற்பப், பெருக்கோலம்பாரதத்தையகற்றெனமானே மதவேள்பிறங்கத் தூண்டும், மருக்கோலம்பாரதத்தை மருவுமுணவையுமாற்ற மருவியுன்னைத், தெருக்கோலம்பாரதத்தைப் பொருவவைத்தான் விநாயகனுஞ்சீர்மையோனே. 88

அஞ்சனத்தையணிவிழிமான்மயிலைவிநாயகதுரைமேலாசையாலே
நஞ்சனத்தையும்விடுத்தாணுன்சமைத்துத்தருமினியநலத்ததீம்பால்
மிஞ்சனத்தையும்வெறுத்தாளவன்குவளைத்தாரினையேவேண்டுகின்றாள்
கஞ்சனத்தையலையிவ்வாறலையவமைத்தானெனில்யாங்கருதலென்னே. 89

எத்தவளைக்காவெனுங்கண்ணன்மயிலைவிநாயகவேளினிதினெல்லாம்
பூத்தவளைக்காத்தவளைப்பொடித்தவளைப்புனைந்தவளைப்போற்றுமன்பன்
சீத்தவளைச்செவிமடவார்பலகோடிசிலகோடிநேர்ந்தமாதர்
கோத்தவளைக்கரமடவாளிதுதெரியாதாசைகொண்டகொள்கையேதோ. 90

இத்திக்கத்திரிபுகவிபுனைபுலவோருளங்களிக்கத்தியாகமெங்குஞ்
சத்திக்கத்திரிதலிலாதளிக்கும்விநாயகமுகிலேநகைசேர்காது
குத்திக்கத்திரிபாகல்செவிபுனையாக்குழன்முடியாக்கோதையின்பஞ்
சித்திக்கத்திரிதவினுற்பயனிலைசற்றேமனந்தாள்சீர்மையோனே. 91

ஆக செய்யுள் - 687.

---

# நமச்சிவாயப்புலவர்



## விருத்தம்

அவிசெட்டிவாங்குசுரர்க்கிறைநிகராய்வளமருவுமமரரென்றே
தவிசெட்டிமரம்போலவளர்ந்திருப்போர்தமைப்பாடோந்தனிநற்கீரன்
கவிசெட்டிதிருவடியைப்புகழ்வணிகனிசையுடனற்கவிஞர்தஞ்சைச்
செவிசெட்டிபாலடைந்தானமதுகுறைவிட்டோடுஞ்சேற்கண்மானே. 1

பாங்குயர்பளிங்குமேடை கொல்லுலையாமாருதந்துருத்தியாநீடும், பகர்நிலாக்கற்றைபதடியாமூடும்படரிருட் குழாக்குடைகரியா, ஓங்கிய செக்கருள்ளிடுக் கனலாவுயர்பெரும் பனிகொடும்வகையா, உருவிலி யென்னுங் கொல்லனென்பொன்னை யுருக்குமாறென்கொலோவுரையாய், தூங்கியவிழியுந்தாம்புடைக்கயிறுந் தூம்புறுகாம்பியற்குழலும், துவருடைத்துகிலுங் கவருடைக்கழியுந் தொறுவியருறிபடுகுடமும், தாங்கியகையுமெய்யுமாய்நின்று தண்ணளிபெய்யுமாமுகிலே, தாண்டவ ராயாபாண்டவர்தூதா தாழ்வில்சீர்கோவலாதிபனே. 2

மெய்யாரப்புலிகாணப்பொதுவிலாட்டை
மிகவெடுத்தீருமையாளுக்கொருபங்கீந்தீர்
பையாரப்பணமெடுத்தீரையாநீர்தாம்
பாரறியச்சக்கரத்தைமாலுக்கீந்தீர்
செய்யாரத்தடம்புடைசூழ்கருவைவாழுந்
திருக்களாவீச்சுரரேதேவரீர்தாங்
கையாரமழுவெடுத்துக்காட்டினாலும்
களவும்மைக்கொண்டேநான்காண்பிப்பேனே. 3

மான்பிடித்தீர்முயன்மிதித்தீரெவருங்காண
மன்றுதனிலாடெடுத்தீர்மகத்துவந்த
ஊன்பெருத்தயானையைக்கொன்றுரித்தீரிப்பால்
உரப்பானதலைக்கறிக்குமுவந்தீரையா
மீன்பொதிந்தவிழிமடவாட்கொருபங்கீந்தீர்
மேலானவேடனெச்சின்மிகவேகொண்டீர்
கான்பொதிந்தகாளத்திநாதாவும்மைக்
கழுக்கள்வந்துசுற்றுவதுங்காணத்தானே. 4

பருப்பதங்களோவ்வொரு தூண்பாவுக்கல்வளையாத பாரமேரு, சுரிப்படங்காப் போதிகைநீசெய்தபணி விடையையென்ன சொல்வே

னையா, தருப்பொலியுங்கரதலமுத்திருளப்பாசாமீநின் றுய்பா லுன்னைக், கருப்பணிமுன் றிருப்பணிக்கென் றுருப்பணினுன் மருப்பொலியுங் கமலத்தோனே. 5

சேதுபதிகாத்தமுத்துராமலிங்கதுரைராசசிங்கமந்திரி
மாதுபதிமுத்திருளப்பன்கொடியவரிவேங்கைவளராதிக்கம்
கோதுறுபாமரக்காடுகருணீசுர்மும்மதக்கோல்யானைமற்றோர்
மோதுபெரும்புலிக்காடுகல்விமான்களுந்திரிந்தால்மோசந்தானே. 6

## கட்டளைக் கலித்துறை

ஞாலத்தவரும்புகழ்குடந்தாபுரிநாதனெங்கோன்
காலப்புயல்வண்ணன்கண்மலர்சாத்தக்கருத்திலுன்னி
சீலத்தவனம்மடியானென்றியார்க்குந்தெரியவிட்ட
சூலக்குறியல்லவோநாமம்யாதெனச்சொல்லுவதே. 7

வியந்தநிசாசரனுமென்றுசந்த்ரனும்வெஞ்சனிக்குப்
பயந்தவனுமென்றுபானுவும்வந்துபணியச்செம்பொன்
நயந்தருசெல்வக்கழுகாசலமதுநண்புவைத்துச்
செயந்தந்ததான்மதியாதவரென்னத்திரிந்தனரே. 8

பொருகோட்டுவாரிநிலத்திற்குணங்கெட்டபூரியரைத்
தருகோட்டுக்கொம்பென்றுரைத்தென்பயன்வருந்தண்டமிழீர்
வருகோட்டுத்திங்கண்முடிக்கூத்தர்தில்லைவனத்தில்வளர்
ஒருகோட்டுக்கற்பகமெல்லாந்தருந்தன்னையுற்றவர்க்கே. 9

## வெறி விலக்கல்

வண்டுறைசோலைமலைப்பரிகாரிவந்தாலிவளுக்
கண்டுபடாதவிக்காமச்சுரம்விடுமாதலினால்
பண்டுபழகினர்போலிந்தவேலையிற்பாயசத்தைக்
கொண்டுவந்தீரிதிற்றோடம்பிறந்திடுங்கோதையரே. 10

படைத்தாமவேற்கண்ணிகண்ணீர்ப்பரவாகப்பரவைபொங்கி
உடைத்தாலடைத்தற்குபாயமுண்டோநறையூற்றிதழித்
தொடைத்தார்மௌலியிற்சும்மாடுகட்டிச்சுமந்துசுமந்
தடைத்தாலடைபடச்சொக்கேயிதுவையையாறல்லவே. 11

ஏழேழுசங்கத்துடனிருந்தானென்றியம்புகின்றீர்
பாழேழ்மையுற்றிடுமானிடரேசொக்கர்பண்பறியீர்

ஆழேழுலகத்துக்கப்பாலிருந்தவடிகளும்பர்
வாழேழுலகத்துக்கப்பாலிருந்தமணிமுடியே. 12

காவென் றுங்கைத்தலத்தண்ணல்செல் லூரன்கனிந்துநம்மை
வாவென் றழைத்திட்டமோதிரமேவண்மையானதமிழ்ப்
பாவென் றுஞ்சற்றுமறியாதபுல்லர்தம்பக்கலிற்போய்த்
தாவென் றுகையெடுத்தேற்காமலிட்டதடையிதுவே. 13

தடக்கும்பகிம்புரிக்கொம்பாசலப்பெருந்தந்திபட
நடக்குந்துரங்கத்துரைசீதக்காதிநன்னுட்டினல
வடக்குங்குமக்கொங்கைமின்னேயவன்றெருவாயிலிலே
கிடக்குங்கவியும்பராராசரத்நகிரீடமுமே. 14

பூமாதிருந்தென்னபுவிமாதிருந்தென்னபூதலத்தில்
நாமாதிருந்தென்னநாமிருந்தென்னநன்னுவலர்க்குக்
கோமானழகமர்மால்சீதக்காதிகொடையிருந்த
சீமானிறந்திட்டபோதேபுலமையுஞ்செத்ததுவே. 15

மாகத்தத்தும்புகழான்பகைவேந்தர்மகுடம்பொடி
ஆகத்தத்தும்பரியான்சீதக்காதியணிமலரின்
ஏகத்தத்தும்பியிசைபாடுமார்பனிலென்மகட்கோர்
மோகத்தத்துண்டென் றுசொன்னுரிலைமுன்மொழிந்தவரே. 16

மைப்போதகமும்வளநாடுஞ்செந்தமிழ்வாணர்க்கருள்
கைப்போதகமனையான்சீதக்காதியைக்காத்திருந்த
அப்போதறிந்திலமிப்பாழ்பணத்தினருமையெல்லாம்
இப்போதறிந்தனமீயாதலோபரிடத்திற்சென்றே. 17

கிட்டாதுபெண்குடிமார்க்கங்கணவன்கிழவனல்ல
பட்டாணிச்சேவகனல்லும்பகலுமப்பாற்பிசக
ஒட்டான்பொய்யல்லமலைமேலிருக்குமுமக்குமிவள்
எட்டாதகொம்பிற்கனிகாண்பாங்குன்றிருப்பவனே. 18

மஞ்சுமஞ்சுங்கைப்பராராஜசேகரமன்னன்வெற்பில்
பஞ்சுமஞ்சும்பதப்பாவைநல்லீர்படைவேள்பகழி
அஞ்சுமஞ்சுங்கயலஞ்சுமஞ்சுங்கடலஞ்சுமஞ்சும்
நஞ்சுமஞ்சும்வெற்றிவேலோவுனதுநயனங்களே. 19

### வேண்பா

பாரார்சொல்லாரார்பறவைக்குலங்கடம்மிற்
சீராருங்கிள்ளைமுதற்செப்பலால்-ஓரா
இரம்பையானந்தரங்கனின்பரங்கனன்பன்
பிரம்பையானந்தரங்கன்பேர். 20

பங்கயமுமேரிகளும்பாவையர்கையும்மணியும்
தங்கவளைசூழுந்தணிகையே-திங்கணுதற்
செந்திலகத்தாள்புனிதன்செல்வன்கடற்கரைசேர்
செந்திலகத்தாள்புனிதன்சேர்பு. 21

சொல்வாரார்வள்ளியுடன்றோய்ந்தருண்முத்தையனுக்கு
வல்வாரார்மானேயென்மையறணை-வில்வாய்ந்த
தெள்ளிருக்கும்வேளூர்சிறுகாலுண்பானுமிசை
புள்ளிருக்கும்வேளூர்புகுந்து. 22

கோலெடுத்துக்கோத்துரத்துங்கோப்பாண்டிமன்னன்வடி
வேலெடுத்துக்கோத்துரத்தில்விட்டிலனே-சால்படுத்த
பூபாலனானாலும்போமோபுராதனத்திற்
கோபாலனானகுணம். 23

### கட்டளைக் கலிப்பா

விதுவையம்பதியோசையைப் பேரிகவிகையெனும் மதன்வில் வில்வண்டேற்றினான், மதுவையம்பதி வேகமோடெய்து குவலய மீதுகைவைக்க வென்னுள்ளனோ, குதுவையம்பதினாலும் புகழ்பெறுங் குமுணன்கன்னன் கொடைகளைமாற்றிய, புதுவையம்பதிவேங்கட ராயன்பாற் புகலிவ்வேளையி னென்றன்கைப்பூவையே. 24

ஆக செய்யுள்-712.

---

## சுப்பிரமணியப்புலவர்

வாரிட்டுவிம்மிப்புடைத்திறுகியிளகிமணிமார்பிடமெலாங்கவர்ந்து
வட்டமிட்டடியிட்டுநாளுக்குநாண்மேல்வளர்ந்துபூரித்துமுத்து
மாலையிட்டிறுமாந்துபட்டவர்த்தனயானைமத்தகத்தோடெதிர்த்து
வாதிட்டுமல்லிகைப்பூச்செண்டினைத்தினம்வாட்டப்படுத்திவரையைப்

போரிட்டுமைந்தர்கண் மனஞ்சூறையிட்டுமேற்புளகித்துவச்சிரரத்நப்
புதுச்செப்பினைத்தோழமைக் கொண்டுபொன்னினைப் பொடியாவராவி
மீதிற், பொட்டிட்டதென்னவேதேமற்படர்ந்துசெம்பொற்சரிகைவேலை
யிட்டுப், புனைதருரவிக்கையையிறுக்கிக் கிழித்துப்புறப்பட்டுவாசனைப்
தாரிட்டுவரவரப்பளபளப்பாகியுயர்தங்கக்கிணத்தையொத்துச் [பூந்
சந்தனம்புநுகுகஸ்தூரிகர்ப்பூரஞ்சவாதுகுங்குமமணிந்து
சந்த்ரகாவிச்சேலைவல்லவாட்டுக்குட்டதும்பியண்ணாந்திடையினிற்
தாங்காதெனக்கனத்தோங்கிமன்மதனுஞ்சலாமிட்டுநிற்கவுந்தான்
சீரிட்டுநின்றுதந்தலைவணங்காமற்றிரண்டபூண்முலைகளுந்தன்
திருமார்பிலணையவோருசிமேலேதவஞ்செய்கின்றதொக்குமென்னுஞ்
சிறுரோமரேகையாள்வந்தாள்பராக்கென்றுசேவித்துநிற்கிறுள்பார்
திகழ்வடுகநாததுரைமெச்சுப்ரதானிசிவசுப்ரமண்ணியராசனே. 1

---

# நையாண்டிப்புலவர்

## விருத்தம்

விற்கம்பத்தடியாலுமடியுண்டான்விண்ணவரைவேலைகொள்ளும்
நற்கம்பத்தடியானுந்தூக்கவசையானூர்நாதன்கோயில்
பொற்கம்பத்தடியினின்றுவன்மீகத்தானையுன்னிப்போற்றினோர்க்குச்
சொர்க்கம்பத்தடியப்பான்மோக்ஷம்பத்தடியாகத்தோற்றுந்தானே. 2

## கட்டளைக் கலித்துறை

செங்கைவரிச்சிலைதங்கமதைச்சம்புத்தீவுதன்னில்
எங்குவைத்தாலுமப்பள்ளிகொண்டான்றமிழ்க்கீவனென்றே
திங்களிரவிதினஞ்சுற்றிக்காக்கத்திரைசுருட்டுங்
கங்கைக்குமுத்தரத்தேயொளித்தானுமைகாதலனே. 3

மேலாடையின்றிச்சவைபுகுந்தாலிந்தமேதினியோர்
நாலாயிரம்படித்தாலுமெண்ணார்நுவல்பாற்கடலோ
மாலானவரணிபொன்னுடைகண்டுமகளைத்தந்தே
ஆலாலமீந்ததுதோலாடைசுற்றுமரன்றனக்கே. 4

வள்ளிகொண்டான்மயிலேறிக்கொண்டான்மதிபோலுமலை
வெள்ளிகொண்டான்விடையேறிக்கொண்டான்விண்ணவர்க்கமுதம்

துள்ளிகொண்டான்புள்ளிமேலறிக்கொண்டான்சுபசோபனஞ்சேர்
பள்ளிகொண்டான்புகழேறிக்கொண்டானென்றுபார்க்கவென்றே. 5

எல்லீசு

செந்தமிழ்ச்செல்வனுமோராயிரந்தலைச்சேடனும்யாழ்
சுந்தரத்தோடிசைவல்லோனும்யாவருந்தோத்திரஞ்செய்
கந்தனைச்சொல்லுங்கவிராமச்சந்த்ரனைக்கண்டுவெட்கி
யந்தரவெற்பிழிபாதாளத்தோடியடங்கினரே. 6

---

# இராமச்சந்திரகவிராயர்

வணக்கம்வருஞ்சிலநேரங்குமரகண்ட
வலிப்புவருஞ்சிலநேரம்வலியச்செய்யக்
கணக்குவருஞ்சிலநேரம்வேட்டைநாய்போற்
கடிக்கவருஞ்சிலநேரங்கயவர்க்கெல்லாம்
இணக்கம்வரும்படித்தமிழைப்பாடிப்பாடி
எத்தனைநாடிரிந்துதிரிந்துழல்வேனையா
குணக்கடலேயருட்கடலேயசுரரான
குரைகடலைவென்றபரங்குன்றுளானே. 7

மாசற்றிடுதிருமேனியின்மறுவுற்றதுபோல
மாரப்பயல்கணைதைத்திடவந்தெய்தனனையோ
காசத்தனைபுண்ணுனதுதுட்டத்தனையளவாய்க்
கையத்தனையானுன்மகண்மெய்யெத்தனைநோமோ
வாசற்படிகடவாதவண்மனதெப்படியானுள்
மதனன்சிலுகறியாதவண்மயலெப்படியானுள்
ஆசைப்படுவாரோபுருடரின்மேன்மடவார்கள்
அருணாசலராயாதமிழறியும்பெருமானே. 8

புல்லுக்கட்டும் விறகுஞ்சுமந்தபேர் பூர்வகாலத்துப்புண்ணியவசத்தினால், நெல்லுக்கட்டும் பணக்கட்டுங்கண்டபின் நீலக்கல்லிற்கடுக்கனும்போடுவார், சொல்லுக்கட்டும்புலவரைக்கண்டக்காற் றூறிப்பாய்ந்து கதவையடைத்தெதிர், மல்லுக்கட்டும் மடையரைப்பாடவோ மலையச்சாரலில்வாழ்பெரியம்மையே. 9

வெண்ணெய்க்கட்டியுஞ்சீனியுமூட்டலாம்
விக்கிக்கொள்வதற்கென்செய்யலாமொரு
பெண்ணைக்கட்டிக்கொடுத்திடலாம்பிள்ளை
பெறுவதற்குமுடன்படுவார்களோ
பண்ணைக்கட்டியமென்மொழியாளுந்தம்
படுக்கைவீட்டில்வந்தாளேயவடனைக்
கண்ணைக்கட்டியணையாமலேன்விட்டீர்
கழனிசூழும்பழனியில்வேலரே. 10

ஏதிலேவறியவர்க்குமினியகவிப்புலவருக்குமிரங்கியந்தப்
போதிலேதனங்கொடுக்குந்தஞ்சைநகர்க்குருவப்பபூபனெற்குக்
கோதிலேகிடந்துழலும்பலரிடத்திற்சென்றுதமிழ்கூறுவண்ணங்
காதிலேயொட்டிட்டுத்தாடையின்மோதக்கடுக்கன்றானிட்டானே. 11

வம்பிறைக்குங் கடம்பிறைக்கும் பெரும்பிறைக்குநிகராகவளர்ந்தவொற்றைக், கொம்பிறைக்குந் தாதையராங் கடனைக்காரோணர் கொன்றைநல்கார், அம்பிறைக்கும் விழிப்பரவையாயர்குழல் கொல்லனுலை யனலிற்காய்ந்த, செம்பிறைக்கும் வெண்பிறைக்குங் கரும்பிறைக்கு மொருத்திதனித்தென்செய்வாளே. 12

மூங்கிலிலேயொளித்திருந்தான்முக்கண்சாமி
முதியகடற்போய்ப்படுத்தான்முகுந்தசாமி
தாங்கமலப்பொகுட்டுறைந்தான்றலைநாற்சாமி
தடவரையிலுழன்றுநின்றான்றகப்பன்சாமி
வாங்கியுண்ணவழிகாத்தான்வயிற்றுச்சாமி
வானருக்கிங்குதவுவரார்மற்றோர்சாமி
ஓங்கியசீர்மயிலையிற்பொன்னப்பசாமி
உதவியவேங்கடசாமியுசிதவேளே. 13

வஞ்சகத்திலொன்றானைத் துதிக்கைமிகத்திரண்டானை வணங்காருள்ளே, அஞ்சரணமூன்றானைமறைபொழி நால்வாயானையத்தனாகித், துஞ்சவுணர்க் கஞ்சானைச் சென்னியணியாறானைத் துகளேழானைச், செஞ்சொன்மறைக்கெட்டானைப் பரங்கிரிவாழ்கற்பகத்தைச் சிந்தைசெய்வாம். 14

மூன்றுவெண்பா

சலமேதோசங்கந்தாபூணாரந்தாமே
கலைதாநாற்புங்கவன்மால்காணாப்—புலவுடைய

கங்கரா கோணா கலாமதியக்கோடீர
சங்கராசோணாசலா. 15

சீரிலங்குமாடகூடவீதிவீறுதில்லையான்
திருவிருக்குமார்பனெங்கடிருமலைக்குமுன்புபோய்
நீரிருந்துமாலைசேருமவன்மறுத்துரைக்கிலென்
னெஞ்சுசொல்லும்வார்த்தையாக நீங்கள்சொல்லும்வண்டுகாள்
வாரியொன்றுபாயிரண்டுமாலைமூன்றுநாலுவேய்
மதியமைந்துகங்குலாறுமாரனேழுவாடையெட்
டாரமொன்பதன்றில்பத்தடங்கலும்மொறுக்குமால்
அத்தனைக்கெலாமிலக்கெனாவியொன்றுகாணுமே. 16

ஓராணைவனத்தேதிருவொண்ணாவனிழற்கீழ்
உறையும்பெருமான்வீதியுலாவும்பவனிக்கே
நேராகநடப்பேன்வளைபறிபோனதுகேட்பேன்
நில்லென்றுதடுத்தால்வகைசொல்லென்றுமறிப்பேன்
போரானையைவிட்டான்முலையீரானையைவிடுவேன்
பொழியம்புதொடுத்தாலிருவிழியம்புதொடுப்பேன்
தோராவழக்கிட்டால் வகைவாராவழக்கிடுவேன்
தொல்லைக்கணைகொண்டோவகைவெல்லப்பெறுவேனே. 17

அடல்கொண்டெழுசூலப்படையாரூர்ப்பெருமானார்
ஐயம்பகரென்றேயெமதகவாசலில்வந்தார்
கடுகும்படிசென்றேபலிகொண்டேயெதிர்நின்றேன்
கைவந்தன மென்றாரிதுகைவந்தனமென்றேன்
மடவன்னமதென்றாரிதுமடவன்னமதென்றேன்
வல்லோதனமென்றாரிதுவல்லோதனமென்றேன்
கொடுவந்தனமென்றாரிதுகொடுவந்தனமென்றேன்
கொள்ளார்பலிசொல்லாரவர்கோட்பாடறியேனே. 18

வீமனுக்கு மைந்தனார் வேதனாகும் வேதனுக்கு மைந்தனா ரீசனாகும், காமனுக்கு மைந்தனார் வீமன்தம்பி கந்தனுக்கு மாமனார் காமன்றானே, மாமனுக்குமுன் றமையன் றந்தைகாலன் வையகத்திலிம் முறைமை வழங்கலாலே, ராமனுக்குச் சீதைதங்கையாகவேண்டும் ராவணனுக்குத் தகப்பன் ராமன்றானே.

(வீமன் - கருடனுக்கு இறைவனாகி திருமால்) (வே-மூங்கில்) (மைந்தன் - சிவன்) (காமன் - கற்பகத்துக்கரசனாகிய இந்திரன்)

(வீமன் தம்பி - அர்ச்சுனன்) (கந்தனுக்குமாமன்-காமன், இந்திரன்) (மாமன்-குதிரைக்கிறைவனுகியநகுலன்) (தமயன்-தருமன்) (தந்தை-இயமன்) (இராமன் - இரவுக்கரசனுகிய சந்திரன்) (இராவணன்-இருள்நிறமுடைய மன்மதன்.) 19

வெண்பிள்ளைப் பிறைநோக்கும் கரும்பிள்ளைக் குறிபார்க்கும் வேதாவென்னும், மண்பிள்ளைதிறந்தாற்றுங் கிளிப்பிள்ளை மொழி பயிற்றுமடவார்க்கெல்லாம், என்பிள்ளைசிறுபிள்ளை யெனக்கவளோ வொருபிள்ளை யெளியேன்பெற்ற, பெண்பிள்ளைபடுந்துயரம் பெரிய பிள்ளைக்காரெடுத்துப்பேசுவாரே. 20

விறகுதறிக்கக்கறிநறுக்கவெண்சோற்றுப்புக்கடகுவைக்கப்
பிறகுபிளவுகிடைத்ததென்ருலாருகப்பிளந்துகொள்ளப்
பறகுபறகென்றேசொறியப்பதமாயிருந்தபாக்குவெட்டி
இறகுமுளைத்துப்போவதுண்டோவெடுத்தீராயிற்கொடுப்பீரே. 21

கட்டளைக் கலித்துறை

இரவலனேயுனக்கில்லாததென்னவிதயமென்ன
பரவுணவேதுசுவையற்றதென்னசொற்பான்மையென்ன
தரவுரைசெய்திடவென்ருனதற்கொன் றுஞ்சாற்றிலன்யான்
வரதிருவேங்கடநாதாவென்றேன்பொன்வழங்கினனே.

இல்லாததென்ன-திரு, இதயமென்ன-வேம், உணவேது-கடன், சுவையற்றதென்ன-நா, சொற்பான்மையென்ன-தா (இஃதிற் போந்த பொருள் திருவேங்கடநாதா) வென்பதாம். 22

விருத்தம்

கல்லாதவொருவனை நான்கற்ருயென்றேன்
காடெறியுமவனை நாடாள்வாயென்றேன்
பொல்லாதவொருவனை நானல்லாயென்றேன்
போர்முகத்தையறியானைப் புலியேறென்றேன்
மல்லாரும்புயமென்றேன் சூப்பற்ருேளை
வழங்காதகையனை நான்வள்ளலென்றேன்
இல்லாதுசொன்னேனுக்கில்லையென்ருன்
யானுமென்றன்குற்றத்தாலேகின்றேனே. 23

ஆவீனமழைபொழியவில்லம்வீழ
அகத்தடியாள்மெய்நோவவடிமைசாவ
மாவீரம்போகுதென்றுவிதைகொண்டோட
வழியிலேகடன்காரர்மறித்துக்கொள்ளச்

சாவோலைகொண்டொருவனெதிரேசெல்லத்
தள்ளவொண்ணுவிருந்துவரச்சர்பந்தீண்டக்
கோவேந்தருழுதுண்டகடமைகேட்கக்
குருக்களோதட்சணைகள்கொடுவென்றாரே. 24

கல்லைத்தான் மண்ணைத்தான்காய்ச்சித்தான்குடிக்கத்தான் கற்பித்தானு, இல்லைத்தான்பொன்னைத்தானெனக்குத்தான் கொடுத்துத் தானிரட்சித்தானு, அல்லைத்தான்சொல்லித் தானுரைத்தானேவத்தானையோவெங்கும், பல்லைத்தான்றிறக்கத்தான்பதுமத்தான் புவியிற்றான்பண்ணினானே. 25

வஞ்சகர்பானடந்தலைந்தகாலிற்புண்ணும்
வாசறுமுட்டுண்டதலையிற்புண்ணுஞ்
செஞ்சொல்லைநினைந்துருகுநெஞ்சிற்புண்ணுந்
தீருமென்றேசங்கரன்பாற்சேர்ந்தேனப்பா
கொஞ்சமல்லபிரம்படியின்புண்ணும்வேடன்
கொடுங்காலாலுதைத்தபுண்ணுங்கோபமாகப்
பஞ்சவரிலொருவன்வில்லாலடித்தபுண்ணும்
பாரென்றேகாட்டிநின்றான்பரமன்றானே. 26

கள்ளிக்கேன் முள்வேலிகழுதைக்கேன்கடிவாளங் கறுப்பில்லாத, உள்ளிக்கேன் பரிமளங்களுவர் நிலத்துக்கேன்விதைக டொடித்துப் போடும், சுள்ளிக்கேன் கோடாலிதுடைப்பத்திற்கேன் கவசஞ்சும்மா போகும், பள்ளிக்கேனதிவீர மழவரங்கபூபனெனும் பட்டந்தானே. 27

கயக்காவிநாறுங்குழம்பிற்பிரசண்டா
காரார்கொடைச்செங்கையாரோதன்மைந்தா
இயக்காநின்மார்பிற்செழும்புன்னையந்தார்
இப்போதுநீநல்கிலென்பேதைமார்பில்
சயக்காமவேளம்புதையாதுமுத்துத்
தாமஞ்சுடாசந்தனம்பூசினாலும்
செயக்காதுவேயோசெவிக்கும்பொறுக்கும்
தீயென்னமீளாதுதிங்கட்கொழுந்தே. 28

சொன்னமன்ன மாடைதந்தான் வீதியில்வெற்றிலை மடித்துச் சுருளுந்தந்தான், கன்னவின்மோதிரந்தந்தான் சரப்பணிதந்தானிரட்டைக் கடுக்கன்றந்தான், செங்நெல்விளையூர்தந்தான் பேர்தந்தான் மல்லையில்வாழ் சிவந்தானுங்கட், கென்னதந்தானென்றவர்கட் கெத்தனையுத்தரந்தந்தானியம்பத்தானே. 29

## நடுவெழுத்தலங்காரம்

அத்திரம்வேலாவலயமிராசியொன்றிற்
கமைந்தபெயர்மூன்றினிடையக்கரத்தால்
மெத்தநடுக்குற்றுனைவந்தடைந்தேனிந்த
விதனமகற்றிடுமற்றையெழுத்தோராறில்
பத்துடையானைத்தடிந்துபெண்ணாச்செய்து
பரிவினுகர்வோனிருதாள்பணிந்துபோற்றும்
சித்தசனேதெளியசிங்கன்றவத்திற்றோன்றுஞ்
சீதாராமப்ரபலதியாகவானே.

அத்திரம்-பகழி, வேலாவலயம்-கடல், இராசி-கன்னி, இவற்றி னடுவெழுத்துகடன். மற்றையவெழுத்து - பழி - கல்-கனி-பழியால் இராவணனைக்கொன்ற கல்லைப் பெண்ணாகச்செய்து சவரியின் கனியைத்தின்றவன்-திருமால். 30

கல்லாலயமாந்தேவருமாங்கழுதைகசடர்பொதிசுமக்குங்
கடாவோவுழுதுபயிரிடற்காங்கட்டம்பன்றிக்கிரையாகும்
புல்லேறீசர்வாகனமாம்பொதியுஞ்சுமக்கும்பிணமெனிலோ
பூசிமுடித்துமறையோர்க்குப்பொருளையீந்துபுகழெய்தும்
மல்லார்குட்டிச்சுவரெனிலோமாடுமுரைஞ்சுமறைவாகும்
மதியாத்துடைப்பந்தானெனிலோமாடகூடந்தனைவிளக்கும்
அல்லாதுலுத்தன்றனக்கிணையாயாரையுரைப்பேன்புவிமீதில்
அவனைக்குறித்துக்கூறுமிடத்தவனுக்கவனேசரிதானே. 31

வீரவெண்டையப்ரதாபர்தியாகராசர்கமலைசூழ்
வீதிகண்டுபவனிகண்டுவிந்தைகண்டுபந்தியாய்த்
தூரநின்றபூவைகளடுத்துநின்றகிள்ளைகாள்
துன்பமேயலாதுபாவிசுகமறிந்ததில்லையால்
மாரனம்புபட்டகாயமாறுதில்லையிரவெலாம்
மங்கைமார்தொடுத்தசண்டைமாறுதில்லையென்செய்வேன்
ஆரிருந்துமுதவியில்லையென்றனாசையொழியுமோ
அதுவுமில்லைவிதியைநொந்துமாவதில்லைகாணுமே. 32

## சத்தபங்கி

திமிரமருதபுலாதிகளேதருதேடரிதாய்மாறுஞ்
செனனமகாமால்வசமேமதமுறுசிறுமையின்மதியாலே

குமரசிகாமணியேகனிவாயருள்கூடெனவேகூறுங்
குருபரகோலாகலனேவிதியொடுகுறுகியமிடிதீராய்
நமதுவிநாயகதேவசகோதரநாடொறுமேதேறும்
நவிமகள்சேர்வேடுவனேபுதுமணநறுமலர்புனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணராடவனேமீறும்
அரகரவேலாயுதனேமுதுமறையறுமுகமுருகோனே. 33

திமிரமரூதபுலாதிகளேதரு-தேடரிதாய்
மாறுஞ்செனனமகாமால்வசமே-மதமுறுசிறுமையின்மதியாலே
குமரசிகாமணியேகனிவாயருள்-கூடெனவே
கூறுங்குருபரகோலாகலனே-விதியொடுகுறுகியமிடிதீராய்
நமதுவிநாயகதேவசகோதர-நாடொறுமே
தேறுங்நவிமகள்சேர்வேடுவனே-புதுமணநறுமலர்புனைமார்பா
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணர்-ஆடவனே
மீறும்மரகரவேலாயுதனே-முதுமறைஅறுமுகமுருகோனே.

நவபங்கி

அரிமருகாகருணாலயனேதிடஆரணனேபோதன்
னரியிமையோர்சூழ்புனிதாபுலவடரயிலமர்பொற்கரனே
கரிமுகனேயசகோதரனேபடிகாரணனேநாதங்
கதியுறவேவானவனேநலமிகுகயிலையனற்குருவே
குரவலர்நீபமணிப்புயனேவடிகூரமுதேயோதுங்
குருமணிசேர்மார்பினனேயுலகருள்குயிலுதவுத்தமனே
மரகதமாமயில்வாகனனேகொடிவாரணனேகோதின்
மதியகமேவாழ்குமராகுலவியமயிலமலைக்குகனே. 34

அரிமருகாகருணாலயனே-திட-ஆரணனே [னே
போதன்னரியிமையோர்சூழ்புனிதா-புலவடர்-அயிலமர்பொற்கர
கரிமுகனேயசகோதரனே-படி-காரணனே
நாதங்கதியுறவேவானவனே-நலமிகு-கயிலையனற்குருவே
குரவலர்நீபமணிப்புயனே-வடி-கூரமுதே
ஓதுங்குருமணிசேர்மார்பினனே-உலகருள்-குயிலுதவுத்தமனே
மரகதமாமயில்வாகனனே-கொடி-வாரணனே
கோதின்மதியகமேவாழ்குமரா-குலவிய-மயிலமலைக்குகனே.

சத்தபங்கியின் பிரிவு

கட்டளைக் கலித்துறை

திமிரமறுதபுலாதிகளேதருதேடரிதாய்
குமரசிகாமணியேகனிவாயருள்கூடெனவே
நமதுவிநாயகதேவசகோதராநாடொறுமே
அமரர்பிரானருள்குஞ்சரிதோள்புணராடவனே. 1

கோச்சகம்

தேடரிதாய்மாறுஞ்செனனமகாமால்வசமே
கூடெனவேகூறுங்குருபரகோலாகலனே
நாடொறுமேதேறுங்கவிமகள்சேர்வேடுவனே
ஆடவனேமீறும்மரகரவேலாயுதனே. 2

கலிவிருத்தம்

மாறுஞ்செனனமகாமால்வசமே, கூறுங்குருபரகோலாகலனே
தேறுங்கவிமகள்சேர்வேடுவனே, மீறும்மரகரவேலாயுதனே. 3

சிந்தடிவஞ்சி விருத்தம்

மதமுறுசிறுமையின்மதியாலே, விதியொடுகுறுகியமிடிதீராய்
புதுமணநறுமலர்புனைமார்பா, முதுமறையறுமுகமுருகோனே. 4

குறளடிவஞ்சி விருத்தம்

சிறுமையின்மதியாலே, குறுகியமிடிதீராய்
நறுமலர்புனைமார்பா, அறுமுகமுருகோனே. 5

வெண்பா

தேடரிதாய்மாறுஞ்செனனமகாமால்வசமே
நாடொறுமேதேறுநவிமகள்சேர்-வேடுவனே
ஆடவனேமீறுமரகரவேலாயுதனே
கூடெனவேகூறுங்குரு. 6

நவபங்கியின் பிரிவு

அரிமருகாகருணாலயனே, கரிமுகனேயசகோதரனே
குரவலர்நீபமணிப்புயனே, மரகதமாமயில்வாகனனே. 1

புலவடரயிலமர்பொற்கரனே, நலமிகுகயிலையனற்குருவே
உலகருள்குபிலுதவுத்தமனே, குலவியமயிலமலைக்குகனே. 2

### கட்டளைக் கலித்துறை

அரிமருகாகருணாலயனேதிகழாரணனே
கரிமுகனேயசகோதரனேபடிகாரணனே
சுரவலர்நீபமணிப்புயனேவடின்ரமுதே
மரகதமாமயில்வாகனனேகொடிவாரணனே. 3

### கோச்சகம்

ஆரணனேபோதனரியிமையோர்சூழ்புனிதா
காரணனேநாதங்கதியுறவேவானவனே
கூரமுதேயோதுங்குருமணிசேர்மார்பினனே
வாரணனேகோதின்மதியகமேவாழ்குமரா. 4

### சந்த விருத்தம்

போதன்னரியிமையோர்சூழ்புனிதாபுலவடரயிலமர்பொற்கரனே
நாதங்கதியுறவேவானவனேநலமிகுகயிலையனற்குருவே
ஓதுங்குருமணிசேர்மார்பினனேயுலகருள்குயிலுதவுத்தமனே
கோதின்மதியகமேவாழ்குமராகுலவியமயிலமலைக்குகனே. 5

### கலிவிருத்தம்

போதன்னரியிமையோர்சூழ்புனிதா
நாதங்கதியுறவேவானவனே
ஓதுங்குருமணிசேர்மார்பினனே
கோதின்மதியகமேவாழ்குமரா. 6

### குறளடிவஞ்சி விருத்தம்

அயிலமர்பொற்கரனே, கயிலையனற்குருவே
குயிலுதவுத்தமனே, மயிலமலைக்குகனே. 7

திடவாரணனே, படிகாரணனே
வடிகூரமுதே, கொடிவாரணனே. 8

### வெண்பா

ஆரணனேபோதன்னரியிமையோர்சூழ்புனிதா
கூரமுதேயோதுங்குருமணிசேர்—மார்பினனே
வாரணனேகோதின்மதியகமேவாழ்குமரா
காரணனேநாதங்கதி. 9

ஆகசெய்யுள்-772.

---

# மதுரகவிராயர்

---

## வெண்பா

துங்கவரைமார்பா துரைரங்கபூபதியே
இங்கோர்புதுமையியம்பக்கேள்-பங்கயக்கை
ஆயிழைக்குநான்குநுதலைந்துகுழையாறுமுலை
மாயவிழியேழாமதி. 1

அந்திவெடிமுல்லையரும்பெடுத்துநான்வந்தேன்
விந்தையதாநாயகற்குமெல்லியலே-சுந்தரஞ்சேர்
செண்டுகட்டவேண்டுந்திருவிளக்கிலேதிரியைக்
கொண்டுவந்துபோட்டுக்கொளுத்து. 2

சித்திரமாமண்டபங்கடென்றல்வருசாளரங்கள்
பத்தியுலாவும்பளிக்கறைகள்-இத்தனைவிட்
டிக்குச்சிலையானிருப்பிடமென்றார்சொன்னா
ரிக்குச்சிலையானுக்கின்று. 3

நீளத்திரிந்துழன்றாய்நீங்காநிழல்போலே
நாளைக்கிருப்பாயோநல்குரவே-காளத்தி
நின்றைக்கேசென்றக்கானீயெங்கேநானெங்கே
இன்றைக்கேசற்றேயிரு. 4

## விருத்தம்

உலங்கொண்ட மணிப்புயனே பிரம்பூரானந்தரங்கா வுன்பாற் செல்ல, வலங்கொண்ட கருடனையா மிடங்கண்டோ மெழினரையான் வலத்தேகண்டோம், பொலங்கொண்ட மணிமாடமீமிசையிற் புயறவழும் புதுவையென்னும், தலங்கண்டோ நினதுநகைமுகங் கண்டோமினி வேண்டுந்தனங் கண்டோமே. 5

---

# இராமகவிராயர்



கார்படைத்தகரதலத்தான்றுரைதிருவேங்கடமளித்தகன்னுவெங்கும்
பேர்படைத்தவானந்தரங்கமகிபாலாநின்பிரம்பூர்நாட்டி
னேரிழைக்குவிழியேழுமுலையாறுகாதைந்துநெற்றிநான்கு
பாரிடத்திலிப்புதுமைகண்டுவந்தேனிதன்பயனைப்பகர்ந்திடாயே. 6

கொக்குப்பறக்கும்புறாப்பறக்குங்குருவிபறக்குங்குயில்பறக்கும்
நக்குப்பொறுக்கிகளும்பறப்பர்நானேன்பறப்பேனராதிபனே
திக்குவிசயஞ்செலுத்தியுயர்செங்கோனடாத்துமரங்காநின்
பக்கமிருக்கவொருநாளும்பறவேன்பறவேன்பறவேனே. 7

மூவொன்தென்பதிலோர்நாளில்லைமொய்வனத்திற்
றூவுந்தனிமிருகந்தானில்லை-நேரே
வளையாநடையில்லைவாரிறுகவிம்மும்
முலையாளையான்முயங்குதற்கு. 8

சென்னபுரிவந்துசிவனுபினேனல்ல
அன்னமதுகாணுதவனுகி-மன்னுசிரங்
கைக்கொண்டரைச்சோமன்கட்டிச்சடைமுறுக்கி
மெய்க்கண்டநீறணிந்துமே. 9

தனம்பொன்பணம்படைத்தசம்பிரபரப்பின்னோர்
முனம்பிச்சைகள்வனிலமூட்டை-கனம்பெற்ற
மீதலத்தும்போற்றுகின்றவேதாசலாநினைப்போல்
ஈதலத்தமார்கிலரேயென். 10

சேராநாளெல்லாம்வெண்டிங்களனமேசேர்ந்தால்
ஆராவமுதாமென்னுச்சரியம்-ஓராமல்
நானிவாசைமேவநரசையன்றந்தருளும்
சீனிவாசையன்மணஞ்செய்து. 11

அஞ்சம்பினலெய்துமன்னநடைக்கன்னிகையை
அஞ்சம்பினலெய்யுமப்பாவி-நெஞ்சமுறும்
காவிக்கணந்தார்கலசைவேதாசலனே
காவிக்கணந்தார்கடந்து. 12

### விருத்தம்

மதுமேவுகுவளையணிபுயனென்றேனே
மருவனஞ்சூழ்கலசைநகர்மன்னென்றேனே
முதுநீதிதெய்வசிகாமணிமாலுக்கு
மூத்தவொருமகனெனநான்மொழிந்திட்டேனே
பதுமாசனத்திமகனென்மேற்சண்டை
பண்ணுகின்றானவனாற்படுந்துன்பத்தால்
இதுவேதாசலமென்றேனிதற்கென்னன்னை
ஏதேதோவைதுபழியிடுகின்றாளே. 13

பூங்கமலன்கலசை வேதாசலன்போ லுருவமைக்கும்பொற்பிலா னென், ருங்கயலார்சொலக்கேட்டு வாணியரிபாலுரைக்கவடைந்தாளன் னேன், தூங்குவனம்போயிருந்தா னரனிடத்திற்சொலப் பித்தாய்ச் சுழலலுற்றான், ஏங்கியந்தத் திறங்கற்பானிவனாவில் வீற்றிருந்தா ளெழிற்கண்மானே. 14

ஆக செய்யுள்-786.

---

## பொது

# பலவித்துவான்கள் பாடல்

### கட்டளைக்கலித்துறை

மாப்பிட்டெனுஞ்சிறுதுட்பிட்டுக்காகமண்ணைச்சுமந்தே
ஆப்பிட்டுக்கொண்டடிப்பட்டசொக்கேசருக்காசைப்பட்டுச்
சேப்பிட்டுமைபிட்டுபூமாலைகத்தந்திமிர்ந்துமஞ்சட்
காப்பிட்டுவாழ்க்கைப்பட்டாள்கூடல்வாழுங்கயற்கண்ணியே. 1

காமாகயற்கண்ணிகோபம்பொறுளென்றன்கண்பனிநீர்
சீமான்கரத்திற்றுடைக்கரிதேசெகமேழுமெச்சும்
கோமான்கரத்திற்குனிசிலைராயன்குகன்சிலம்பில்
மாமாவின்காலல்லவேமன்னவாவுன்மலர்க்கரமே. 2

கைத்தலந்தன்னிற்பசும்பொன்வளையல்கலகலெனச்
சத்தமொலித்திடநூபுரம்பாதச்சதங்கைகொஞ்சத்

தத்திமியென் றுநடஞ்செய்சம்பீசர் தஞ்சந்நிதிப்பெண்
செத்தகுரங்கைத்தலைமேற்சுமந்து திரிந்தனளே. 3

பரிக்கொம்புபோலப்பகவான் சரிதைபகர்ந்திடினும்
உரிக்கம்பதாயினுமீயார்கடனுடனேடிச்சென்று
கரிக்கொம்புபோன்முலைமின்னுருச்சீவரக்கன்னியர்கை
நரிக்கொம்புதானுமுண்டோவேங்கடாசலநாயகனே. 4

கேளந்தநாளையின்மைந்தாநின்னையரைக்கிட்டிமத
வேள்வந்துபூசலிடமதிகாயழிவருண்டெனது
தாள்வந்துபற்றிமுன்வாய்புதைத்தேநின்றுதாழ்மைசொன்ன
நாளந்தநாளல்லவேயிந்தநாளந்தநாயகற்கே. 5

கற்றனவொக்கும்புதியனகேட்பனகண்டபன்னுள்
உற்றனவொக்குமொருபகற்காண்பனவொன்னலரைச்
செற்றனவொக்குஞ்சிறுநகைசெய்வனதீயர்செய்யப்
பெற்றனபெற்றியெண்ணுன்மறப்பானெம்பெருங்குன்றனே. 6

பக்குவமாகக்கவிநூறுசெய்துபரிசுபெற
முக்கரணம்மெதிர்பல்காலும்போட்டுமுயன்றிடினும்
அக்கடபோவெனும்லோபரைப்பாடியலுத்துவந்த
குக்கனையாண்டருள்வில்வவனத்துக்குயிலம்மையே. 7

பொல்லாபதப்பயலெங்நேரமுஞ்செய்யும்போருமெனைக்
கொல்லாமற்கொல்லுமதிபுங்கடலுங்குயிலுமிவை
எல்லாந்தொலைந்ததென்றெண்ணினன்பாவியிப்போதுன்மனம்
கல்லாயிருக்குமென்றெவ்வளவேனுமுன்கண்டிலனே. 8

காலையுபாதிமலஞ்சலமாமன்றிக்கட்டுச்சியிற்
சாலவுபாதிபசிதாகமாகுமுற்சஞ்சிசமாம்
மாலையுபாதிதுயில்காமமாமிவைமாற்றிவிட்டே
ஆலமுகந்தருளம்பலவாவென்னையாண்டருளே. 9

நாலடிவள்ளுவராமேயிப்பாலைநடந்தபெருங்
காலடிமேலடிமானடியேகட்டுரலிற்பட்டும்
பாலடிசில்வெண்ணெயுண்டோனரங்கன்பனிவரையில்
வேலடிமுள்ளுக்குபாயமிட்டேகும்விழைவுநன்றே. 10

புலியைக்கொடுத்துப்பசுவாங்கியோர்புலிப்பூங்குழலாள்
புலியைப்பசுதின்னவிட்டுப்புலியைத்திணகற்றிப்

புலியையரைத்துப்பலகாரஞ்செய்துபொருந்துமுகப்
புலியைக்களிப்புடன்சாறுவைத்தாடன்புருடனுக்கே. 11

(புலி-வேங்கை-பொன்) (புலி-மயிர்ச்சாந்து) (புலி-புல்) (புலி-வரி நெல்) (முகப்புலி-முகத்தாமரை (சாறு-திருவிழா.)

வேளாமழகன்றுரைசீதக்காதியென்வீட்டிலொரு
நாளாகிலும்வரக்காண்கிலனேயெந்தநாளுமவன்
தோளாலணையுஞ்சுகவாலிபத்தைத்துணிக்கவொரு
வாளாப்பிறந்தனையேமைந்தனேயென்னவாயுனக்கே. 12

நடந்தாளொருகன்னிமாராசகேசரிநாட்டிற்கொங்கைக்
குடந்தானசையவொயிலானதுகண்டுகொற்றவருந்
தொடர்ந்தார்சங்யாசிகள்யோகம்விட்டார்சுத்தசைவரெல்லாம்
மடந்தானடைத்துச்சிவபூசையுங்கட்டிவைத்தனரே. 13

நாலாகலைதெரியேகம்பவாணர்நன்னாட்டில்வளர்
சேலாகக்கண்கள்படைத்தபெண்ணேநின்றிகழும்வயி
றாலாகவுமல்குற்பாம்பாகவுமவ்வணையின்மிசை
மாலாகயான்பள்ளிகொள்ளவந்தேனுன்றன்மாளிகைக்கே. 14

அரவிந்தநண்பன்சுதன்றம்பிமைத்துனனண்ணன்கையில்
வரமுந்தியாயுதம்பூண்டவன்காணுமற்றங்கவனே
பரமன்றிகிரியையேந்தியமைந்தன்பகைவன்வெற்பை
உரமென்றெடுத்தவன்மாற்றான்றன்சேவகனொண்டொடியே. 15

சங்கரன்றேவிதமையன்மனைவிதனக்குமுன்னும்
மங்கையரேறியவாகனங்காணுமற்றங்கவளோ
கொங்கைகளீரைந்துடையவளாயிக்குவலயத்தில்
எங்குந்திரியும்வயிரவனூர்தியென்றேநினையே. 16

மாத்தானைப்பித்தனைமாடேறுவானைமதகரித்தோல்
போர்த்தானைவேதப்பொடிபூசுவானையிப்பூதலத்தென்
ஆத்தாளுடனெதிர்த்தம்பலத்தேயென்றுமாடிநிற்குங்
கூத்தாடிப்பையலுக்கோமகளேமயல்கொண்டனையே. 17

கானவர்தான்றினைகொய்தனரோகண்டகண்ணலவோ
தேனமர்வண்டினங்காள்கிள்ளைகாள்செழுங்கானைவிட்டுப்
போனவன்றானல்லவோநெடுங்கானிப்புனமல்லவோ
நானவன்றானல்லவோசொல்லவேண்டுநடுக்கண்டதே. 18

தாராளனெங்கடிருநின்றைச்சேடன்சயிலத்தின்பால்
நீரார்முகிற்குழற்பெண்பேதையைவிட்டுநீபிரிந்தால்
சீராமனில்லையமுதில்லையஞ்சனைச்செல்வனில்லை
காரார்பொழில்வளர்காழிப்பிரானில்லைகாப்பதற்கே. 19

அம்பளவெவ்வளவவ்வளவேவிழியார்ந்தகொவ்வைச்
செம்பளமெவ்வளவவ்வளவேயிதழ்சீர்கொள்வஞ்சிக்
கொம்பளவெவ்வளவவ்வளவேயிடைகூறெனுமிச்
சம்பளமெவ்வளவவ்வளவேதனந்தையனுக்கே. 20

நச்சணிகண்டத்தாரூர்த்தியாகர்நளினவெற்பில்
கச்சணியும்முலைமாதேயிதுவென்னகாரணமோ
அச்சுதனுமத்திரண்டாமெழுத்திலரையெழுத்தில்
வச்சிரபாணிமனையாள்பகைவந்துவாய்த்ததுவே. 21

அச்சுதன்-அரி, இரண்டாமெழுத்து-ரி, அதில்-அரையெழுத்து பாதிரி, வச்சிரபாணி-மனைவி, சசி-சந்திரன். (பகை-பாம்பு.)

போமேபொழுதுவருமேமதியம்புரண்டெனங்கம்
வேமேமதனன்சரந்தைக்குமேதைத்தபுண்வழியிற்
பூமேவுதென்றல்புகுமேயென்பெண்புத்திபோய்விடுமே
கோமேதகப்புயலேமழவாபள்ளிகொண்டவனே. 22

பாலினுமின்சொற்குயிலினுமென்மொழிப்பாவைநல்லாண்
மேலினுங்காமன்சரந்தைக்குமேவடவேங்கடம்விட்
டாலினும்வேலைநடுவினும்பாம்பினுமாத்துரத்துக்
கோலினுங்கண்வளர்வாய்மழவாபள்ளிகொண்டவனே. 23

மெய்யினுநல்லவரீனம்பொரூர்மயிர்வீழ்தொடக்கம்
செய்யினுமானக்கவரியுய்யாசிற்றினக்கயவர்
வையினும்வாழ்வர்தகரையக்காதுமயிருமொக்கக்
கொய்யினும்பின்செலுமேமழவாபள்ளிகொண்டவனே. 24

மாலாக்கியென்னைப்பெருவயதாக்கியென்மார்பின்முலை
பாலாக்கியங்கம்பசுநரம்பாக்கியப்பாவையரை
மேலாக்கிச்சிக்குவிளக்கெண்ணெயாக்கியென்மேனியெங்கும்
தோலாக்கவோமகனேபிள்ளையாய்வந்துதோன்றினையே. 25

சதிராயிருந்ததிமாமிமன்மதன்சற்பனைசெய்
தெதிராளியாயைங்கணைதூவவானத்திருந்துகனல்

மதிவாரிவீசவினைவைமறந்துமதிமயங்கிப்
பதினுயிரங்கொட்டைப்பாக்காயிருந்தனள்பைங்கொடியே. 26
பதினுயிரங்கொட்டைப்பாக்கு-அம்மணம்

அன்பட்டதிக்கெக்கும்போற்றுந்தென்கோட்டுக்கதிபதியாய்
பொன்பட்டஞ்சூடும்ரகுநாதபூபவிப்பூதலத்தே
நின்பட்டமேபட்டநீயேதுரைமற்றிந்நீணிலத்தோர்
தன்பட்டமென்பட்டந்தோலாலடிப்படுந்தம்பட்டமே. 27

சேமன்புதல்வன்செழுங்குன்றவேலன்செழுங்கிரியில்
காமன்பகைவன்கரிமுத்துமாகினங்கைவலவா
பூமன்கணேயுமதியுமிவ்வாடையும்பூசலிட
மாமன்றமையன்றகப்பனென்றேவஞ்சிவாடுவளே. 28

(சேமன் - இடபவாகனன்) (காமன்-கரி - இந்திரனூர்தியாகிய-மேகம்) (மாமன்-நகுலன்-அவன் தமையன்-தருமன்.)

சூலேறிச்சங்கமடவார்குடையுந்துறைக்கொதுங்கி
வேலேறுங்கண்ணியர்கைக்குடநீர்புக்குமீண்டுமுழுச்
சாலேறிமுத்தந்தனேயீனுந்தண்வயலூரனம்பால்
மாலேறுவான்பரிமாவேறினனடிமாமயிலே. 29

பாட்டுக்குப்பாத்திரனல்லோரைப்பாடிப்பதம்பெறலாம்
மோட்டுக்குலாமரைப்பாடிலென்னுமுழத்துண்டமுண்டோ
வீட்டுக்குச்சோற்றுக்குண்டோவெள்ளைவாய்க்கொருவெற்றிலையோ
ஏட்டுக்குச்சேதங்கண்டாய்வெள்ளைநாவலிருப்பவனே. 30

கெலிக்குஞ்சிங்கத்துக்கும்யானைக்கும்வெற்றிக்கெருடனுக்கும்
வலிக்குறுசிங்கியரவுக்குநண்டுக்கும்வன்கவிக்கும்
புலிக்குஞ்செம்மானுக்குஞானிக்குமூடர்க்கும்பூனைக்கும்வீட்
டெலிக்குஞ்சங்காத்தமுண்டோவெள்ளைநாவலிருப்பவனே. 31

கலங்காதவீரியரானுலும்போகின்றகாலம்வந்தால்
நலங்காமலேவெல்லமாட்டுவரோவிந்தானிலத்தில்
சலங்காணுங்கோட்டைமதிலேழ்கலைபத்துத்தானிருந்தும்
இலங்காபுரிநின்றதோவெள்ளைநாவலிருப்பவனே. 32

எறிக்குமதிச்சடையண்ணமலையரெழிற்கிரியில்
பறிக்கின்றபூவைமிதிக்கப்பொருளந்தப்பாதத்தினுல்

பொறிக்கண்பிசாசுகணெற்களைத்தூவிப்பொரிபொரித்துக்
கொறிக்கின்றபாலையிலெப்படிபோயினள்கோமளமே. 33

திரைகடலோடித்திரவியந்தேடென்றுசெப்புமௌவை
உரைபழுதன்றெனச்சோர்ந்தாள்கழுக்குன்றத்தோர்மடமான்
அரைபனிநீர்ச்சந்தனங்கொண்டுபாங்கியாற்றியபின்
இரைகடல்போய்வரவெத்தனைநாளென்றெழுந்தனளே. 34

மேகம்பிறைசிலைவேல்குமிழ்வள்ளைவெண்முத்தந்தொண்டை
பூகம்பசுங்கணைதேனுமிழ்காந்தள்பொற்பாலிலைநூல்
நாகங்கதலியலவன்வரானன்னளினமுண்டு
மாகம்பொழிற்றிருத்தில்லையிலேயொருவல்லியிலே. 35

இளந்தத்தையேநல்லமுதத்தையேபுசித்தென்கரத்தில்
வளர்ந்தத்தையாதுமுணர்ந்திலையேமயலாகிமனந்
தளர்ந்தத்தையேயென்றிருவரங்கேசற்குச்சாற்றச்சொன்னால்
அளந்தத்தையேயளந்தாய்பின்னையாதுமளந்திலையே 36

ஆயத்துறையிற்பிறந்துவந்தந்தணர்பால்குடித்து
மாயக்கண்வேசையிடத்தேவளர்ந்துவண்ணானொருநாள்
ஏயப்புலவரிடத்தெட்டுநாள்செட்டியேனென்றுபின்
போயக்கசாலைபுகுந்தனள்காணந்தப்பொய்மகளே. 37

பூச்சிலைக்கன்னற்கைச்சேஷாசலேந்த்ரன்பொருப்பிடத்தே
காச்சியபாலைக்குடிபோவென்றேனந்தக்காரிகையும்
பேச்சிலெத்துக்கள்ளிபின்கைகைராமற்குமுன்சொன்னதாய்
வாய்ச்சுதென்றேநடந்தாள்பாலையானவனந்தனிலே. 38

தோப்பிடுவாரில்லைதென்றல்வராமற்சுடுமதிக்குக்
காப்பிடுவாரில்லைகாமன்வராமற்கருங்குயில்வாய்க்
காப்பிடுவாரில்லைதென்னரங்கேசர்க்கபயமென்று
கூப்பிடுவாரில்லையேவண்டுகாளென்குறைசொல்லியே. 39

அணியார்கடுக்கைநறுந்தும்பைகங்கையறுகுடனே
பணியார்கடாடவிக்கச்சாலைநாதர்பனிவரையில்
தணியாதமாமதப்பேய்பிடித்தாடுமித்தையலுக்கு
மணியாட்டினால்விடுமோசொல்லுவீரிந்தமாநிலத்தே. 40

பாதாதிகேசமுதலாயிவளைப்படைத்தமலர்
வேதாமருங்குல்வெளிவைப்பனோவிரிபூதலத்துள்

ஆதாரமின்றியிரண்டிளநீரேந்தாநிற்குமோ
ஏதாகிலுஞ்சற்றங்கில்லாதிராதிடையேந்திழைக்கே. 41

குணமிருந்தாலுங்குலமிருந்தாலுங்கொழுந்தமிழின்
மணமிருந்தாலுமதியிருந்தாலும்வழுத்திடுவங்
கணமிருந்தாலுமோர்காசும்பெறுதுசிங்காரவரைப்
பணமிருந்தாலவர்க்கெல்லாருமஞ்சலிபண்ணுவரே. 42

உரகத்திலேகிடப்பான்சக்ரபாணியுயர்ந்தகும்ப
கரகத்திலேகிடப்பான்குறுமாமுனிகன்னியர்கள்
விரகத்திலேகிடப்பான்காமராஜன்மிகுந்தவெழு
நரகத்திலேகிடப்பான்கொழுமூர்முத்துநாகப்பனே. 43

சேய்க்கறியுண்டசிவன்மேலன்பற்றவன்சீசியவன்
வாய்க்கறியாதவிடக்கானதுமில்லைமாக்கறியுங்
காய்க்கறியென்பதும்வேண்டான்சம்பாரங்கனக்கவிட்ட
நாய்க்கறியும்புசிப்பான்கொழுமூர்முத்துநாகப்பனே. 44

தருநிகரானகரன்செல்வநாளுந்தழைக்கும்புல்லூர்ப்
பெருவயனுடுதனிலெனைப்போலொர்பிடாரன்வந்தே
ஒருகுடங்கொண்டொருபாம்பாட்டினனிவ்வுலகிலுள்ளே
இருகுடங்கொண்டரைப்பாம்பாட்டுவதென்னவேந்திழையே. 45

தேனாட்டுமுல்லைத்தொடைரகுநாதன்செழித்தபுகழ்
பூநாட்டுமன்னர்தொழாமலிரார்மணிப்பூணணிந்த
வானாட்டரம்பையர்மண்ணாட்டரசர்மணத்தினுக்குக்
கானாட்டுவரிவன்கைநாட்டும்வேலினைக்கண்டுகொண்டே. 46

ஞாயிறுபோய்விழத்திங்கள்வந்தெய்திடநண்ணியசெவ்
வாயனல்தூவப்புதனம்புகாயநல்வியாழம்வர
மேயிருவெள்ளிக்கலைசோரநானுன்னைமேவுதற்குத்
தாய்சனியாகினளேரகுநாதநளசிங்கமே. 47

ஆடியநாகஞ்சரோருகம்பானுநல்லம்புலியும்
சூடியநாதர்நயனமுமாலம்புஞ்சொற்பனுவல்
பாடியபாலனுமாய்வந்ததால்வெண்பணிலவயல்
கோடியகோன்சிவந்தான்றிருமார்பிற்குளிர்தொங்கலே. 48

சிவந்தான்மாலே-மதனேயும்-கடலேயும்-அடக்கி-இவளேப் பிழைப் பித்தமையின் பரமசிவன் கண்ணேயும் திருமாலம்பையும் சம்பந்த சுவாமிகளேயும் ஒத்தது.

முருகார்முளரியுமுள்ளியுமுண்டகமூரியரம்
பொரிகாரிரும்புங்கனகமும்பொன்பொறித்தாரகையும்
குருகாருங்கெண்டையுமீனெனல்போலென்குரிசிலுக்கு
வருகாதலேதந்தமங்கையுநானுமடந்தையரே. 49

நரைகோட்டிளங்கன்றுநன்வளநாடுநயந்தளிப்பன்
விரையூட்டுதார்ப்புயன்வெற்பீழமன்னனென்றேவிரும்பிக்
கரையோட்டமீதின்மரக்கலம்போட்டுன்னேக்காணவந்தால்
திரைபோட்டுநீயிருந்தாய்சிங்கபூபசிரோமணியே. 50

வண்டோவிழிநுதல்வான்பிறையோவல்குன்மான்குளம்போ
செண்டோமுலேநித்திலமோநகையிடைசேர்துடிகற்
கண்டோமொழிகுழல்காரோமுகங்கமலம்பவளத்
துண்டோயிதழ்கன்னித்தண்டோதுடையிந்தத்தோகையர்க்கே. 51

வண்டுமதுவுண்டிசைபாடுஞ்செங்கிலின்மாரன்வரக்
கண்டுமிருந்தும்வடிவேலிரண்டுங்கருப்புவில்லும்
குண்டுமருந்தும்பொற்றேருந்தராமற்குழலேத்தந்தால்
தண்டுகொண்டெப்படிவென்றிடலாமடிதார்குழலே. 52

ஆலங்குடியர்சங்கஞ்செறியத்தாஞ்சக்கரப்பொன்
மேலம்பரத்தினர்நாகமெடுத்தவர்மேவிடையர்
சூலக்கண்மெய்யினர்பார்ப்பதிகோன்மதிதோய்கவினர்
பாலன்கைக்கோற்படைக்கூர்மைக்கண்ணுமிந்தப்பைந்தொடிக்கே. 53

ஆமாவிகழ்ந்திடலாமாவினியுனேயன்றிவினே
போமாவுனேவிட்டுப்போமாவெனக்கிந்தப்புன்மைவா
லாமாபராமுகமாமாபுயத்தினணிகடப்பந்
தாமாகுகனெனுநாமாவயிற்கரச்சண்முகனே. 54

ஆகசெய்யுள்-840.

---

வெண்பா

சென்னிமலைவேலவர்க்குச்சேர்ந்தகொம்பிரண்டுண்டு
கன்னிக்குறவள்ளிக்குக்காலில்லை-முன்னமே
ஆட்டுக்குக்கொம்பில்லையானைக்குக்காலில்லை
பாட்டுக்குளாராய்ந்துபார். 1

தார்க்கொன்றைதாவென்றேன்ருவேழிலொன்றென்றான்
ஊர்க்கஞ்சிநான்மூன்றிலொன்றென்றேன்-ஆர்க்கும்
பொதுவென்றான்பூவென்றேன்போயினன்றோழி
இதுவோநம்மீசனியல்பு. 2

பறவைநாய்நாகம்பகைவிலங்குபங்கம்
செறியுமிருணாஞ்சிதடன்-குறிகிழவன்
என்றுரைத்தவீரைந்துமோர்தண்டத்திற்பண்பாய்
ஒன்றுமெனவுரைப்பரால். 3

பரியூர்வார்பாலருந்தல்பண்பாமுடற்குக்
கரியூர்வார்பெண்ணின்பங்காணல்-விரியும்
சிவிகையூர்வார்க்குமைத்தலின்பஞ்சேட்செல்வார்
பசிவீயவுண்டல்பயன். 4

தக்கசகுனஞ்சபதஞ்சாமுத்திரியஞ்சொன்
மிக்கவசரீரிகனவென்றைந்தும்-இக்கலியில்
கூடினுங்கைகூடிவருங்கூடாதொழிந்தொருகால்
வீடினும்வீடிவிடும். 5

நக்கனார்சோணகிரிநாதனார்வேள்வியிலே
தக்கனரைத்தகர்த்ததக்கனார்-பொக்கைவாய்
ஆக்கினார்சூரியனையம்புலியைத்தேய்த்தரியைத்
தாக்கினரோடோடத்தான். 6

ஓடினனென்பதுணர்ந்துமுனக்குச்சரியா
நாடினார்க்கென்னநரகமோ-நீடியே
ஆலவிடந்தோன்றியபோதம்பலவாணநெடிய
மாலவிடஞ்சஞ்சரியாதே. 7

அசநமினைப்பகற்றுதன்னையேநம்பால்
வசனமிதுதவறுவாய்மை-இசைநாகைச்

சின்னப்பால்வெண்மதியஞ்சேரிமையத்தேபிறந்த
அன்னப்பாலிங்குவந்தாலாம் (அன்னப்பால்-பரமசிவன்) 8

தலையிலிரந்துண்பான்றன்னுடலிற்பாதி
மலையின்மடமகளுக்கீவான்-உலையில்
இருப்புவனமேனியனேயென்றாலோவாமாம்
திருப்புவனத்தீசன்றிறம். 9

ஆச்சரியந்தென்னமரமத்தனையுங்குத்துமுலை
காய்ச்சிருக்குந்தென்குடந்தைகாவலா-மாச்சன்
வரக்குப்பையாரீமருவாநாளெல்லாம்
சரக்குப்பையாமேதனம். 10

கல்லுமுருத்தாதுகாலின்முட்டையாது
எல்லைமார்த்தாண்டன்சூடேறாது-தொல்லைவரு
மாலையிருளில்வழிநடக்கக்கூசாது
காலிற்செருப்பிருந்தக்கால். 11

தந்தைபோய்த்தாய்போய்த்தமர்போயென்சுற்றமும்போய்
வெந்தபுரியாகிவிட்டேனே-முந்தவே
ஆழாழிநஞ்சுண்டவாபற்சகாயனெனும்
பாழாவான்கண்ணேறுபட்டு. 12

கைக்குடமும்ரெண்டுகனகும்பக்குடமும்
முக்குடமுங்கொண்டான்முறியாதோ-மைக்குழலீர்
வேய்க்காற்றினால்விளங்கும்வீரனந்திமாநகரில்
ஈக்காற்றுக்காற்றாவிடை. 13

வையம்புகழுமலராயிரமெடுத்துக்
கையிலொருமாமலரைக்காணாமல்-வையகத்தில்
செங்கண்மாலீசன்றிருவடிக்கெண்ணாயிரமாத்
தங்கண்மலர்சாற்றினான்றான். 14

பாம்புசேர்தோளிணையாள்பாளயத்துமாமாரி
சாம்பசிவன்றன்னடியைச்சாராரை-வேம்பின்
இலையையுடுத்தியவரீனமானம்போக்கித்
தலையில்விளக்கேற்றிவைப்பாடான். 15

அட்டமியிலோதினாலாசானுக்காகாது
சிட்டருக்குப்பன்னான்குதீதாகும்-கெட்டவுவா

வித்தைக்குநாசமாம்வெய்யபிரதமையில்
பித்தரும்பேசார்பிழை. 16

ஆயிரம்பாக்கன்னமுலையன்னநடைக்கன்னிபதி
னுயிரம்பாக்காளுளுன்னுசையினுல்-நீயிரங்கி
வந்தாளவேண்டுமலைப்பழனிவேலவனே
சந்தாளவேறில்லைத்தான். 17

(ஆயிரம்பாக்கு-கலசம்) (பதினுயிரம்பாக்கு-அம்மணம்)

பிறப்பித்தோன்வித்தைதனைப்பேணிக்கொடுத்தோன்
சிறப்பினுபதேசஞ்செய்தோன்-அரப்பெரிய
பஞ்சத்திலன்னம்பகர்ந்தோன்பயந்தீர்த்தோன்
எஞ்சாப்பிதாக்களெனவெண். 18

கானக்கடன்மல்லைக்கார்வண்ணன்ருனுமால்
நானக்குழன்மடவீர்நானுமால்-ஆனக்கால்
தன்கையிற்சங்காழிதாமிருக்கப்போவதேன்
என்கையிற்சங்காழியின்று. 19

கட்டியடிப்போர்க்குங்கன்மீதிலேற்றுவர்க்கும்
எட்டியடிப்போர்க்குமீவரே-திட்டமுடன்
பாடுவோர்க்கீயாரேபல்லுதிரத்தரையினிற்
போடுவோர்க்கீவார்பொருள். 20

செய்யாள்கணவாசெகராஜசேகரா
ஐயாவடகங்கைக்காரியா-துய்யா
குடஞ்சுட்டுப்பின்போனகோபாலாமுத்து
வடஞ்சுட்டுக்கண்டுயிலாண்மான். 21

உன்றன்மகளேயொறுப்பதற்குக்காரணமென்
என்றன்மகடனியல்புகேள்-குன்ருச்
சிராப்பளியானேறிவருஞ்சேவின்மணியோசைக்
கிராப்பளியுங்கொள்ளாளிவள். 22

நீரூருஞ்செஞ்சடைமேனீரூரும்பாம்பணிந்து
நீரூரிலேவந்தனீதியோ-நேரே
படவரவஞ்சாடப்பலியிடெனவந்தால்
இடவரவஞ்சாளோவிவள். 23

வாலைப்பொருந்துதலால்வல்லரவம்பற்றுதலால்
மாலையடுத்துநெடுவானுறலால்-சோலைதிகழ்
உம்பர்பூசித்தருளுமொற்றியூரன்வரையில்
அம்புலியுநன்கருடனும். 24

அம்மையிலேயேறியடியேனிடர்தீர
இம்மையிலேவந்தென்னையீடேற்றி-மும்மையிலே
எந்தப்பாவஞ்செய்தேனந்தப்பாவந்தீரக்
கந்தப்பாவந்திப்போகா. 25

எழுதரிதுமுன்னமெழுதியபின்னத்தைப்
பழுதறவாசிப்பரிதுபண்பா-முழுதுமதைக்
கற்பரிதுநற்பயனைக்காண்பரிதுகண்டக்கால்
நிற்பரிதுதானங்கிலை. 26

ஏறேறுநீரேறுமெண்ணிலுயிர்க்குயிராம்
பாறேறுங்காலாற்படியளக்கும்-வீறேறும்
அன்னங்காணீசனரியனுந்தாமன்று
துன்னுபுகழ்மாரியப்பாசொல். 27

கோடுதிக்குங்கும்பமுலைக்கோதையரைக்கூடவென்றால்
மாடுதின்னியென்னைமறுத்தானே-மாடுதின்னி
தன்பொழுதும்போச்சுதேதன்னந்தனித்திருந்த
என்பொழுதும்போச்சுதேயென். 28

(மாடுதின்னி-வைக்கோலாற் செய்தமருள்)

நெஞ்சடைந்தவேட்கையெல்லாநீங்கியிருவிழியும்
பஞ்சடைந்துள்ளாவிபடுமுன்னே-செஞ்சடையில்
வெள்ளாறுவெங்காளுநம்வேள்விப்புகையாறு
நள்ளாறுவென்றுநவில். 29

மூவர்கவிமுன்னூறுமுன்சோழனைந்நூறு
நாவலர்மாணிக்கர்தலநாற்பத்தெட்-டோவறுசீர்
நூதனசிவாலயங்களுற்றறுபதுங்கூட
ஓதவருமாயிரத்தெட்டோர். 30

நாலெழுத்துப்பூடுநடுவேநரம்பிருக்கும்
காலுந்தலையுங்கடைச்சாதி-மேலாக

ஒட்டுமுதலெழுத்துமோதுமூன்றும்மெழுத்தும்
விட்டார்பரமனுக்குவீடு (புகையிலை-புலை-கைலை) 31

முனியதட்டுமுட்டுக்குமுன்னீரளக்கும்
கனியுதிர்க்குங்கவ்வுநாய்காக்கும்-தனிவழிக்குப்
பத்திரமதாக்கும்பயந்தீர்க்கும்பாம்படிக்கும்
கைத்தலத்திற்றண்டிருந்தக்கால். 32

பகலோன்றெறுங்கிரணம்பாய்பறவையெச்சம்
மிகமேலுறாதகற்றும்விண்ணின்-முகிலதனுல்
பெய்யுமழையைத்தடுக்கும்பேரழகுமாமொருவர்
கையிற்குடையிருந்தக்கால். 33

வந்தவளைக்கையாதுவாய்முத்தந்தருள்வாய்
தொந்தவளைக்கையாதுவாரகையா-சந்துவளை
கோசையிடத்தானேகுயிலோசைக்கஞ்சியுளத்
தாசையிடத்தானேயறிந்து. 34

அறிந்துதவிப்பாரையருள்கோசையான்மால்
செறிந்துதவிப்பாரைத்திருத்தும்-திறந்தழைந்த
வைகுந்தனூர்வாய்மடமனனேகொவ்வைநிகர்
வைகுந்தனூர்வாய்மடுத்து. 35

மடுக்குஞ்சரமழைக்கும்வான்கோசைமாலே
விடுக்குஞ்சரமழைக்குமேலாய்-முடுக்கும்
அநங்கனையஞ்சங்கமடுத்தேனையாள்வாய்
அநங்கனையஞ்சங்கமலர். 36

அலரோதிமத்தானறைகோசைமாலே
அலரோதிமத்தாலடிக்கும்-அலரோதி
நந்தனகத்தாளுறவேநண்ணிநின்றுயானடைந்தேன்
உந்தனகத்தாளுறவேயோர்ந்து. 37

ஓர்ந்தண்டரையாளுமுத்தமநற்கோசையனே
ஈர்ந்தண்டரையாளுமிந்திரையும்-சேர்ந்திலகு
தூயத்திருக்கறுப்பாதோற்றியடியேனுடைய
மாயத்திருக்கறுப்பாய்வந்து. 38

ஆகும்போதாகுமனைத்துமதிவொழிந்து
போகும்போதெல்லாமும்போகுமே-வேக
நவசரம்பட்டார்போனவிந்துமடநெஞ்சே
அவசரம்பட்டாலாகுமா. 39

சல்லடைக்கண்ணுகித்தளர்ந்தாளருள்புரிவாய்
மல்லடையுங்கோசைநகர்வைகுந்தா-கல்லடையும்
பாந்தாளிரைதேர்காலான்பாணம்வருத்துதலால்
மாந்தளிரைத்தேர்க்காலான்மார்பு. 40

காரங்கமேனிக்கருணைக்கடலான்
சீரங்கநாதரேசெல்வரே-நீரங்கே
அள்ளியுண்டவெண்ணெய்க்காவம்மையடிப்பாளென்று
பள்ளிகொண்டாற்போமோபயம். 41

படைப்பானுங்காப்பானும்பார்க்கிலருணேசன்
படைப்பானயனென்னல்பாவம்-படைக்கிலயன்
ஐந்துதலையிலொன்றையரனறுத்தபோதிலவன்
தன்றலையைப்பண்ணறியான்றான். 42

நாறுங்கடம்புநடையுடையும்பாவனையும்
வீறுமுனகேன்பழனிவேலவா-ஆறுதனில்
வெட்டுண்டானுங்களையன்வெண்ணெய்தனையேதிருடிக்
கட்டுண்டானுங்களம்மான்காண். 43

தூதுமதுரைதுவரைகடையிடைமுன்
ஓதுகின்றமூவெழுத்துமொக்குமே-நீதி
செகராஜசேகரன்வாழ்சிங்கையெனுஞ்செல்வ
நகராயிழையார்நகை. (து-து-து-முத்து) 44

பூங்கோதைமாதர்புனைகின்றமுத்தாரம்
வாங்கோங்குடிக்குவடுவென்றே-நாங்கள்
மூலைக்கோடனிவதெல்லாமுக்கண்ணன்சென்னித்
தலைக்கோடுபட்டதழும்பு. 45

இவ்வரையுமாவிக்கிரங்குவோர்தாமில்லை
ஐவரையுங்காத்தவவனுதவினல்-மைவரைசொல்

வானிரக்குமுத்துகிருஷ்ணமன்னனமதுதொண்டை
மானிரக்குவானென்றாண்மான். 46

வாரிதராளஞ்சொரியமாமலையினாடுருவிச்
சேரனமர்நாடளவுஞ்சேர்ந்ததே-மூரிமதன்
அம்போடலைகின்றவாயிழைக்குநீகுதிரைக்
கொம்போகுலோத்துங்ககூறு. 47

தேமிருக்குமாந்தளிரைச்செந்தீவனமென்றும்
பூமுருக்கையத்தீப்பொறியென்றும்-நாமிருக்கு
மாப்படுமேயென்றெண்ணிவாடிமனந்தளர்ந்து
கூப்பிடுமேயந்தக்குயில். 48

காமனார்வீட்டினிலேகள்ளன்புகுந்தானோ
சோமனாரைப்பாம்புசூழ்ந்ததோ-மாமரந்தான்
தீப்பட்டுவேகுதோதியாகேசர்நன்னாட்டில்
கூப்பிட்டதேயக்குயில். 49

செந்தமிழோருய்யவன்புசெய்யவந்தசோழவள்ளல்
சந்ததமுஞ்சேராநாடாழ்குழலே-வந்தனைசெய்
ஐங்கரனைவேலவனையன்றழற்கண்வந்தவனைச்
சங்கரனைவாசுகியைத்தான். 50

கருப்புவில்லைமுறிக்க - ஐங்கரனையும், கடலையடக்க - வேலவனையும், சந்திரனைத்தேய்க்க - வீரபத்திரனையும், மன்மதனையெரிக்க - சங்கரனையும், தென்றலையுண்ண - வாசுகியையும் வந்தனைசெய்.

முக்கணன்வாழ்வெற்பைமுறித்துவரியிட்டகால்
முக்கணனையப்பில்விழமோதாதோ-முக்கணன்றன்
வேணிக்காகாமலர்வைத்தேகினான்மெல்லியலே
சாணிற்குறைந்தான்றலை. 51

(முக்கணன்வாழ்வெற்பு - மேரு. கால் - காற்று, முக்கணன் - தேங்காய். முக்கணன் வேணிக்காகாமலர்-தாழம்பூ. சாணிற்குறைந் தான்-ஓட்டைச்செடி)

சேலநகரேமதுரைச்சீர்ச்செழியனேசெழியன்
சாலவதிலுள்ளோரேசங்கத்தார்-சீலமிகும்
கம்பாலதேவன்கடம்பவனவாசர்
தம்பாரிமீனாட்சித்தாய். 52

மங்கையர்கள்யோனிமிசைவைத்திருக்குமாசைதனைப்
பங்குசெய்துநூற்றிலொருபங்கெடுத்துக்-கங்கைமதி
வேணியரன்பாதாரவிந்தத்தில்வைத்தக்கால்
காணலாங்காணுக்கதி. 53

துர்ச்சனரும்பொன்னூர்துடியுந்துரகதமும்
அச்சமறமுன்னிற்குமாயிழையும்-நச்சரவும்
கண்டித்தவெள்ளுங்கரும்புமிளநீரும்
தண்டித்தார்க்கல்லோசயம். 54

புட்டவல்பட்டாணிபொரிதேங்குழலப்பம்
மட்டவிழுங்தோசைவடையுடனே-சட்டமுடன்
ஓயாமற்சோறுகறியுண்டையுண்டையாயடைக்கும்
வாயாநமச்சிவாயா. 55

குச்சிலியமாதர்குயமுங்குவலயத்தோர்
மெச்சுதமிழ்மாதர்வியன்முலையும்-சிச்சீ
தெலுங்கமடமாதர்சிங்காரக்கொங்கைக்
கலிங்கமெனவேசொற்கவி. 56

இங்கிருக்கவென்றுலெமனெட்டானிவ்விடம்விட்
டங்கிருக்கவென்றுலயனெட்டான்-எங்குவைத்துப்
பேணுவேனிவ்வுடலைப்பித்தாபிறைசூடும்
தாணுவேசொக்கநாதா. 57

வெள்ளிமலைபொன்னின்மலைமேவமகிழ்வீடாகி
பிள்ளைகளோபுத்திசொலும்பிள்ளைகளாய்-தெள்ளுமுகம்
வாடாவடிவுடையாண்மாமனையாளானக்கால்
ஆடாரோவொற்றியப்பனூர். 58

அடியார்க்கெளியன்சிற்றம்பலவன்கொற்றம்
குடியார்க்கெழுதியகைச்சீட்டுப்-படியின்மிசைப்
பெற்றான்சாம்பானுக்குப்பேதமறத்தீட்சைசெய்து
முத்திகொடுக்கமுறை. 59

பரமரகசியத்தைப்பாழானவாயால்
இரவுபகலெங்நேரமின்றிக்-குரனெரியக்
கூப்பிட்டுங்காணுமோகோலமடநெஞ்சேமால்
பூப்பிட்டுங்காணுப்பொருள். 60

காந்தனுக்கென்றன்கொடியகாமவிகாரமெலாம்
போந்தறிவித்தா லுனக்குப்புண்ணியமாம்-சேர்ந்தோடும்
தேளிபடவாடுந்திரைக்கடலேமன்மதன்கை
வாளிபடவாடும்மனம். 61

கம்பனென்றுங்கும்பனென்றுங்காளியொட்டக்கூத்தனென்றும்
கும்பமுனியென்றும்பேர்கொள்வாரோ-அம்புவியில்
மன்னுவலர்புடைசூழ்வாழ்குடந்தையாரியப்பன்
அந்நாளிலேயிருந்தக்கால். 62

## கட்டளைக்கலித்துறை

பூமன்றிருக்கண்டியந்தகன்கோவல்புரமதிகை
மாமன்பறியல்சலந்தரன்விற்குடிமாவழூர்
காமன்கொறுக்கைநமன்கடவூரிந்தக்காசினிக்குள்
தேமன்னுகொன்றைச்சடையான்பொருதிட்டசேவகமே. 63

## கோச்சகம்

மெய்ச்சரமாகவிளையாடும்வேளையிலே
கைச்சரசமென்றதல்லாற்கைச்சரசமென்றேனோ
அச்சனகியார்மீதிலாசைகொண்டராவணனைத்
தச்சுருவவாளிதொட்டதாமோதரேந்திரனே. 64

மீன்பார்த்துவிண்பார்த்துவேளையும்பார்த்தாள்வரவு
தான்பார்த்தெனைப்போற்சரிபார்க்கும்வெண்குருகே
மான்பார்த்துவாளிதொட்டமால்சிவநாராயணனை
நான்பார்த்துமாதர்நகைபார்த்திருந்தேனே. 65

முல்லைமுல்லையாய்த்தொடுத்துமோகமதனெய்யவந்த
வில்லைவில்லையாய்நறுக்கிமெல்லமெல்லத்தாராயோ
இல்லையில்லையென்றுசொல்லியேற்கவரும்பாவலர்கள்
தொல்லைதவிர்க்குங்களந்தைச்சுப்ரமண்யபூபதியே. 66

ஆயிரங்கண்ணாகமதனம்புமேலம்புவிட
வீயிரங்குசெந்தேனிருவினங்கமானேனே
தாயிரக்கவேணபெண்கடாமிரக்கவானிரங்க
வேயிருக்கும்வாயாவிசயரகுநாயகனே. 67

கன்னலெனுஞ்சிறுகுருவிகனமழைக்காற்றுமல்
மின்னலெனும்புழுவெடுத்துவிளக்கேற்றுங்கார்காலம்

மன்னவனுந்தென்மதுரைமாவலிவாணனைப்பிரிந்திங்
கென்னபிழைப்பென்னவிருப்பென்னநகைப்பின்னமுமே. 68

ஆக செய்யுள்-908.

---

## விருத்தம்

கைத்தலத்தழற்கணிச்சிவைத்திடப்புறத்தொருத்தி
கட்கடைப்படைக்கிளைத்ததிறலோராம்
முத்தலைப்படைக்கரத்தெமத்தர்சிற்சபைக்குனிற்கு
முக்கணக்கருத்தொருத்தர்மொழியாரோ
நித்திலத்தினைப்பதித்தகச்சறுத்தடிக்கனத்து
நிற்குமற்புதத்தனத்தினிடையேவேள்
அத்திரத்தினைத்தொடுத்துவிட்டுநெட்டயிற்கணத்த
லக்கணுற்றிடச்செய்விக்குமதுதானே. 1

கருப்பாலேபணையடித்துப்பனிநீர்தேக்கிக்
கதலிபலாக்கனியதனல்வரம்புகட்டும்
திருப்பாலைவாழீசர்பவனியாடுந்
தெருவிற்பால்விலைபகர்சிற்றிடைச்சியாரே
அருட்பாலோபொருட்பாலோகாமப்பாலோ
ஆழிதனைக்கடைந்தெடுத்தவமுதப்பாலோ
இருப்பாலேமனம்படைத்தீர்நில்லீர்செல்லீர்
எந்தப்பால்விற்கவந்தீரியம்புவீரே. 2

பூப்பார்த்துப்புகழ்பார்த்துப்பொருள்பார்த்துக்
கவிதைசொல்லும்புலவோர்தங்கள்
நாப்பார்த்துக்கொடைகொடுக்குநல்லதம்பி
தந்தசொக்கநாதவென்னல்
காப்பாற்றமுடியாதுகையிலொருகாசுமில்லை
கடனென்றாலும்
பாப்பார்த்திசோறிடுவாளிருந்தாலுமுறங்கமதப்
பயலொட்டானே. 3

கெட்டசாறுதவிடுகஞ்சிகிருமியுண்டமாவறைக்
கீரைவேர்தெளிந்தமோர்முறிந்தபாகுகிண்டிமா
இட்டசோறுகொழியலுப்பிடாதபுற்கையாயினும்
எங்குமன்பதாகநுங்கவின்பமாயிருக்குமே

பட்டபாகுபசுவினெய்பருப்புமுக்கனிக்குழாம்
பாளிதங்கடாளிதங்கள்பண்ணியாரவகையுடன்
அட்டபாற்குழம்புகன்னலமுதமோடுமுதவினும்
அன்பினேடளித்திடாதவசனமென்னவசனமே. 4

துங்கவடகயிலாயமுதாலமைந்து
துளுவொன்றுதொண்டைவளநாட்டெண்ணுன்கு
தங்குநடுநாட்டிருபத்திரண்டுபொன்னித்
தலநூற்றுத்தொண்ணூறுமலைநாட்டொன்று
கொங்கேழுசிங்களத்திலிரண்டுவையைக்
குளிர்தமிழ்நாட்டிரேழுமேலாஞ்சூலச்
செங்கையார்தலமிருநூற்றெழுபானுன்கில்
தென்பாகங்கயிலாயந்திருக்குற்றாலம். 5

ஓதுமைந்திலொன்றிலைந்திலொன்றுமன்னவன்பிதா
வூர்திதொட்டவேழின்மீதிலுற்றசாபநிருபனுர்
தாதுகொண்டதாளிமாலைசூடிதம்பிதம்பிசேய்
தன்குடைப்பினைவன்மற்றலைக்கிரீடதுவசனுர்
காதனண்பன்றந்தைபாகன்பின்னவன்பகைச்சுமை
கலையெடுத்தகையரையர்கதிபெறத்தவஞ்செய்தோன்
தீதிருதைகொண்டுவந்தசிலைவதிந்தபதியினன்
சிரமரிந்தவன்கொள்பாரிசேரிலாவுறைந்ததே. 6

ஓதும் - ஐந்துபஞ்சபூதம் - அதிலொன்று-நிலம் - அதில்-ஐந்து-ஐந்து-திணை-அதில் ஒன்று - குறிஞ்சி-அதற்கு மன்னவன்-முருகன்-அவன் பிதா-சிவன் - அவனூர்தி-இடபம் - அதற்கேழ் - விருச்சிகம்-அதன் மீதிலுற்ற சாபம் - தனுசு-அதையுடைய நிருபன் - இராமன்-அவன்தம்பி-பனைமாலைசூடிய பலராமன் - அவன் தம்பி-கிருஷ்ணன்-அவன்சேய்-மன்மதன் அவன் குடை-திங்கள்-அதற்குப்பின் ஐவன்-சனி - அவன் கிரீடம் அரவம் - அதைக்கொடியாக வுடையவன்-துரியோதனன் - அவன் நண்பன் கர்ன்னன் - அவன் தந்தை சூரியன்-அவன்பாகன்-அருணன் - அவன் பின்னவன்-கருடன்-அவன் பகை-ஆதிசேடன்-அவன் சுமை-பூமி - அதன்கலைகடல்-அதை யெடுத்தகையர்-அகஸ்தியர் - அவரையர் - பிரம்மதேவர் - அவர்கதி பெறத்தவஞ்செய்தோன் - அனுமான் அவன்றாதை - வாயு - அவன் கொண்டுவந்த சிலை-மேரு சிகரங்கள் - அவைகளைப் பதியாகயுடையவன்-இராவணன்

அவன் சிரமரிந்தவன் - திருமால் - அவன்கொள்பாரி - இலக்குமி - இவள்சேர் இல்தாமரைப்பூ-ஆலுறைந்தது-ஆலமரத்தின் கீழிருந்தது (இஃது பொருண்மேற் பிரிந்ததலைவன் ஆலின்கீழ்வைத்த அலர்க்குறியைக்கண்டு பாங்கி தலைவிக்குணர்த்தியது.)

தொடுத்தமுத்தமிழுக் ககத்தியனெனவே தோன்றிய புவனச்சேறையர்கோன், சொலக்கணப்புலவ னிலக்கணக்கவியைத் துதித்தகங்களித்திடுங்களியேம், மடத்தினிற்புகுந்து மதுத்திறந்தவனார் வடித்தகட்டி குடித்து நின்றவனார், வறுத்தசுட் கடித்துக் குதட்டுகின்றவனார் மயக்கியுட்டியக்கமுற்றவனார், கடுக்கனைமிடற்றி லொடுக்கியிட்டவனே கையிலேசிலம்பையிட்டவனே, கனத்தநூற்கொடியை நாவிவிட்டவனே கண்ணிலே குழையையிட்டவனே, முடுக்கிய வயிற்றிலாழியிட்டவனே முகத்திருபதக்கமிட்டவனே, முளைத்ததோளொருபான் சதங்கையிட்டவனே, முழுப்புரட்டவர்க்கலாதிலையே. 7

கடுவிஷம்-சிலம்பு-மலை-நூற்கொடி-வாணி-கண்குழை - கட்செவி ஆழி - கடல் - இருபதக்கம் - இருபதுகண் - ஒருபான் - சதங்கை-ஆயிரம்-கை.

தேமதுரகவிவிரகன்றெவ்வைவருபெருமான்
செல்வச்சங்கரர்தாளைத்தினம்வணங்குகளியேம்
யாமதுவுண்டாலுமஃதுமக்கடிமையிலர்போல்
எமைமயக்குமோமயக்காதினியியம்பக்கேளீர்
வீமன்மகனகத்தியனேகுபேரன்மகன்புதனே
வீரூனைமுகனொருவன்விரும்புமகன்குகனே
காமன்மகன்சயந்தனேவேதன்மகன்சிவனே
காலன்பாற்பிறந்தமகன்கடல்கடந்துளானே. 8

வீமன்-பிரமன்-குபேரன்-சந்திரன் - வீரூனைமுகன்-வீரூன-ஐம்முகன்-காமன்-இந்திரன்-வே-மூங்கில்-கால்-காற்று.

சந்தப்பாவிருத்தப்பாகலிப்பாவெண்பா
தாழிசைப்பாகொச்சகப்பாத்தனிப்பாவுக்கும்
விந்தையப்பாவாகியவிரந்தப்பாவும்
வெல்வப்பாவதுபோலவிகடப்பாவும்
எந்தப்பாவுரைத்திடினுமொருபேறில்லா
ஏதப்பாவிக்குனதிணைப்பாதத்தைக்
கந்தப்பாமுருகப்பாபோரூர்வாழ்வே
கையப்பாமெய்யப்பாகாட்டப்பாவே. 9

ஆதிசிவன்செத்தானோவுமைசெத்தாளோ
ஐங்கரனுஞ்செத்தானோவரிசெத்தானோ
வேதியனுஞ்செத்தானோநீசெத்தாயோ
வெட்டவெளியானந்தம்வெறும்பாழாச்சோ
நாதியற்றுப்போனாயோவழிகாட்டாயோ
நாயேனுக்கிரங்கிவந்துநலந்தாராயோ
பாதிவழிதனிலவதிப்படுத்துவாயோ
பாதகாதிருச்செந்தூர்ப்பதியுளானே. 10

நீருஞ்சுமந்தேன்விறகெடுத்தேனித்தஞ்சுமந்தேன்சாணங்கம்
நிகழவடிபட்டுதைப்பட்டேனின்றேன்வையைக்காளாக
ஆரும்விரும்பாத்துகிலெடுத்தேனழகுமேனிகரிக்கோலம்
ஆனேனதனாலல்லோவுன்னடியாளுனக்குச்சரியானேன்
காரும்விரும்புங்கடுவணிந்தகளனேகருணைப்பெருங்கடலே
கமலத்தயன்மால்காணாதகாலகாலாவென்றுயரம்
தீரும்படிதண்ணருள்புரிவாய்சிவனேயமரர்க்கொருவிருந்தே
தேவேதெய்வமறைப்பொருளேதிகழுங்கடவூர்சேவகனே.

## காளமேகப்புலவர் பாடியது

ஏறுகட்டியகொட்டி லரங்கமேயீ ரிரண்டுமுகன்வாயி லாயமே, மாறுகண்ணப்பன் வாய்மடைப்பள்ளியே வாய்த்தவோடைத் திருமால்வதனமே, வீறுசேர்சிறுத்தொண்ட னில்லாளுந்திவேட்ட நற்கறிகாய்க்கின்றதோட்டமே, நாறுபூம்பொழில்சூழ்தில்லை யம்பல நாரிபாகற்குநாடகசாலையே. 12

## நடுவெழுத்தலங்காரம்

திருமால்வாகனநாவாயிராசியொன்று
சினைதெவிட்டார்மாதுலன்கோகிலமிவ்வேழின்
உருவாமேழெழுத்திநடுவெனக்குச்செய்தான்
உகந்துபதினான்கினையுந்தானேகொண்டான்
ஒருபாகத்திருத்தினான்கையிலேற்றான்
ஒருமதலைதனக்களித்தானுண்டான்பூண்டான்
பரிவாயொண்கரத்தமைத்தானுகத்தானிந்தப்
பைம்பொழிற்றில்லையுளாடும்பரமன்றானே. 13

திருமாஸ்வாகனம் - நாகாரி - நாவாய் - கலம்-இராசி-கன்னி-சினை-வெடு-தெவிட்டார்-ஆரார்-மாதுலன்-மாமன்-கோகிலம் - பல்லி - இவற்

றின்-நடுவெழுத்துக்கள் காலன்வராமல் இவற்றின் ஏனையவெழுத்துக்களின் பயன் நாரிஉமை (கம்-கபாலம்) (கனி-பழம்) (கடு-விஷம்) (ஆர்-ஆத்தி) (மான்) (பலி-பிச்சை)

கூற்றுவனைவின்மதனையரக்கர்கோவைக்
கூனிலவைக்குஞ்சரத்தையிஞ்சிமூன்றை
ஏற்றுலகின்புறவுருவமாளத்தோள்க
ளிறவெறிப்பவிமையப்பெண்வெருவவேவக்
காற்றொழிலானயனத்தால்விரலாற்கற்றைக்
கதிர்முடியாற்கரதலத்தாற்கணையாற்பின்னும்
ஊற்றழியவுந்தத்தெரித்துநெரித்துச்சூடி
உரித்தெரித்தானவனென்னையுடையகோவே. 14

பொன்னனைவாளரக்கனைநூற்றுவரைக்காவைப்
பொருசிலையைக்கனைகடலைப்பொன்னனீன்ற
நன்மகற்காய்ச்சுரர்க்காயைவருக்காய்க்காதல்
நட்பினுக்காய்ச்சானகிக்காய்நடவைக்காக
மன்னுகிருல்வடிக்கணையால்வளையாற்புள்ளால்
வயங்குதோள்வலியால்வானரங்களாலும்
முன்னுடற்கீறிச்சிரங்கொண்டமரில்வீழ்த்தி
முதலொடுக்கொண்டிறுத்தடைத்தமோகூரானே. 15

இந்துமுடிக்குஞ்சடையாளரிருக்குந்தொண்டைவளநாட்டிற்
சிந்துபடிக்கக்கவிபடிக்கத்தெரியாமடவாயுன்றனக்குக்
கெந்தப்பொடியேன்பூமுடியேன்கிழமாய்நரைத்துமுகந்திரைந்தும்
இந்தமுறுக்கேன்விருப்பேனெடுப்பேனுன்னைக்கொடுப்பேனே. 16

ஏழாளையடித்தபுலிதனையடித்தான்வீரசென்னனென்றேகாட்டில்
வாழாமற்சிறுபுலிகளீப்புலியோடெலிப்புலியாய்வடிவங்கொண்டு
பாழாகிக்காடெல்லாம்பரதவிக்கவடுகரடுப்படியில்வந்து
கூழாகிவயிற்றினிற்போம்பொழுதுகுணம்போகாமற்குமுறுந்தானே.

கட்டளைக்கலித்துறை

காவென்றுஞ்சிந்தாமணியென்றுஞ்சொல்லியென்கையிலள்ளித்
தாவென்றுகேட்கத்தரித்திரம்பின்னின்றுதள்ளியென்னைப்
போவென்றுரைக்கவுநாணமங்கேயென்னபோவதிங்கு
வாவென்றிழுக்கவும்வந்தேன்விராலிமலைக்கந்தனே. 18

கோச்சகம்

காரென்றுபேர்படைத்தாய்ககனத்துரும்போது
நீரென்றுபேர்படைத்தாய்நெடுந்தரையில்வந்ததற்பின்

வாரொன்றுமென்முலையாராய்ச்சியர்கைவந்ததற்பின்
மோரென்றுபேர்படைத்தாய்முப்பேரும்பெற்றாயே. 19

முன்னாகநீரளக்கு முடிமன்னர்காத்திருக்கு முனிகளென்னை, மன்னுமலோட்டுவிக்கு மாதரைச்சொற் கேட்பிக்கு மடக்குமாட்டைப், பன்னாகந்தலைநறுக்கும் பாலரைச்சொற்கேட்குவிக்கும் படிப் புண்டாக்கும், என்னாளுங்கிழவருக்கோரிடுப்பாகுநடைகொடுக்குமென் கைக்கோலே.

கருந்தலைசெந்தலைதங்கான்றிக்கால்கடையிற்சுற்றி
வருந்திக்குடவைக்குந்தாட்டிக்குங்கொத்திட்டுமாய்வதல்லால்
கரந்தைகளாண்டிலொருக்கால்வருவதுகண்டிருந்தும்
அரும்புக்குங்கொத்துக்கும்வந்தார்பிழைப்பதரிதென்பரே. 21

சங்கையிலாமதன் விடுத்தபகழிதைத்தபுண் வருத்தந்தன்னை நோக்கிக், கொங்கையை யொத்திடங்கொடுத்துக் குங்குமச்சாந்தப் பற்றுங்குளிரப்பூசிச், செங்கனிவாயிதழ்மருந்துமுள்ளுக்கே கொடுத்தெனக்குச் செய்தநன்றி, மங்கையரேயிந்திரவிதெற்கு வடக்குதித் திடினுமறந்திடேனே. 22

ஏமிராவோரியென்பாளெந்துண்டிவஸ்தியென்பாள்
தாமிராச்சொன்னதொல்லாந்தலைகடைதெரிந்ததில்லை
போமிராச்சூழுஞ்சோலைபொருங்கொண்டைத்திம்மிகையில்
நாமிராப்பட்டபாடுநமன்கையிற்பாடுதானே. 23

## சுந்தரகவிராயர் விருத்தம்

ஒருகோட்டுக்கலைமுனியுமொளிதிகழும்புலியாடையுடுத்தகோவும்
மருமலர்வாழ்திசைமுகனும்வானவர்களுயகனுமயிடன்றானும்
கரியநிறத்திருமாலும்வாலியும்பராசனுமேகாமனம்பால்
பெருமறையிழந்தனரென்றாற்சிறுமனிதர்க்கெப்படியோபேசுங்காலே.

வாசவனும்பிறர்நகைக்கவுடலானொருவனராவடிவமானான்
தேசுபுகழ்க்கலைமதியுமுடலிழந்தான்மலர்வேதன்சிரமொன்றற்றான்
ஈசனுதல்விழிதிறந்தானிராவணசுந்தோபசுந்தரிறந்தார்மண்மேல்
காசினிப்புன்மானிடரோமோகசாகரமதனைக்கடக்கவல்லார். 25

உணங்கியொருகான்முடமாகியொருகண்ணின்றிச்செவியிழந்து
வணக்குநெடுவாலறப்புண்டுமன்றுமுதுகில்வயிறொட்டி
அணங்குநலியமெலிவெய்தியகல்வாயோடுகழுத்தேந்திச்
சுணங்கன்முடுவல்பின்சென்றால்யாரைக்காமன்றுயர்செய்யான்

கட்டிறலேதிருப்பிவைந்தாற் றலைவலிபோமோ வந்தக்கதைபோ லாட்டுக், குட்டியிதென்னடி சகியேகெட்டிவயித்தியன் பள்ளிகொண் டான்பாம்பின், பெட்டியினுங்கையிடுவ னுண்டையும் பாய்ச்சிடுவ னன்றுய்ப்பிலமாய்க்காயக், கட்டிடுவனிஃதல்லாலாறுதே மதன்விடு மிப்பகழிப்புண்டானே. 27

மரமதுமரத்திலேறிமரமதைத்தோளில்வைத்து
மரமதுமரத்தைக்கண்டுமரத்தினுன்மரத்தைக்குத்தி
மரமதுவழியேசென்றுவளமனைக்கேகும்போது
மரமதுகண்டமாதர்மரமுடன்மரமெடுத்தார். 28

## இராமசாமிக்கவிராயர் பாடியது

மாலைதனைப்புனைந்தாலுமலரணையிற்படுத்தாலுமருவார்பன்னீர்
ஏலமுறத்தெளித்தாலுமெவ்வளவேனுங்குளிரவிலையென்செய்வேன்
கோலமுறுமணவியிலேகிளிகளொடுசுகம்படைத்துக்குலாவுமெங்கள்
சோலைதனைச்சேராமற்காமவிடாய்தணியாதேதோகைமாரே. 29

பாலைநிகர்மொழிமாதே யென்னிடத்திற் பூரணமாய்ப் பட்சம் வைத்துக், காலைமுகிலனையகரன்மணவியில்வாழ் சோலையெனுங்கன் னன்பாற்போல், மாலைகேண்மறுத்தாலென் மனத்தைக்கேண்மறுக் கின்மதன் வாராவண்ணம், ஓலைகேண்மறுத்தக்காற் கிள்ளாக்குக் கேள்வேறென்றேதிடாயே. 30

அரக்கனலையிலங்கையை வென்றோன் மருகன்றணிகேசனன்பர் பானஞ், சிரக்கனலையாமனுனைக் காப்பானென்றனையடிதே மொழியே மாலை, வரக்கனலைமதிவீசப்படுமோ வவ்வேளைதனில் வாதுக்கேம, திரக்கனலை மதப்பயலென்முனங் குளிக்கத்தகுமோ சொற்றோகை நீயே. 31

என்னையவரமறந்தும்யானவரைமிகநினைந்திங்கிருந்துவாட
முன்னைவிதிப்படிதானோமுற்பிறப்பிற்செய்தவினைமுடிந்தவாறோ
கன்னனெங்களபிராமன்வரதுங்கராமனியற்காசிநாட்டில்
அன்னவயற்குருகினங்காடனித்திருக்கமுடியாதென்றறைகுவீரே. 32

தன்மனையிரதமாக்கித்தன்மகன்வலவனுக்கித்
தன்மகன்பேரனேடுதனக்குமைத்துனன்காலாக்கித்
தன்னனைநாரியாக்கித்தானுமோரம்புமானுன்
தன்மனமிடங்கொண்டுய்த்தசங்கரன்றனக்குமாயன். 33

முன்னொருவூரின்பேராமுதலெழுத்தில்லாவிட்டால்
நன்னகர்மன்னர்பேராநடுவெழுத்தில்லாவிட்டால்
கன்னமாமிருகத்தின்பேர்கடையெழுத்தில்லாவிட்டால்
உன்னியதேனின்பேராமூரின்பேர்விளம்புவீரே. 34

(மதுரை-துரை-மரை-மது)

புதுவைமுத்துக் குமரதொண்டன் றமிழ்போலக்கவி மதுரம் பொழியப்பாடும், சதுரருண்டோவெனவிரிஞ்சன்வினவினன் சேடனுன்றானென்றானோர், பதமெனினுந் தோன்றுமன் மால்கொண்டு கடல்வீழ்ந்தான்பதுமன்சீறி, மதமுறுநாவைப்பிளந்து காதறுத்து மண்சுமக்க வைத்திட்டானே. 35

மதுகரத்தையிகழ்ந்து குயில்வடிவேலர் தமையழைத்து வாரேனென்றே, இதமுரைத்துச் சென்றதென்ன வின்னமுங்காணே னதனுகிரக்கமேது, சதமிதென்வளர்த்தெடுத்ததாய்க்குதவா தார்க்குதவுந் தத்தையேநீ, முதுமறைசேர் குமரர்தமையழைத்துவா மதப்பயலை முடுக்கத்தானே. 36

குருமூர்த்தமாய்வந்துவினையொழித்துமுத்திதனைக்கொடுக்கத்தியாகர்
ஒருமூர்த்தியல்லாமன்மற்றுமொருமூர்த்திகளுமுண்டோநெஞ்சே
திரிமூர்த்தியென்பார்களவரவர்வாகனமேறிச்சேணிற்சும்மாய்
திரிமூர்த்தியல்லாமலொருமூர்த்தியுங்கதியிற்சேர்த்திடாரே. 37

இருக்கோலமிடுங்கலைசைத் தெய்வசிகாமணிமுகில் வந்திணங்கா நாளில், உருக்கோலவடிவானன் மைந்தனுமைத்துனனு நிதமோய்விலாமல், மருக்கோலஞ்செய்வதினும் வடவனலைச்சொரிவதினு மயக்கமுற்றுத், திருக்கோலங்கொண்டமகடயங்கு கின்றாண்மயக்குகின்றுடினமுந்தானே. 38

முந்தனத்தைத்தூதுவிட்டேன் வரவுமில்லை மதராஜன்முனிந்தேதவில்லால், எந்தனத்துக்கிலக்காகமலர்வாளியெய்கின்றானினியென்செய்வேன், கந்தனத்தையகலாத பூம்பாவை வேலப்பன் கையாற்பூசுஞ், சந்தனத்தைசவ்வாதை நினைந்துமனதுருகுதடி தையலாளே. 39

வெறிவிலக்கல்

குருத்துக்கதலிப்பசுந்தேனையள்ளிக்குரங்குகுட்டிக்
கருத்திக்களிக்குங்குறுங்குடிவாழ்தருமண்ணல்வெற்பில்

பருத்திப்பொதுக்கிட்டதீப்போலக்காமம்படைத்தவிந்த
ஒருத்திக்கொருவன்பகையோநடுச்சொல்லுமூரவரே. 40

## தோட்டிக்கலை சுப்பிரமணியத் தம்பிரான் வெண்பா

வல்லவகுளத்திருக்குமன்னவாவாசமலி
நல்லவகுளத்திருக்குநாதனே-மெல்ல
வடிவாளைக்கொண்டமணவாளாகணிச்சி
வடிவாளைக்கொண்டென்னிடர்மாற்று. 41

(குளத்திருக்குநெற்றிக்கண்)

### கட்டளைக் கலித்துறை

பொன்முகநோக்கிநின்றன்முகநோக்குமுன்போயினளென்
றுன்னிடவீழ்ந்தனள்கைதொடவுய்ந்தனளுன்னுடனே
பின்னும்புணர்ந்திடமுன்னறிவுற்றிடபெற்றபிறப்
பென்னலமென்றனளேரகத்தான்மலையீர்ங்கொடியே. 42

### ஒட்டக்கூத்தர்

தற்கோலிப்பாசப்பூசற்கேதட்டாமற்சாகைக்கேகிற்பீர்
முற்கோலிக்கோலிப்பூசித்தேமுட்டாமற்சேவித்தேகிற்பீர்
வற்றுநெட்டோடைப்பாரச்சேன்மைப்பூகத்தேறித்தாவிப்போய்
நெற்றுளுற்றுலைப்பாகிற்சேர்நெய்த்தானத்தானைத்யானித்தே. 43

### புகழேந்தி

விக்காவுக்காவித்தாவிப்போய்விட்டானட்டார்சுட்டூர்புக்கார்
இக்காயத்தாசைப்பாடுற்றேயிற்றேடிப்போய்வைப்பீர்நிற்பீர்
அக்காடப்பேய்தொக்காடச்சூழப்பாடத்தீவெப்பாடப்பூண்
கெக்காடக்கானத்தாடப்போநெய்த்தானத்தானைத்யானித்தே. 44

ஆக செய்யுள்-952.

---

## இப்பதிப்பில் நூதனமாகச்சேர்த்த

### பலவித்வான்கள் பாடிய பாடல்கள்

### கலித்துறை

நீந்தாவறிஞர்பிணியாளர்கல்விநெறியறியார்
பூந்தாரமஞ்சிவிருந்தொளிப்பார்பொருட்கேசிவிகை

யூர்ந்தேசுமைசுமந்துண்போரிவர்களுயிரிருந்து
வீந்தாரிவரைவர்காண்செழியாதிருவேங்கடமே. 1

கொடுத்தாவிகாக்கின்றகாவேரிவற்றிக்குறைந்திடினு
மடுத்தோண்டிநீருண்ணுவாரதுபோலிந்தமானிலத்தி
லடுத்தாரைரட்சிக்குந்தாதாவென்பார்க்கடையாளம்பிச்சை
யெடுத்தாகினுங்கொடுப்பார்வெள்ளைநாவலிருப்பவனே. 2

வெண்பா

மாமிக்கோர்மாமியுண்டுவாணருக்கோர்வாணருண்டு
சாமிக்குமேற்றகப்பன்சாமியுண்டு-பூமிக்குள்
எல்லாந்தெரிந்தவருமில்லைதெரியாதவரு
மல்லாமற்கண்டவர்களார். 3

ஆங்காலமெய்வருந்தவேண்டாமதுவன்றித்
தேங்காய்க்கிளநீர்போற்சேருமே-போங்காலை
காட்டானைதின்றகனியதுபோலாகுமே
தேட்டாளன்தேடுந்தனம். 4

சொல்லிச்செய்யார்பெரியோர்சொல்லிச்செய்வார்சிறியோர்
சொல்லியுஞ்செய்யாதவர்கசடர்-சொல்லுங்கால்
குலாமாலைவேற்கட்குறிப்பறிந்துபார்க்கிற்
பலாமாநற்பாதிரியைப்பார். 5

கலித்துறை

முற்றுதில்லையும்வாசமுமுள்ளுமுனையுமெவர்
சற்றுகினுஞ்செய்துவைத்ததுண்டோவன்புஞ்சர்க்குணமும்
பெற்றார்பிறவிக்குணங்காணதுகண்டுபேதையர்கள்
கற்றல்வராதுகண்டாய்கச்சிமாநகர்க்காவலனே. 6

வெண்பா

மிக்குப்பெருகியுமிகுபுனல்பாய்ந்தாலும்
உப்பொழிதல்செல்லாவொலிகடல்போல்-மிக்க
இனநலநன்குடையராயினுமென்று
மனநலமாகவாங்கீழ். 7

உடைப்பெருஞ்செல்வத்துயர்ந்தபெருமை
அடக்கமில்நெஞ்சத்தினுடு-நடக்கையின்

ஒள்ளியனல்லான்மேல்வைத்தல்குரங்கின்கைக்
கொள்ளிகொடுத்துவிடல். 8

சத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமில்லையேயில்லையாகும்
சத்துவம்புத்திவித்தைச்சதுர்விதார்த்தங்களான
இத்தனைவிதமுஞ்செல்வமெய்திலெய்துமன்றே. 9

கதிரவனிலையேற்கண்ணிற்காண்பனமறையுமாபோல்
நிதியமொன்றிலையேலியார்க்குநீதிமான்ஞானபோதம்
துதிபெறுகீர்த்தியாண்மைச்சூழ்ச்சிமந்திரவிசாரம்
சதிரபிமானமெல்லாந்தன்னிலேமறைந்துபோமால். 10

## கலித்துறை

பாலுக்குச்சர்க்கரையில்லையென்பார்க்கும்பருக்கையற்ற
கூழுக்கும்போடவுப்பில்லையென்பார்க்குங்குத்தித்தைத்த
காலுக்குத்தோற்செருப்பில்லையென்பார்க்குங்கனத்ததண்டி
மேலுக்குப்பஞ்சணையில்லையென்பார்க்கும்விசனமொன்றே. 11

மேவுமெண்போகம்விளம்பில்பெண்ணுடைவியன்கலன்பாற்
ரூவியம்போசனந்தாம்பூலம்வீசுசுகந்தமன்பி
ஞெவெழிற்பாட்டலர்மெல்லணையாமிவைநன்கமைந்த
வாவிக்கடவுளரருட்பாழிபெற்றவரசிடமே. 12

## வெண்பா

எண்கோவைமேகலைக்காஞ்சியிருகோவை
கண்கோள்கலாபமிருபத்தொன்று-பண்கோள்
பருமம்பதின்மூன்றுமுப்பத்திரண்டு
விரிசிகையென்றுணரப்பாற்று. 13

மன்னவன்குணங்கொடிதெனவருத்தலுமதற்குத்
துன்னுபைங்கொடியடுத்தகொம்பதனையேசூழும்
கன்னிமாதருமன்னருந்தங்களைக்காத்தே
பன்னுமிங்கிதஞ்செயுமவர்பாற்செய்வர்பரிவு. 14

பாவிகளகத்தைப்போலும்பலவிரதியர்கள்போலும்
ஓவருசகாயர்போலுமுறைமுறைசுற்றம்போலும்

மேவுவரவரைச்சேரின்மேன்மையரேனுமுய்யார்
பூவையுமுயலுமுன்னோர்ப்பூனையைச்சேர்ந்தவாறே. 15

வேந்தருங்கொடுந்தீயும்வெவ்விடம்பொழிபகுவாய்
பாந்தளுஞ்சலியாதவினன்னவன்பக்கல்
போந்துநண்புகொண்டடவிநீபுரக்குமாறென்னும்
மோந்திடும்படிக்கடிப்பதுமன்னர்தம்முறைமையே. 16

ஒருவருக்கமுதளித்தாலுண்பனேனுலகமாளு
மிருவருக்கமுதளித்தாலிந்திரன்பதவிசேர்வார்
மருவியபூசைசெய்துவந்தவரிளப்பையாற்றில்
திருமடவன்னதானஞ்சிவாலயமாகுந்தானே. 17

வெண்பா

அருக்கனையுஞ்சோமனையுமைம்மூன் றுநாளதனிற்
பெருக்கவரவந்தீண்டிற்பேசுங்கால்-செருக்களத்தின்
மன்னர்மடிவார்மடிவாரேயாமாகில்
அன்னமரிதாய்விடும். 18

பரிதியும்பஞ்சமாகிற்பார்மதிவெள்ளமாகுங்
குரிதியுங்கூச்சலாகுங்கொடும்புதன்காற்றதாகும்
பெருத்ததோர்வியாழம்வெள்ளிப்பேரகமேறநிற்குங்
கருத்ததோர்சனியுமாகிற்கலகமும்பற்றறுதே. 19

வெண்பா

கல்லாடர்செய்பனுவல்கல்லாடம்நூறுநூல்
வல்லார்சங்கத்தில்வந்தருளிச்-சொல்லாடா
மாமதுரைஈசர்மனமுவந்துகேட்டுமுடித்
தாமசைத்தார்நூறுதரம். 20

இடுகாட்டுமங்கையெனும்பிற்புரண்மால்
சுடுகாட்டிலாடுவார்சுட்டி-நெடுகாட்டுஞ்
சம்பந்தாயென்புநின்பாறந்தாக்கிக்கொண்டிலளே
கும்பந்தானென்னுமுலைக்கொம்பு. 21

கலித்துறை

அரியெச்சில்போலவரவெச்சிலுமஞ்சரியெச்சிலும்
எரியெச்சிலேழுமுனியெச்சிலும்போரவேந்திழையாள்

கரியெச்சில்போன்றனள்விக்கிரமச்சோழன்கனைத்தகன்றின்
புரியெச்சிலுண்டபுயல்வண்ணனெச்சிற்புரந்தரனே. 22

வாக்குமனமுமுடையானென்னுர்தமணிமுடிமீ
ராக்குந்திறமையிருங்கோளன்வெற்பிலயனடுக்கம்
போக்கும்புனிதனுங்கந்தனுமாலும்புரந்தரனும்
நாக்குங்கழுத்துந்தலையுமில்லாள்பகைநானல்லவே. 23

காயுங்கரடுஞ்சுரமீதென்றும்காட்டியகையுஞ்சொன்ன
வாயும்புகையெழும்பாலையிலேமணிமாமகுடம்
தோயும்புகழ்கச்சிச்சுந்தரபாண்டியன்தோகைவெற்பில்
தாயுந்தமருமில்லானிங்ஙனேநின்றதார்குழலே. 24

ஆக செய்யுள்-976

---

# கடிகைமுத்துப்புலவர் பாடிய

## மடக்கு

கருப்பஞ்சிலையுமோர்கரமே-கண்டேனுனுஞ்சுகரமே
காமப்பயலுமூர்க்கரமே-கணையைத்தொடுப்பான்சீக்கரமே
வருத்தம்புரிவாரனேகரமே-வல்லார்மடவார்நிசகரமே
மாமால்வெங்கடேசுரெட்டன்வருவான்வருவானென்றிருந்தேன்
திருத்தும்படிக்குமனோகரமேசெய்தானினிதிவாகரமே
தினியில்வருவாயெனக்கரமேதெரியவுதித்தான்சக்கரமே
பொருத்தந்தருகண்ணுகரமேபோர்வேட்கிலைவீராகரமே
பூவையாருஞ்சேகரமேபுகழ்ந்தேன்ரத்தினகரமே. 1

கையான்முகத்தைத்துடைத்துமலர்க்கண்ணாலெனையும்பார்த்துமலர்க்
காலால்வண்டுகுடைந்தமலர்க்கனியையெனதுகுழற்கணிந்து
மெய்யானதையேதடவியென்றன்மேமேலயிலங்குமுடைமையெல்லாம்
வெவ்வேறாகக்களைந்ததனைமீட்டுநிறையாத்தரித்துமங்கே
கையாவிடையைத்துகிலாலேநன்றுப்பொதிந்துமனம்விரும்பி
நகைத்தான்வெங்கடேசுரெட்டன்நானுமகிழ்ந்தவனைப்பார்த்தேன்

மையார்விழியார் தமைக்கலவிவகையா லுருக்கிவசப்படுத்தும்
மார்க்கமவ னுக்கல்லாமல்மாரன் றனக்கும்வாராதே. 2

## தலைவனைச்சேர்ந்தவகைக்கும்-கடலுக்குஞ்சிலேடை

மடிமேலேந்திமலர்வாய்த்தேன் வழங்கித்தனபாரத்துகிரும்
வைக்கத்தனமேதகங்குமென் றுமணிவாய்முத்தம்பலகொடுக்கக்
கொடியினிடைகால்விசைத்தெழும்பிக்கொள்கப்பலைப்பாயசைக்கவந்து
கூடவரைச்சோமனுந்தோயக்கொட்டுமமிர்தங்கொப்பளிக்க
படியையளந்தகாலாற்கற்பாறைமிதித்துமடமாதைப்
பார்த்துமுனியேதிதுவெனவேபகர்ந்தோன்வெங்கடேசுரெட்டன்
துடியுமுலையும்படைத்தவெற்றித்துரையைச்சேர்ந்தவிதம்போலத்
தோற்றுங்கடலேநா னுனக்குச்சொல்லிக்காட்டவேண்டாமே. 3

அப்புறத்தொதுக்கடிக்கும்அத்தொழிற்கொருப்படுத்தி
அக்கணத்தினிற்றொடைக்குள்அப்படிப்படித்தெழுப்பி
இப்புறத்திழுத்தொருத்திளப்படிச்சமத்திகெட்டி
இத்தனைக்குமுத்தரித்ததிப்படிக்கெனப்படைப்பை
குப்புறக்கிடத்தும்வித்தைகுற்றமற்றவித்தைகுத்து
குத்தெனச்சொலச்சொலிக்கொடுத்துரைத்தடுத்தடுத்து
மெய்ப்புறத்தொழிற்பயிற்றிவெங்கடேசுரெட்டமன்
விடியுமட்டுமனுபவித்தவித்தைநல்லவித்தையே. 4

ஒருதரத்தில்விடவிலைப்பின்உபரிவித்தைமுதனடத்தி
உகிர்செலுத்துகிரகரத்தில்உரகனுச்சிமணியசைத்து
மருவியுப்புமமுதுடைத்துவரவெழுப்பியதிலெனக்கு
வலுமயக்கும்வரவிரித்தமலரணைக்குள்விழவுயர்த்தும்
இருதொடைக்குளவனிருக்களைமலர்த்திமுலைசுவைத்தும்
இதழ்சுவைத்துமொருதரத்தில்இருவருக்குமனம்ருசிக்க
விருதுகட்டியனுபவித்தவெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்தவேளைநல்லவேளையே. 5

தந்திதங்கலந்துகண்டதந்தரங்கமென்றுசந்த
தந்திடம்புரிந்தணைந்ததந்திரங்தெரிந்திசைந்து
பந்தெழும்புகின்றதென்றுபந்திகொண்டெழும்பவுஞ்ச
பந்தருஞ்சுகம்பொருந்துபந்தயங்களும்பகர்ந்து

வந்துவந்திருந்தகொங்கைமந்தரங்குலுங்கவண்டு
மண்டுகொண்டைகொண்டலென்றுவந்தொதுங்குசண்டைகண்டு
விந்தைவிந்தையென்றியம்பிவெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்தவேளைநல்லவேளையே. 6

மடியில்வைத்துமுலைபிடித்துவலியமுத்தமிடமுகத்தில்
வதனம்வைத்துமதனவித்தைவகைபிறக்கவவனுரைத்து
முடியுறைக்கநகமழுத்திமுதுகினிற்கைபடவணைத்து
முறுகிமெத்தவிறுகிவெட்கமுழுதும்விட்டுமெலவசைத்து
நெடியபுட்கள்குரலெழுப்பிநிலைதரித்தவிழியிமைக்க
நினைவுமற்றபரவசத்தினிறைவெனக்குவரமயக்கி
விடியுமட்டுமனுபவித்துவெங்கடேசுரெட்டமன்
விரகதாபமதுதணித்தவேளைநல்லவேளையே. 7

மடக்கு

சுரதஞ்செயவேகடிதடவிச்சுரதங்கனையேதொட்டதுமீ
சுரதந்திரமாமதனையுமீசுரதந்திரமென்றெண்ணேனே
சரசஞ்சொலியேநகைத்துமிச்சரசந்தானேமுடித்ததுபூச்
சரசம்பிரமவேளெடுத்தசரசஞ்சலமுந்தவிர்ந்தேனே
கரகஞ்சமுமென்முலையானகரகந்தொடுமப்போதிலநங்
கரகந்தையும்போய்விட்டதாகரகந்திருவமணமிதுவே
அரவந்தருபுட்குரன்முழங்கஅரவந்தனிலேநடித்தமுகில்
ஆமால்வெங்கடேசுரெட்டன்அநுபோகத்தைதொடுத்தானே.

மடக்கு

சேலையுரிந்தான்கடிந்துவிழிச்சேலையுருட்டிப்பார்க்கையிலே
செவ்வாயிதழைக்கொடுத்தானுன்செவ்வாய்நீவிப்பற்பதித்தேன்
மாலைசரிந்தபிடரினுக்குள்மாலையமைந்தபிறைபோல
வைத்தானகத்தைக்கைவளையுஞ்சுவைத்தானயமீதென்றுரைத்தேன்
காலையிடுப்பிலிறுக்கியொருக்காலைவகையாலிங்கனத்தாற்
கட்டியணைக்கத்தொடுத்தவகைக்கட்டிச்சொலவுமனம்வருமோ
மேலையெடுத்ததிரைக்கட்லேவேலையெடுத்தமுருகனைப்போல்
வெங்கடேசுரெட்டனெனைமேவச்சமயம்வாய்த்ததுவே. 9

மடக்கு

கலசமுலையைதொட்டெனையுங்கலசமதியாமெனிற்பிடித்துக்
கசக்குமுலைக்காம்பையும்பருகக்கசக்குமெனநினையாதே

சலவையுரிவேனுயர்ந்தபுயாசலவையினுநான்விடுவேனோ
சவாதுவழித்துக்கழுத்தினிற்பூசவாதுவரைநேரிதழ்பருகு
புலவிதனையேநினைப்பதுநான்புலவிதலவோசமயமென்றே
புகழ்சேர்வெங்கடேசுரெட்டபூபாவுனையேநானினைந்தேன்
நிலவானதுவுங்குளிரமந்தாநிலவாசமும்வந்தடிக்கவுநான்
நினைப்பாயலிலேமருவவுநீநினைப்பாயலிலேயென்றேனே. 10

கனவில்வருமன்னவனெனதுகையைப்பிடித்துமடியில்வைத்துக்
கார்போற்குழலைக்கோதியவன்கையான்முதுகைத்தடவியுமென்
மனதுகுளிரமுன்புசுருள்வழங்கியவனேபின்புமுத்தம்
வழங்கித்தலையைவளைத்தரமாறிச்சுவைத்தான்வகைக்காரன்
சனகன்மகளைமணம்பொருந்துந்தாமோதரன்போலிருபுயமுஞ்
சாதிவனசக்கண்மலருஞ்சந்திரோதயம்போற்றிருமுகமும்
எனதுவிழியிற்குளிரவுங்கண்டிருந்தேன்வெங்கடேசுரெட்ட
மேந்த்ரன்கலவிதனைக்கடலேஇன்னம்புகல்வேன்கேட்பாயே. 11

ஆழியிடத்திலிருந்தாளென்றவளுமுரைப்பமகிழ்ந்துகணை
ஆழிகொடுத்தானதனுடனேஅதிகவிலைமுத்தமுங்கொடுத்தான்
ஊழிகாலம்வாழியெனஉரைக்கத்தூதியெமைப்புரக்கும்
உறவோன்வெங்கடேசுரெட்டன்உகந்துவெகுமானமுங்கொடுத்தான்
சூழியானையென்றமுலைத்துணைமேலேற்றிமுரசமெனத்
தொனிக்குஞ்சிலம்புமலம்பவளைதுகிலுந்தரிக்கமனைக்குள்வந்தேன்
வாழியெனவேநானிருந்தேன்மாரப்பயலும்புறம்போனான்
மையலொழிந்துகண்பொருந்திமன்னன்வரவுங்கண்டேனே. 12

மடக்கு

கடலேயுன்போல்வந்தவளைக்கண்டேன்மகிழ்ந்தேன்வார்த்தையுங்கற்
கண்டேயுரைப்பதெல்லாநிகண்டேயெனவுங்கண்டேனே
உடலேபசந்தாயென்றுளார்உறவேன்பசந்தாயுரைக்கவெனக்
கொருவரிலாதவாறென்றேன்உள்ளதெனவேதலையசைத்துத்
திடமேபுகன்றுள்புவிபுரந்தசெயமால்வெங்கடேசுரெட்ட
தீரன்கொலுவிற்சென்றுளென்செய்தியுரைத்துன்பவனிகண்ட
தடமென்முலையார்பொதுமாதர்தம்மிலொருத்திபதுமினிப்பெண்
தாமங்கொடுக்கவேண்டுமென்றுள்சாமிகருத்துமிசைந்தானே. 13

மடக்கு

காமனிவனேயென்னிலவன்கறுப்பனிவனைச்சிவப்பனென்பார்
காளைவேலனென்னிலவன்கண்ணீராறுங்கலந்திருப்பான்

பூமன்னவரைநிகருரையாப்பூமான்வெங்கடேசுரெட்டன்
புகழ்சேரெட்டப்புரந்தழைக்கப்புருகூதனைப்போல்வரக்கண்டேன்
சோமன்றனக்குமாமனையேதுணையாயிருக்குமாமனையே
சூழும்புவிக்குள்வளைபட்டேதுடித்தேன்மதனால்வளைபட்டேன்
ஆமன்மதன்சேர்வைப்பறையேஆரமணிசேர்வைப்பறையே
ஆழநிலையாப்பயனிலையேஅன்னையாலும்பயனிலையே. 14

## கடலுக்குந் தலைவிக்குஞ் சிலேடை-மடக்கு

கச்சங்கடக்கவடங்காக்கொங்கைக்கும்பசலைபொருந்தியனங்
கைக்கும்படிக்குமிருந்துமடல்கைக்குந்தரிக்கவெண்ணிமதி
உச்சம்பார்க்குமடவார்கள்உள்ளங்கவரக்காமனைப்போல்
உதித்தோன்வெங்கடேசுரெட்டன்உலாவப்பார்த்தேன்பெருங்கட
அச்சங்கூருமுன்னிடத்தில்அச்சங்கூருமென்னிடத்தில் [லே
அம்பாலசைவாய்நீயுமதன் அம்பாலசைவுமெனக்குண்டே
மச்சங்கடவாதுன்னையுங்காமச்சங்கடவாதெனக்குமுண்டாம்
வணங்காராகுமுனக்கெனக்கும்வணங்காராகுஞ்சிலதியரே. 15

## மடக்கு

வருந்துஞ்சனகிமுகம்பார்த்துவரிவிற்பலத்தைப்பின்பார்த்து
மணக்கோலஞ்செய்திருந்தவன்வேள்மணக்கோலஞ்செய்ததைப்பா
திருந்துவளையும்போச்செனவேதெரிவைமாதர்பயலாகுஞ் [ரான்
செயவேள்வெங்கடேசுரெட்டதீரனிளசைக்கடற்றுறைவாய்
இருந்ததிடனாகக்காவேஎன்னைத்திடனாகக்காவே
ஏற்றதாலத்திடந்தூரேஏசுந்தாலத்திடந்தூரே
பொருந்துமணவின்வாய்த்திட்டேபொறுப்பேனோதாய்வாய்த்திட்டே
புதிதாமதியாந்தினமேபொருகாமதியாநந்தினமே. 16

## மடக்கு

காரியனையகொடைக்குமுபகாரிதழ்பாராட்டும்விப
காரிமதியோசனையாலுங்காரியகருமம்பகர்வோன்
வேரிவனசத்திருமாதைவிழியுளிருத்திப்பகையனைத்தும்
வென்றோன்வெங்கடேசுரெட்டன்மேவுமுசைக்கடற்றுறைவாய்
வாரிமுகட்டிலெழுகலமேவளைபோனதுவுமெழுகலமே
வந்தால்வருமீசுரப்பாறேமையலெனக்குஞ்சுரப்பாறே
நீரினாறுமீன்புலவேநெடுநாட்செலுமோநான்புலவே
நெய்தறிபடருங்கொடியாரேநேயரனைமார்கொடியாரே. 17

மடக்கு

கனத்துப்புடைத்துப்பருத்துவிம்மிக்காம்புதிரண்டுகண்கறுத்துக்
காமன்மகுடம்போற்பரந்துகச்சுக்கடங்காக்கனதனத்தார்
மனத்துக்கிசைந்தவடிவழகன்மதவேள்வெங்கடேசுரெட்டன்
வைகைநதியும்வைப்பாறும்வந்துபெருகுங்கடற்றுறையே
உனக்குளேவாசஞ்சலமேஉள்ளத்துளவாசஞ்சலமே
ஒழியாதுப்புமயக்கம்மேஉண்டேதுப்புமயக்கம்மே
சினத்துமோதுவரியாரேதெரிந்துமோதுவரியாரே
தேனுக்கோடமலைத்தேனேசித்தங்கோடமலைத்தேனே. 18

பாட்டுடைத்தலைவன் குணத்துக்குங்
கடலுக்குஞ் சிலேடை
மடக்கு

தெரியவமுதம்பழகுமதிதெரிந்தவாரம்பிரியாமற்
றீரத்திடமுநீங்காமற்செழிக்கவாய்மைகடவாமல்
வரிசைபுரிந்துதமிழ்ப்புனையவந்தேன்வெங்கடேசுரெட்டன்
மனதுநிறையுங்குணம்போலவளரும்பெரியகடற்றுறைவாய்ப்
பெரியமீனேசினக்கயலேபெண்பாலெவருமெனக்கயலே
பெருகுந்திரையிற்செல்லீரேபிழைக்கத்தூதுசெல்லீரே
அரியின்மனையேமூடலையேஅமைந்தாரெவருமூடலையே
அரனார்க்குத்தாங்கணைக்கூடேஅணுகேன்மலர்தாங்கணைக்கூடே. ()

ஆக செய்யுள்-995.

---

## பின்முடுகுவெண்பாவும்-வெண்டுறையும்

கல்விக்குஞானக்கருத்துண்டாங்காயமுறும்
தொல்வினைகளெல்லாந்தொலையுமே-வில்லைத
னிற்புயற்றிருக்கணத்தனித்தன்வச்சிரப்புயத்தோர்
கற்பகத்தினைத்துதித்தக்கால். 1

சிந்தாகுலந்தீருஞ்செய்கருமங்கைகூடும்
சந்தானமென்றுந்தழைத்தேறும்-பைந்தாமத்
தானைவயத்தானைமலைப்பாவையளித்தானைமகத்
தானைமுகத்தானைநினைத்தால். 2

செல்வம்பெறலாஞ்செழித்தபுகழ்சேரலாம்
வில்வப்புனைவார்விரிஞ்சேசர்-புல்லுமதன்

கோளைமுடித்தாரிமயக்கோதையிடத்தார்கமலத்
தாளைமனத்தூடுநினைத்தால். 3

அண்டர்தமக்கரசாமன்புபடர்க்கொம்பாம்
மண்டவுணர்தம்முயிர்க்குவன்னியாம்-பண்டுதிறற்
கஞ்சனஞ்சிடுங்கடம்பணிந்தெழுந்துகந்துசூரை
மிஞ்சிநெஞ்சுறிந்தெழுந்தவேல். 4

ஆதரவாயென்னருகிலஞ்சலென்றுவந்துநின்று
போதரவுசெய்யுமெப்போதுமே-ஓதுதமிழ்ச்
சந்ததமுமலங்கிர்தஞ்செறிந்துநன்குயர்ந்துதங்கு
விந்தைகொண்டிலங்குசெந்தில்வேல். 5

இங்கிதமாங்ல்வாழ்வெமக்களிக்குமுற்பகல்செய்
சங்கடமாம்வேலைதணிக்குமே-பொங்கமுறத்
தற்பரற்கனுக்கிரகித்திடக்கருத்தனித்தசத்த
வெற்பினைத்துளைத்தவுக்ரவேல். 6

ஈட்டும்வினைகளறுத்தின்பமுறவேயெனது
பாட்டுக்குகந்தருள்பாலிக்குமே-நாட்டமிகும்
மண்டலங்கலங்ககண்டர்துண்டர்மிண்டராவி
விண்டொடுங்கமண்டியுண்டவேல். 7

உன்னவினிதாயிருக்குமோங்குசெல்வமும்பெருக்கும்
நன்னலருளைக்கொடுக்குநாடோறும்-பன்னும்
சகடமுருளநெருடுகமலசரணகருணையரியின்மருகன்
விகடகரியினிளையமுருகன்வேல். 8

ஊழ்வினையைப்போக்குமேயுள்ளொளியைக்காட்டுமே
வாழ்வதற்கோர்வித்தாய்வளருமே-தாழ்வார்
தடபடவெனவதிர்கடலதின்முடிமிசை
விடவதிபொடிசெயும்வேல். 9

ஓராறுசென்னியொருமுருகாவென்றளவில்
தீராதவல்வினைநோய்தீருமே-போராடிக்
கொக்கரித்துவெற்படர்த்துக்கொக்கரக்கனைத்துணித்த
விக்ரமத்திருக்கரத்துவேல். 10

கந்தாகடம்பாகயிலாயமாமலையான்
மைந்தாசுவாமிவடிவேலா-சந்தக்

குறமகளாசைகொள்கணவாகுருபரனாகியகுமரா
அறுமுகவாபழனியின்வேலா. 11

அன்பர்பயங்கெடுக்குபத்திகிரியைத்துளைக்கும்
இன்பவல்லிகண்ணுக்கெதிராகும்-மின்பரந்த
வாகுதோளிலேறிமீறிவாகுசாரியோடியாடி
வேகசூரன்மார்பிளந்தவேல். 12

அஞ்சிமயல்சகியாதங்கமுருகிநின்ற
வஞ்சியைச்சேர்தென்றணிகைவள்ளலே-பஞ்சமலர்
அங்கசனுக்குங்கிரணத்தந்திமதிக்குங்கடலுக்
குங்குழலுக்குங்குயிலுக்கும். 13

வாங்குசிலைநுதலார்மாயக்கலவியிலே
ஏங்கிமனமேயிளையாதே-மாங்கனிக்காத்
தம்பியொக்கச்சண்டையிட்டுத்தந்தையைச்சுற்றந்தவொற்றைக்
கொம்பனைச்சற்றன்புவைத்துக்கூறு. 14

தாமரைப்பூந்தேனையுண்டுதாதளைந்துவண்டிமிர்ந்து
காமரஞ்செய்வாவிகள்சூழ்கந்தர்சிவ-மாமலைவாழ்
பூவையரங்கந்தங்கம்பூகமிலங்குங்கண்டம்
காவையரங்கஞ்சங்கண்காண். 15

வந்துமழைபொழியும்வானேவெஞ்சூர்தடிந்த
கந்தர்திருவிழாக்காலத்தில்-தொந்தரையா
நீர்த்துளியையூற்றிவிடனேர்த்தியலமாற்றிவிடு
கீர்த்திவருநாட்டென்மொழிகேள். 16

போற்றுவார்வல்வினையைப்போக்குமேபூமலர்கொண்
டேற்றுவாரைக்கயிலையேற்றுமே-தோற்றரிய
சந்தந்தங்குஞ்செஞ்சொற்சங்கம்பொங்குஞ்செந்திற்
கந்தன்செம்பொன்றண்டைக்கால். 17

ஆறுமுகமென்றளவிலச்சந்தவிர்க்குமே
வேறுவினைவந்தால்விலக்குமே-கூறுபுகழ்
மாரியொத்தசூரபத்மன்மார்பிளக்கவேகொடுத்த
வீரசத்தியான்மிகுத்தவேல். 18

வேலாவிராலிமலைவீராவுனக்கொருபெண்
மாலாகியேநின்றுவாடுகிறாள்-நீலான

உற்பலக்கயற்கணிச்சியுத்தரித்திடச்சமர்த்தி
அற்பசிற்றிடைக்கொடிச்சியாள். 19

கந்தனென்றும்வேலனென்றுங்கானமயில்வீரனென்றும்
செந்தனென்றுமேன்புலவீர்செப்புகிறீர்-முந்தவிளங்
கூனற்பிறைசூடச்சிவனுருக்குபதேசித்தருள்
ஞானக்குருவேடப்பயலை. 20

பன்னிரண்டுதோளாபரங்குன்றாவெப்பொழுதும்
என்னிரண்டுதோண்மீதிலேயிருப்பாய்-பொன்னின்
கதிர்முடியப்பாகுகிடக்கனவரையப்பாபழனிக்
கதிபதியப்பாகுமரப்பா. 21

நோகாதோவேலாநீநோக்குமடமானுக்காப்
போகாவனந்தேடிப்போனக்கால்-வாகாத்
தினநினைந்திட்டுனைவணங்கித்திரிமன்பர்க்கருள்செயும்பொற்
கனகதண்டைச்சிறுசதங்கைக்கால். 22

வாரீர்பழனிவடிவேலரேகடம்பைத்
தாரீரென்சிந்தையினிற்றானுறைவீர்-சேரீர்நீர்
கன்றுநஞ்சுபிஞ்சுமஞ்சுகண்களுஞ்சிவந்துபொங்க
என்றனங்களுங்கசங்கவே. 23

மேகநிறமான்மருகவீறுதணிகேசவிது
வாகதினமேவுமிவளாவியருள்-வாகுவளை
நத்தத்திற்பற்றிநச்சுப்பைக்குட்டத்து
நிர்த்தத்திற்கிச்சித்தநீர். 24

பூவைக்குநண்ணுபகற்போதுகமதாமெலிந்தாள்
வாவிக்கவின்றணிகைவாழ்குமரா-பாவிமதன்
அம்புரம்புகுந்தலைக்கவம்பகந்தணந்தெறிக்க
வெம்பிநெஞ்சமுந்திகைக்கவே. 25

அம்பிறைக்குமைந்துமலரம்பிறைக்குநொந்துமிக
அம்பிறைக்குங்கண்ணாட்கருள்புரிவாய்-நம்புதணி
கைக்கிரிக்குளுற்றசித்ரகச்சுடைத்தனக்குறத்தி
யைக்களித்தணைத்தவத்தனே. 26

என்னிடத்திலேகுமராவெண்ணாதேபேதகமா
உன்னிடத்திற்கொண்டமயற்கோதாயோ-துன்னிரவு

செல்லாப்பகட்டுமென்கண்செல்லாப்புரட்டுமங்கம்
பொல்லாப்பரத்தைவஞ்சிபோல். 27

செங்கமலக்கண் கலங்கிச்சிந்தைநொந்திராமுழுதும்
வெங்கலைக்குஞ்சங்கலைக்கும்வேலோனே-அங்கசன்றன்
பூங்கணைமெத்தத்தைத்துப்பூங்கொடிகத்திப்பட்டுத்
தாங்கணைமெத்தத்தைத்துத்தான். 28

சங்கநிதியோரகம்வாழ்சண்முகனேநின்மோக
மங்கையெழின்மேனிகளம்வண்மருங்கு-கொங்கைசெங்கண்
கந்தந்தங்கந்தங்கங்கம்பந்தந்தந்தம்
பந்தந்தந்தண்கஞ்சம்பார். 29

நீமருவவாமுருகாநித்திலங்களுஞ்சிந்தக்
காமருதேன்பூட்டிநெடுங்கன்னல்வளைத்-தேமதனன்
வண்டுவரக்கண்டுளறிவண்டுமதியும்பரிபோய்
வண்டுவரவால்புலம்புவாள். 30

நூறுமுகமாய்ப்புகழ்ந்துநூறாயிரம்பேர்தம்
வேறுமுகம்பார்த்திருக்கவேண்டாமே-ஆறுமுகச்
சுத்தனைச்சித்தத்துவைத்துச்சொற்றமிழ்ச்சித்ரக்கவிக்குட்
கத்தனைச்சற்றுத்துதித்தக்கால். 31

பங்கயக்கண்வேலவனேபைந்தொடியாடேடிநித
மங்கமிகவுந்தளர்ந்துவாடுகிறாள்-செங்கைமலர்
அன்னநடைமின்னலொளிசின்னவிடைவன்னமுலை
கன்னன்மொழிமன்னுமிவள்காண். 32

எத்திக்கும்போற்றுமிவளையெழிற்குமரா
தித்திக்குநின்கனிவாய்த்தேனூறன்-முத்தமிட்டுச்
சித்திரச்செப்புத்தனத்தைச்சிக்கெனக்கட்டிப்பிடித்துச்
சித்தமொத்துப்பொற்பதத்திற்சேர். 33

வேலவர்தாநேற்றணைந்தவிந்தையைநானேதுசொல்வேன்
கோலவடமோசையிடக்கொம்பனையே-சீலமுடன்
கட்டிமுத்தமிட்டணைத்துக்கட்டிமைக்கணைச்சுவைத்து
மெட்டினைப்பதத்திலிட்டுமேல். 34

வேலவனேநின்கலவிவிந்தையதற்கேற்றமங்கை
கோலவரிக்கண்சுழற்றிக்கொஞ்சுகிளி-போலமுலைக்
கச்சுக்குட்சிக்கச்சொக்கப்பொற்சுட்டிக்கட்டிப்
பச்சைப்பொட்டிட்டத்தைப்பார். 35

ஏவிழியார்மூரலிளநிலாக்கண்டுகருங்
காவிமுகையவிழுங்காஞ்சியே-மேவலரூர்ச்
சக்கரக்கரக்குதைக்கதக்கணைக்கிலக்கெனக்கொள்
நக்கரக்கரக்கணக்கர்நாடு. 36

நாலாநாள்சேர்ந்தணைந்தநன்னயத்தையெண்ணிமெத்த
மாலானுள்வேலவனேமாரனெய்யும்-கோலரலே
வண்டுகுடியானகுழல்வஞ்சியெனமோபயந்து
வண்டுகுடியாண்மருவவா. 37

வானுதித்தமாமதிக்கும்வாரிவிட்டவேள்கணைக்கும்
மீனுதித்தவாரிதிக்குமேதினிக்குள்-நானொருத்தி
சிந்தைவாடிநொந்தசேதிசெங்கைவேலர்பங்கிலோடி
மந்தமாருதஞ்சொலோதுமா. 38

செந்தழல்போல்வீசுதினிச்சேர்ந்தணைவாய்வேலவனே
கந்தமலர்ச்சோலைவண்டுங்கார்க்குயிலுங்-தொந்தமுடன்
பாடுதுவம்புந்தும்பும்பார்மதனுந்தும்வந்துஞ்
சாடுதுவம்புந்தும்பிந்தா. 39

வாகந்தாவல்லவென்றால்வாகந்தாராகிலுந்தா
சோகந்தான்மீறிவளைத்தோய்ந்திடவே-நாகஞ்சேர்
மாலையிந்துசோலைவண்டுமாரனம்புசூழநொந்திவ்
வேழைநெஞ்சமேகலங்கினள். 40

பாகாருமின்சொல்வள்ளிபாகாதேவேந்த்ரனருள்
வாகானகுஞ்சரிவிவாகாநீ-யேகாவல்
என்றாநம்புமென்றநொந்தசிந்தையன்புபொங்கவந்து
நின்றுகொண்டிரங்குகந்தனே. 41

வாதாவுன்னாலுநடவாதாவோராறிரண்டு
காதாவுன்சித்தமிரங்காதா-நீதாவென்
சிந்தைக்கிசைந்தபடிசெஞ்சொற்கிரங்கியருள்
கந்தப்ரசண்டமுருகா. 42

வந்தனையாவென்றுதுயர்மாற்றிமனவேட்கையெல்லாம்
வந்தனையாத்தந்தருளுமாதவா-பந்தனைய
கொங்கைகுறமங்கையொடுகுஞ்சரிபுயந்தழுவு
கங்கையுமைதந்திடுகுகா. 43

அந்தணர்கள்போற்றுமருந்தணிகைவாழ்குமரர்
வந்துகலந்துமருவாநாள்-பைந்தொடிக்கு
மேல்படுத்தமுத்தனங்கன்வேல்படப்பொரிந்துதென்றற்
கால்படச்சரிந்ததென்பள்காண். 44

மெத்தமயலாகிமெலிந்தயர்ந்துவாடுகிறாள்
சித்தமுவந்தாண்டருளுஞ்செவ்வேளே-இத்தலத்தில்
கண்டுமொழிகண்டஞ்சுங்கங்குல்குழல்கண்டஞ்சும்
வண்டுவிழிகண்டஞ்சுமான். 45

இருபுறமுங்காவேரியோர்மாலையாச்சூழ்
திருவரங்காவெங்கள்குலதேவா-வெருவ
எரிபுரிந்துவிழிசிவந்துயமனிருடண்டவுருவுகொண்டு
வரவுகண்டுதிகிரிகொண்டுவா. 46

ஒருத்திமிகமயல்கொண்டுன்சமுகம்வந்தாள்
திருத்தியணையென்றுவகைசெப்பி-யுரைத்திடுநற்
செப்புமுலைச்சொற்பகழிக்கோத்தவிழிச்சித்திரவிற்
பொற்புருவத்துப்பதரத்தாள். 47

பாலாழிநீங்கியிந்தப்பார்தனிலோர்கள்ளனுக்கா
மாலாழிசங்கொளித்துவந்தருளக்-காலாழி
அன்றதைக்கடித்திழுக்கவங்கவற்களித்தமுத்தி
இன்றளிக்கவென்றனக்குநீ. 48

பாரோர்புகழவரும்பங்குனியுத்திரத்தில்
ஆரூரர்வீதியணுகினார்-நேரே
பணச்சர்ப்பந்தரித்துப்பொற்பதத்திற்கிண்கிணிச்சத்தங்
கிணுக்குக்கிண்கிணுக்கென்னவே. 49

திருவுளவாயிற்பதியிற்சேவேறுமீசா
மருவுளகொன்றைத்தார்வழங்கில்-வெருவுளதோ
சங்கமும்விழுந்திடாதுதங்கமும்மெழுந்திடாது
திங்களும்மழன்றிடாதுதேர். 50

செங்கயலோநீலவண்டோசித்தசன்கைநீலவண்டோ
பங்கயமோமால்வளரும்பாற்கடலோ-தங்கமலி
வச்சிரநகைச்சிகனவச்சிரவின்மெச்சுபுரு
வச்சினவிடைச்சிவிழிபார். 51

உன்மனதுமென்மனதுமோர்மனதாவொன்றிடினே
மன்மதனும்வில்லெடுக்கமாட்டானே-நன்மதிதோய்
குன்றடர்ந்துபந்தைவென்றுகொம்படைந்ததும்பிகுன்ற
வென்றடைந்தகொங்கைமங்கையே. 52

நித்தமுநினைத்திரவினித்திரையுமற்றுருகி
சித்தசனெடுத்துவருடித்தகணை-தைத்துருகி
மெத்தமயலுற்றுபிரமித்துதலைசுற்றுதடி
தத்தையொருமுத்தமதுதா. 53

வேலோகடலோவிடமோகருவண்டோ
சேலோகணையோசிறுவாளோ-கோலமுடன்
தண்டங்கித்துண்டுருளத்தத்திவிழக்குத்துமுலைக்
கண்டங்கிக்காரிகடைக்கண். 54

நீலமோவேலோநெடுங்கயலோவாரிதிசேர்
ஆலமோவம்புயமோவைங்கணையோ-நீலநிற
வாவிச்சோலைக்கருகில்தங்துபுனலாடுகின்ற
காவிச்சேலைக்காரிக்கண். 55

சேலோகணையோபிணையோநற்றென்னவன்கை
வேலோநமனோமிளிர்வண்டோ-சாலப்
பளபளென்றுவொளிமிகுந்துபவளமிஞ்சுநகைபுனைந்த
களபகும்பமுலைமடந்தைகண். 56

முக்கனியிதழ்க்கொடடாமுற்கதிரையிற்குமரா
விக்கநறைமிக்கவினியிக்கமுது-சர்க்கரைரு
சிக்கிலைகசக்குதுநிசிக்கலையுதிக்கிலதில்
அக்கரைபயக்குமடடா. 57

ஆரார்பொறுப்பார்சொல்லாதித்தாவஞ்சிமன்னா
சேராபராராஜசேகரே-நேரே
சினத்துவட்டமிட்டுசெப்பெனப்பணைத்துதித்தபொற்
றனத்திலிட்டமுத்துவெக்கைதான். 58

இந்நேரநீயவளையின்பமணமேபுரிவாய்
தன்னேரருணாசலதுரையே-மன்னுமதன்
பூவினம்பையேவநின்றுபோர்செய்கின்றதான்மெலிந்து
காவியங்கணாள்கலங்கினாள். 59

கோங்கினரும்போகுமிழியோபொற்பந்தோ
ஓங்குவரையோவொளிர்செப்போ-மாங்குயிலின்
மன்னுமொழியன்னநடைமின்னலிடையென்னவரு
கன்னிவளர்சின்னமுலைகள். 60

இத்தலத்தோர்போற்றுமிறைவனே தஞ்சைநகர்
வித்தகனேசிவாஜிவேந்தேகேள்-சித்தசன்றன்
சமரிலங்கக்குழலுநந்தஞ்சதிருறும்பெண்டிருமுகஞ்செங்
கமலமுஞ்சந்திரனுமஞ்சுங்காண். 61

பூமிதனிற்பேசும்புனிதாசிவாஜிமன்னா
காமியின்மேலின்றுபகைகண்டதுகேள்-காமனவன்
மாகரமுந்தோகையருமாமதியும்பாலனமும்
சாகரமுங்கோகிலமுந்தாம். 62

மண்டலத்தோர்பேசுகின்றமாலேசிவாஜிமன்னா
கண்டஞ்சுக்கன்னிதனங்கைத்தாளம்-செண்டுசிமிழ்
கும்பமம்புயங்கிரீடங்குஞ்சரங்குரும்பைமேரு
பம்பரஞ்சிறந்தசூதுபார். 63

மாதங்கவத்திரற்குவட்டமளித்தோனுதவும்
மாதங்கவத்திரற்பின்வந்தகுகா-மாதங்கந்
தங்கங்கம்பம்பொந்துந்தண்கஞ்சங்கண்கண்டம்
பங்கந்தங்குஞ்சங்கம்பார். 64

கடுமொழிசேர்சூரைவென்றகந்தாவிம்மாதின்
நடுமொழிகளங்கண்முனாநற்றாள்-ஒடுசேரத்
தந்தஞ்சுங்கண்டஞ்சுஞ்சங்கஞ்சும்வண்டஞ்சும்
பந்தஞ்சும்பஞ்சஞ்சும்பார். 65

என்றுவடிவேலிளங்குமரனைக்கண்டாள்
அன்றுமுதற்சேரமனதாகியே-இன்றுறும
திக்கிளைத்துச்சொக்கிவட்குத்திக்கிலைப்பக்கத்தடுத்துச்
சுக்கெடுத்துத்தட்டிவைத்தாது. 66

என்னைச்சொல்வாரல்லதென்னைவிதித்தகுகன்
றன்னைச்சொல்வாரிலையித்தாரணியில்-கன்னி
தனைமறந்தாளளைமறந்தாடுயிறுறந்தாளணைபொருந்தாள்
எனைமறந்தாளுனைமறந்தாளென்று. 67

அன்றயன்மால்காணாவடிமுடியைக்காண்பதற்குத்
தென்றிசைக்கோனென்னதவஞ்செய்தானோ-வென்றிதிகழ்
ஆடரவாளாநீறணிதோளாவாதிரைநாளாமாதுமணாளா
தோடவிர்காதாமாகடவூராசொல். 68

தென்றலுலவுந்திருக்கடவூரெம்பெருமான்
மன்றல்செறிந்தேமதுவூறும்-கொன்றைக்காப் [மிகுந்தும்
பொன்பரவுந்திண்கொங்கையிரண்டும்புண்படநொந்துந்துன்ப
அன்புதிரண்டும்பெண்கொடிநெஞ்சஞ்சும். 69

பாலனுக்காவன்றுபகடேறிவந்தெதிர்த்த
காலனுக்குக்காலாகடவூரா-மேலோர் [கண்டு
கரும்புகொண்டங்கெதிர்ந்துவந்தங்கசன்பெருஞ்செஞ்சரங்கள்
மருண்டுநெஞ்சங்கலங்குமென்றன்மான். 70

தொண்டருடன்கூடித்துதித்திரண்டுகண்ணாரக்
கண்டுதொழுவேனோகடவூரா-பண்டோர்
அழுதிருக்குஞ்சிறுகடத்தன்றெழுமுனக்கன்பரைமருட்டும்
சமனையெற்றும்பரிபுரச்செந்தாள். 71

என்றுதொழுவேனெளியேனளிமுரலு
கொன்றையணிதென்கடவூர்க்கோமானே-துன்றும் [ரத்
கனற்பொறிக்கட்பகட்டிலுற்றுக்கறுத்ததெற்குத்திசைக்குளுக்
தனைச்சினத்திட்டுதைத்தபத்மத்தாள். 72

பற்றிப்பணிந்துபரவவரந்தருவாய்
கற்றைச்சடையாகடவூரா-வெற்றிநெடுங்
கொண்டலொக்குங்கண்டசத்தங்கொண்டெதிர்த்தங்கக்கருக்குஞ்
சண்டனைக்கண்டன்றுதைக்குந்தாள். 73

ஆற்றுமோநெஞ்சத்தடங்குமோகொண்டமையல்
கூற்றுதைத்தத்தென்கடவூர்க்கோமானே-மாற்றுயர்பொற்
கும்பமுலைத்திங்கணுதற்கொந்தளக்கொம்பைவெறுத்
தம்புதொடுத்தங்கசன்விட்டால். 74

காணப்பெற்றோமிரண்டுகண்ணாரக்கண்டன்பு
பூணப்பெற்றோமனமேபோதாதோ-சேணிற்
புரம்புரம்புரிந்திடும்புரந்தரன்பதந்தரும்
பரம்பரந்தருஞ்சிதம்பரம். 75

கண்டேன்சிதம்பரத்தைக்கண்குளிரமெய்ஞ்ஞானங்
கொண்டேன்சிவாயவென்றுகும்பிட்டேன்-வண்டேகேள் [கத்
நீண்டசெம்பொற்காண்டகும்விற்பூண்டசெங்கைப்பாண்டரங்
தாண்டவன்றட்பூஞ்சதங்கைத்தாள். 76

தேரோடும்வீதியெலாஞ்செங்கயலுஞ்சங்கினமும்
நீரோடுலாவிவருநெல்லையே-காரோடும்
சுந்தரத்தரந்தரத்தர்கந்தரத்தரந்தரத்தர்
கந்தரத்தரந்தரத்தர்காப்பு. 77

வல்லாளகண்டாவடுகநாதாசுவர்க்க
வல்லாளகண்டமயல்கொண்டு-பொல்லாத
சித்தசன்சரத்தினொந்துதிர்த்தகண்கண்முத்துடன்கை
நத்திழந்திடத்தயங்கினள். 78

பூவணைமேனாட்டம்பொருந்தாதிருப்பவளைக்
காவடுகநாதாதென்கால்சீறித்-தாவிவர
இக்குவிலிநற்கணைகளிக்கணமெடுக்கமதி
அக்கிளிதரக்கவலையாய். 79

தாண்டவாவென்றுதளருந்தனியிருந்தென்
ஆண்டவாவந்தென்னையாளென்று-மீண்டுமதன்
தொட்டநஞ்சம்பிற்கிரங்குஞ்சொற்றளர்ந்தென்றத்தையங்கம்
சுட்டவெண்டிங்கட்குடைந்தஞ்சும். 80

பந்தளவுகந்தளபந்தணையணிந்தமுலை
கொந்தளகபந்தமுமிருந்தமுகில்-அந்தமுள
தந்தெனமெலிந்தவிடைதந்தவரியுந்தாளம்
எந்தநகரிந்தமயிலே. 81

தேசமதனிற்பேசுந்தேவாசிவாஜிமன்னா
வாசமலர்மாலையணிமார்பாநீ-நேசமொடு
நாடுமடமாதுமதனாலுமதியாலுமிக
வாடுமடவாளையணைவா. 82

பாரதனிற்பேசும்பரனேசிவாஜிமன்னா
சீரமைந்தமாதுகொங்கைச்சித்திரங்கண்-டேரமர்கும்
பங்கயங்கிண்ணஞ்சிலம்பந்திலங்குஞ்செங்குடங்கம்
பங்கயந்தண்டெங்குமஞ்சும்பார். 83

சித்தசனல்வாடுகிறேன்சேர்ந்தணையவேளையிது
வித்தைசெய்யவேண்டாங்காண்வேலவனே-நித்யப்
படிக்குத்தணித்துப்படுத்துத்தவித்துத்
துடித்துத்திகைத்திப்படி. 84

எய்யவந்தகாமாவினக்கிங்கிடமில்லை
உய்யவந்தானென்னேடுறவானுன்-செய்யமலர்த்
தேனைவிடுபூவைமுடிதின்றுவிடுகைக்கரும்பை
மீனையொருகாசாகவில். 85

வேலனேவேளூர்வினைதீர்த்தவனுதவும்
பாலனேசேனுபதிவேளே-சீலனே [கைப்
கோங்கரும்பிற்கொங்குகொங்கைக்கூந்தல்கொண்டற்காந்தளங்
பூங்கரும்பிற்காங்கடம்பிற்பூ. 86

சுடுமோவிளங்தென்றல்தோகையின்மேலம்பு
படுமோமெய்வாதைப்படுமோ-கடவூரா
நீரணங்கார்வேணிநம்பாநீலகண்டாமேனியின்பால்
ஆரணங்கார்காலசங்கரா. 87

பேதையேன்காணப்பெறுவதெந்நாள்வேலவற்கோர்
தாதையேசெம்பொற்சபாநாதா-மாதவத்துச்
சாத்துலங்கண்டேத்தவும்பிந்தாப்புயங்கம்போற்றவுந்தித்
தாத்தெயென்றுந்துக்கிடுஞ்செந்தாள். 88

எல்லாருநன்றாயிருக்கட்டுமேதினிக்குள்
வில்லாருந்தென்பழனிவேலோனே-பொல்லாத
பாதகப்பரத்தைவைத்தபாசமெத்தமுற்றுமத்தைப
பேதகப்படுத்திவிட்டபோர். 89

வையம்புகழ்பழனிவாசன்குமரன்முரு
கையன்தழுவியணையாநாள்-தையல்
மதியழன்றுவளைகழன்றுமதனனம்புபடவுழன்று
மதிமறந்துமிகவருந்துவாள். 90

வேலாவிராலிமலைவித்தகாநின்மீதின்
மாலாகவேயொருபெண்மைபல்கொண்டாள்-மேலான
வட்டமிட்டபொற்றனத்திவச்சிரப்பதக்கமொய்த்த
கட்டிழைக்குறச்சிறுக்கிகாண். 91

மையுமணையும்வனப்புமிழந்தாண்மாது
செய்யும்விதமென்னசித்தசவேள்-எய்யும்
தனிச்சரத்தைத்தடுப்பதற்குத்திருத்தணிக்கர்த்தனுக்கெதிர்க்கக்
கணத்தினிற்புக்குரைத்திடத்திக்கார். 92

வைத்திடவேளாவிமருமத்தினஞ்சம்பால்
எத்தினனுடீரிதைக்காமீசரே-நத்துதிர்த்த
முத்துரத்தினத்தைவைத்திழைத்தவத்திரத்தையுற்ற
மத்தகத்தினத்திமெத்தபால். 93

பாகாகாவின்சொலுடைப்பைங்கொடிமேற்கோபமென்ன
வாகாகாமன்கணையால்வாடுகிறாள்-சீகாழி
மாநகரிலேநிதமும்வானவர்கடேவர்பணி
கானளினமானவடுகா. 94

அம்புலியூர்தன்னையடைமின்பணிமின்கள்
அம்புலியூர்விண்ணுலகையாள்வீர்கள்-அம்போரு
கத்தினயனத்திலகுகைத்தலனிவர்க்கரிய
சத்தினயனத்தியிடத்தான். 95

வாடுகிறாணின்மாலைவாங்கக்கிளியொன்று
தேடுகிறாளாரூர்த்தியாகரே-நாடி
அனகனம்புசொரியவிந்துவனலைமொண்டுவிசிறவெம்பி
மனதுநொந்துகலையிழந்தமான். 96

நீரோதிருவழகர்நீரோகரியமுகில்
நீரோதிருமலைமேனின்றருள்வோர்-நீரோ
வளர்ந்தசெம்பதங்கள்கொண்டெழுந்துமண்டலங்கள்பண்
டளந்துகொண்டடங்கலுண்டமால். 97

சித்திரமாங்கூடற்றிருவரங்கப்பெருமாள்
மெத்தெனவேபஞ்சணைக்குண்மேவியநாள்-நித்தமுமே
செங்கையுஞ்சங்கும்பொருந்துந்திங்களும்மங்குந்தயங்குங்
கொங்கையெங்குங்குங்குமந்தங்கும். 98

நாராயணரேரகுராமபத்திரரே
காராப்பசுமேய்த்துக்காளியன்மேல்-நீரோமுன்
தொக்கணகதிக்கணகதொந்திமிதிமிந்திமிதி
நக்கணகவென்றாடினார். 99

உறுகிள்ளைமாமொழியீரொற்றித்தியாகர்
சிறுபிள்ளையோவீண்செருக்கோ-பெறுகிருதோ
தொக்கணகதிக்கணகதொந்திமிதிமிந்திமிதி
நக்கணகவென்றாடினார். 100

பூமாலைபாமாலைபூண்டசட்டைநாயகனே
மாமாலைமின்கொண்டுவாடியன-லாமாலை
இந்தாலும்வந்தாலுமின்றாண்மெலிந்தோடி
வந்தாள்கலந்தாளுவாய். 101

மீனக்கொடியானேமின்னையணைவதற்குத்
தானெனவேவந்ததயாபரனே-ஏனையவற்
கென்னபலனென்னநடையென்னவிடையென்னவிதழ்க்
கன்னலெனுந்துன்னுமிதழா. 102

ஆலமோவேலோவலைகடலோவம்புயமோ
நீலமோமாரனெடுங்கணையோ-சாலச்
சிறுத்தவிடைபருத்தமுலைசிவத்தவிதழ்வெளுத்தநகை
கறுத்தகுழலொருத்திகடைக்கண். 103

நீரோசிதம்பரனார்நம்பதியோதென்புலியூர்
நீரோசுடலைக்குணிர்த்தனார்-நீரோ
கடத்தடக்களிற்றினைக்கருத்துறப்பிடித்திழுத்
தடர்த்திறுத்துரித்துடுத்தவர். 104

போற்றுவார்வல்வினையைப்போக்குமேபூமலர்கொண்
டேற்றுவாரைக்கயிலையேற்றுமே-சாற்றவிளங்
கந்தந்தங்குஞ்செஞ்சொற்கந்தப்பொங்குஞ்செந்திற்
கந்தன்செம்பொன்றண்டைக்கால். 105

வன்மத்தைநின்மனதில்வையாதேபாவியேங்
கன்மத்தைநீக்கிக்கரையேற்றாய்-சென்மத்து
ணாமலையுண்ணாமலுமின்னார்முலையுண்ணாமலுமண்
ணாமலையுண்ணாமுலையம்மா. 106

மேகங்கவிந்ததுபோன்மேலெழுந்தகாலனைக்கண்
டாகந்தளர்ந்துநெஞ்சமஞ்சாமுன்-மாகடவூர்ப்
பூதநாதாவேதகீதாபூவில்தாதாதேடுபாதா
மாதுபாகாகாலகாலாவா. 107

ஆர்செய்தவஞ்சனையோவாறுமுகவேலர்மலர்த்
தாரீயாதுற்றதென்னசர்ப்பனையோ-பார்தனிலச்
சூதுகற்றசக்களத்திதோதகத்திபச்சிலைக்குள்
ஒதுசெப்படக்குவித்தையோ. 108

கச்சிக்கச்சாலைக்கடவுளடியைத்துதித்தால்
இச்சிக்கச்சாலையிலாளின்பமகார்-மெச்சிக்க
நித்தநித்தம்விர்த்தியுற்றங்கிட்களத்தைப்பெற்றமுத்தர்
பத்தியைச்சித்தத்தளிக்கும்பார். 109

அன்னைவடிவம்மையொற்றியங்கரியைச்சிந்தித்தால்
பின்னைவடிவம்மையுற்றுப்பேதுரூர்-முன்னைவினைப்
பந்தமுந்தவிர்ந்துமேவுசந்தமுந்தவிர்ந்துஞான
சிந்தையுந்தணந்திடாதுதேர். 110

என்றுடும்காமீசரின்பவடிவைத்துதிக்க
அன்றும்வினைவிட்டகலுமே-குன்றுமல்
தொங்கிட்டத்தோதரிகிடதோதரிகிடதோதரிகிட
தங்கிட்டத்தாதரிகிடதா. 111

## முன்முடுகு வேண்பா

திங்கடும்பைகொன்றையுஞ்சிறந்தணிந்துகொண்டுநின்ற
அங்கியம்பகன்பயந்தவன்பகந்தா-தங்கமென்னும்
தேகத்தேனேகுரவர்செய்நட்டோனேபனிரு
வாகுற்றோனேபெருமானே. 112

கன்னிமுகநன்னிலவுகன்னலிதழின்னிலவு
பன்னுநகைவன்னமுலைபன்னிருகை-மன்னவநின்
மின்னயிலையன்னவிழிமின்னலிடைபின்னுசடை
அன்னநடையின்னவறிவாய். 113

உக்ரகிரியுக்ரகடலுட்கவடவெற்பொடுயர்
சக்ரகிரிக்கப்பாலுந்தாண்டுமே-விக்ரமவை
வேன்முருகன்கந்தன்விசாகன்குகன்கரிய
மான்மருகனேறுமயில். 114

சந்தனந்திமிர்ந்தகொங்கைசந்ததம்பசந்ததிங்கு
வந்தனங்கனம்பையுந்தவங்தெழுந்து-சிந்தைதங்கு

நேசபாசமோபொலாதுநீகிலாவிலேகுலாவ
வாசிலாமுலாசவேலவா. 115

வாமமேவுசீதராசிவாஜிராஜநேயமோக
காமமாகிசோபமானகாமிவாம-தாமமேவு
கொங்கைபைங்குரும்பைபம்புகொண்டைகொண்டல்கண்டநந்து
செங்கைபங்கயங்கண்வண்டுசேர். 116

வெண்பா

அங்கியரனூர்தியானவிருமதிக்கும்
தங்குபன்றியையிரண்டுந்தந்திடவே-எங்கும்
உரைக்குங்கான்மைந்தற்கொருவநடுவுற்ற
துரைக்குத்துரையேநீசொல். 117

அங்கியூர்தி-ஆடு, சித்திரை. அரனூர்தி-இடபம், வைகாசி. பன்றி-வாரகன்.

இத்தையனையவுருவில்லான்விடும்போதே
வைத்தகரையோதடுக்கமாட்டாதே-கொத்துலவும்
அங்கமுகக்காத்துறைசையம்பலவாணன்புயத்துச்
செங்குவளைத்தாரிணையேதேடு. 118

இத்தையல்னைய-போதேவு-புஷ்பபாணம்-,தகர்-ஆடு.

ஆக செய்யுள்-1011.

---

# கடிகைமுத்துப்புலவர்

விருத்தம்

கராமடியச்சக்கரந்தொட்டெய்தவெங்கடேசுரெட்டன்கமலப்பூநி
கராமடிதொட்டானுலும்வரவழைப்பார்காணேனங்கணைமார்சேவ
கராமடிபட்டிடுபேரிவாரிதியாமிவளையெவர்காப்பாரோசங்
கராமடிவிட்டிறங்காதபேதையின்மேற்கணைதொடுத்தான்காமவேளே.

கன்றுதொட்டுக்கனியுகுத்த கீர்த்திவெங்கடேசுரெட்டா கமலக் கண்ணு, கன்றுதொட்டதத்தனையுங் கைநெகிழ்ந்த தறியாயோகலை

யுஞ்சோர்ந்த, கன்றுதொட்டரவிக்கையெல்லாங்காமனம்பு கிழித்
ததுபார் கருத்துந்தானே, கன்றுதொட்டுப்பட்டசிட்டுப்போன்மெ
லிந்துவாடுவதுங்கண்டிலாயே. 2

வளவனைநேராகவிசைவளர்த்தவெங்கடேசுரெட்டன் மருவாநா
ளில், வளவனைமாரையும்வெறுத்தாண்மாரனும் பூங்கணையேவவருந்
தியேய, வளவனையேநினைத்திருந்தாண் மடலெழுதவறியாளாய் மரு
க்கிலேது, வளவணையாடையுமிழந்தாள் வண்டினங்காள் கண்டசெய்தி
வழுத்துவீரே. 3

பாகப்பாவருமையறியிளசை வெங்கடேசுரெட்டாபகரக்கேண்
மோ, பாகப்பாமொழிவிழியாணீ யேறிவருங்களிற்றைப் பார்த்தா
ளாங்கொம், பாகப்பாமதிக்கவராவென்றுளம் மதியுதிக்கப்பசந்தே
யீசன், பாகப்பாவையினுகமானுள் யானீன்றெடுத்தபாவைதானே. 4

கருக்கோட்டையாளும் வெங்கடேசுரெட்டமேந்த்ரனென்னைக்
கலந்தபோகக், கருக்கோட்டைகாணு மடிசகியேமுன்போலின்னுங்
காமனுந்த, கருக்கோட்டைநிகர்வீசை முறுக்கிவரக்காணிலவன் கங்
குன்மாவைக், கருக்கோட்டையம்பினையும் பறிவெருட்டுதலைவாசல்
கடக்கத்தானே. 5

சந்தானமேநிகர்குமாரமுத்துசாமிசகோதரவான்பொன்னே
சந்தானமேருவெனநிறைந்தகுமாரெட்டனைத்தழுவாவாயா
சந்தானமேதரிக்கக்கூடுதில்லையவன்மருங்கிற்சகியேநீபோய்
சந்தானமேலேறியுபரிசெய்தாற்றீருமடிதனக்குத்தானே. 6

திருமாலையம்புதொட்டசிலைமாரனம்புவிக்குட்டிடவான்முல்லைத்
திருமாலையம்புயஞ்சூழ்குமாரவெட்டனைச்சேரச்செய்தாலுள்ள
திருமாலயந்தெளிந்துசுபசோபனம்பொருந்திச்சிவனைநேசித் [ளே.
திருமாலையந்தொறும்போயுனைநினைத்துத்தெரிசிப்பேன்றிருமின்னு

மாதங்கங்கோடிநிலவறைக்குளொளித்தாலுமந்தவழியேகம்ப
மாதங்கங்கோடிவிடச்சென்றடிக்குமுயிர்தரிக்குமாசிவாரா
மாதங்கங்கோடிகலுங்கடலொலிக்கென்செய்வளினிவந்துசேர்வாய்
மாதங்கங்கோடிதமிழ்க்குதவும்வசுவப்பமதிமந்திரிநீயே. 8

தமிட்டராணுவம்பெருக்கிவந்தெதிர்த்தவேண்முரசுசத்தங்காது
தமிட்டராவெனப்புலம்புஞ்சிறுபேணதவிரகமதுதணியவேமுத்
தமிட்டராமதிமுகத்தின்முகமழுந்தவேபுணரச்சமயம்வாணர்
தமிட்டராதரந்தெரியுமெங்களெட்டேந்திரமகிபாதமிழரேறே. 9

பரத்துவசத்துருத்தாயர்பாயன்மிசைப்பூவைமுலைப்பணைப்பிலேம
கரத்துவசப்பாவிமலர்தூற்றுவர்நானுற்றுவனேகாட்டிலேழு

மாத்துவசத்தொருகணையாலெய்தவெங்கடேசுரெட்டன்மருவாநாளிற்
சரத்துவசக்குரங்கெனவேதனித்திருந்துமுடியாதுசாற்றினேனே. 10

நிலமாதுதிலகனெங்களிளசை வெங்கடேசுரெட்ட னின்னைப்பார்த்த, பலமாதுவதனமும் பொற்பசலைகொண்டாய் மகளேபெண்படையாமேகக், குலமாதுரங்கமென்ற கிள்ளையின்மேன் மாரன்வருங் குறியைப்பார்த்துச், சோலமா துகிலுங்கையிலே தொடுவளையுந் தோற்றுநின்ற துணிவுதானே. 11

கலக்கடமானத்தொனியை முழக்கமனமலைந்தடையார் கால்சாய்ந்தோடப், பெலக்கடமாநகக்களிற்றை நடத்தும் வெங்கடேசுரெட்டன் பிணையலீந்தான், சிலக்கடமா மரக்குயிலையொடுக்கு கடற்றொனியடக்கு தென்றற்றேரை, விலக்கடமாமதப்பயலே தலைக்கடைவாசலைக்கடக்க வெருட்டுவேனே. 12

திருக்காங்கம்வகுக்கவயில் செலுத்துபடையான் கமலச்சேக்கையாமா, தருக்கரங்கம்பயிற்றுதுரையிளசைவெங்கடேசுரெட்டன்றழுவாநாளில், அருக்கரங்கம் புரந்திடவுமம்புலியும் வெம்புலிபோலாச்சேகண்டாய், உருக்கரங்கம் பரந்துடைக்க வுருக்காமம்பிதந்தானென் றுருகுவாளே. 13

பொரக்கலமுற் றவருக்கிரங்கும் வெங்கடேசுரெட்டன் புயங்கண்டாண்மேல், உரக்கலக்கமற்றகணைமதன் விடுத்தாலென்ன செய்வாளோரீகோகிண்ணச், சரக்கலக்கம்மியன் கடைந்தசெப்பலத்தானேதிரண்டதனத்தினூடே, வரக்கலக்கண்ணீருகுத்தாள் வண்டினங்காள் கண்டசெய்தி வழுத்துவீரே. 14

இத்தரமேசத்துணிவாரென்சகிமார்வஞ்சகிமாரென்றால்வேளம்
புத்தரமேவத்தனமேபுண்படுமேயென்புகல்வேன்புலவோர்க்கேபோ
தத்தரமேகத்தினையாய்த்தழைத்தவெங்கடேசுரெட்டன்றழுவினாலே
துத்தரமேதித்தனையுமுன்னாலேவிளைந்ததன்றேயொருநிலாவே. 15

கொட்டமிடுமருவலர்களிட் டகற் கோட்டைக ளனைத்துங்கொழிதூளாக, வட்டமிடும்பரிநகுலனெட்டமரா சேந்த்ரனென்னை மருவாநாளில், துட்டமதன்கணை துளைத்ததுளைவழியேதென்றல்வந்துசுவைத்துத்தள்ளி, விட்டவெறுங் கூட்டையினிச்சுட்டதனு லென்னபயன் வெண்ணிலாவே. 16

புவிக்காதிபதியிளசைபுரந்த வெங்கடேசுரெட்டன் புலவோர் சொல்லும், கவிக்காதிவள்ளலைக் கண்டாசைகொண்டாளுக்கமுதைக் கரைத்துப்பால்வார்த், துதிக்காதிவ்வளவேனும் புகட்டுசகியேமுகத் தைத்துடைத்தண்ணீரு, தவிக்காதிலேசுக்காளுலும் வைத்தூதிவள் மத்தகைக்குத்தானே. 17

பொருவாசிக்கொரு நகுலனிளசைவெங்க டேசுரெட்டன் புயங் கண்டாயோ, இருவாசிக்கெனக்கலையை யுடுத்துபணி திருத்துவளே யெங்கேதேடு, மருவாசிக்குங்குழலைமுடியுனக்குத் தரிப்பிடந்தான் மகளேசிச்சீ, தெருவாசிக்கினமு மவன்கைம்மருந்தான் மெய்ம்மற ந்துதிரிகின்றாயே. 18

பொரவிசையஞ்செலுத்த வெங்கடேசுரெட்ட மேந்திரன்மேற் புதுமால்கொண்டேன், கரவிசையங்கசமாரன் கருப்புவில்லைவளைத்து வலக்கையாலெய்யும், கரவிசையங்கத்தில்வந்து தைத்துருவியப்புறம் போஞ்சகிக்கமாட்டேன், இரவிசையம்புகுந்தொளித்தா னிளங்குயி ல்காணீருமெனக்கிரங்குவீரே. 19

புடவிகடகடெனவுடைபடவடவைசிதறவருபொருதார்ச்சீறும்
தடவிகடகளிற்றுதயனிளசைவெங்கடேசுரெட்டன்றருவான்முல்லை
அடவிகடவுனதுகுடையகலமதகயமேகவனிலத்தேரை
நடவிகடமிர்முகடுதொடுபரிதியுதயமிதோநான்கண்டேனே. 20

கற்றனமின்னுவதென் சொன்முனியென்றான்றயனம்பாற்கலங் கித்தாபம், உற்றனமின்னாமுதங்கசந்தணையாராதநெஞ்சே யுணர்ந் தோர்க்கங்கை, யிற்றனமின்னு ளுதவுமிளசை வெங்கடேசுரெட்ட னினியநோக்கம், பெற்றனமின்னுமையின்றே டொழிந்ததயன் மாத ரலர்பேசார்தாமே. 21

ஆளுக்கேயழகனெங்களிளசை வெங்கடேசுரெட்ட னன்பையீ சன், தாளுக்கேவிருந்திட்டானென்னலர்கள்செங்குருதித்தசையைச் செங்கை, வாளுக்கேவிருந்திட்டான் மாதாராவியெல்லாமலர்க்கை வாளி, வேளுக்கேவிருந்திட்டான் வெண்மதிக்கென் பெண்மதியை விருந்திட்டானே. 22

அனங்கலக்கணந்தெரியாள்சிறுபேதைவிரகமிவட்கதிகமையோ
மனங்கலக்கப்பக்கமில்லையுன்னையன்றியாதலினல்வாராதாலே
தினங்கலக்கணீருகுத்துத்தேடுகிறாள்வாடுகிறாடிரண்டகும்பத்
தனங்கலக்கவருள்புரிவாயிளசைவெங்கடேசுரெட்டதமிழ்க்கோமானே.

எனக்குடந்தையான வெங்கடேசுரெட்டனருகிலழைத்திருத்தி வைத்துத், தனக்குடங்கையாரவெனைத் தழுவாத மனக்குறையைச் சகியேசொன்னேன், உனக்குடம்பெலாம் பசக்கும்பாலனமுங் க்ச க்குமழகுற்றகொங்கை, கனக்குடங்காத் தொனிகேட்குமதன்படை யும் வந்தினிக்கைகலக்குந்தானே. 24

மாலைமணிமுடிதரித்தமருவலர்கள்சேனைதனைமடியத்தாக்குங்
கோலமதகளிற்றுதயனிளசைவெங்கடேசுரெட்டன்கூடாநாளில்
பாலனந்திவலையருந்தாள்சிறியாட்குமதிக்குமென்னபகையோமேனி
வேலைநடுக்கலத்தைவிட்டேயெழுந்தலைந்தகாகமெனமெலிகின்றாளே.

ஓங்கியராமாமதியாதவன்போலவரவுமிடையுடையுந்தன்னால்
நீங்கியராமாரசரத்தால்வருந்துவதற்கிரங்கநேமியாத
பாங்கியராமாவெனக்கண்பார்த்துமருவாய்கவந்தன்படக்கையால்வாள்
வாங்கியராமாபூமாவிளசைவெங்கடேசுரெட்டமன்னரேறே. 26

கனத்துவரைபோற்புடைத்த கொங்கைமங்கைகொண்டமையல் கண்டுநந்தா, வனத்துவரைச்சென்றுமலர் கொய்திவளை யெய்யவந் தான்வந்தானெனப்போ, துனத்துவரைப்புரந்திதவுகொல்லாரைத்தாக் கியவர்த்துருவனேட்டிற், சனத்துவரையாக்கும் வெங்கடேசுரெட்ட மேந்திரனேதளசிங்கேறே. 27

தரும்பலிக்கும்மருவலரைத்தாக்கும்வெங்கடேசுரெட்டசாமிமாலை
வரும்பலிக்குநினைத்தபடிக்கிப்போதுதப்பாதுவலத்திருந்த [லெய்
திரும்பலிக்குரலைப்பார்க்கிற்செயமடிபெண்ணேமதனன்செங்கையா
அரும்பலிக்குமென்னபயஞ்சுகமாகவாழ்வாயுன்னதிட்டந்தானே. 28

மின்னமருங்கொடியனையசின்னமருங்கொடியமுலைவிம்மமானுள்
முன்னமரும்பெடுத்துமதன்றன்னமருந்தொடுக்கவெகுமோகமாகி[ளே
அன்னமருந்தென்னினுமீதென்னமருந்தென்னவுண்ணுதயர்கின்றா
சொன்னமருந்தமிழ்ப்புலவர்க்குதவும்வெங்கடேசுரெட்டசுகுணமாலே. 29

சடங்கலாமகட்கிளமாந்தளிரேமுத்தம்பொரியச்சகிக்குமாவன்
மடங்கலானையைப்பாயும்வாறுபோற்சீறுதென்றல்வருமாசொர்ணக்
குடங்கலாமதிதனமானனமாஞ்சேர்வாய்மருவார்கூடியுத்தம்
தொடங்கலாற்பவுரிகொண்டதருமவெங்கடேசுரெட்டசுகுணமாலே. 30

திருவிருக்குமணிமார்பனிளசைவெங்கடேசுரெட்டதீரனென்னை
மருவிருக்குமணிகணவனெனச்சேராநாண்மோகமயக்கத்தான்மேல்

விருவிருக்குமணிவளையுமேகலையுஞ்சேர்ந்திடுமேன்மேலுந்தேன்பால்
அருவிருக்குமணியலுங்காந்துந்தாளமெனவருங்கண்ணருவிதானே.

குருவடியைவணங்கும் வெங்கடேசுரெட்டமேந்திரன்முன்கூசா மற்போய், இருவடிவெல்லாம் பாருவீணையைமீட்டனுராக மிசைத் தனேகந், தருவடிதெள்ளமுத நவரசமொழுகும்படிபடி சவ்வாதுபூசி, மருவடிபெண்ணே யினிமேன்மகராசியாய்ச் சுகித்துவாழ்குவாயே. 32

கன்னியுன்றன்மேற் பிரியமையாமற்றூரையிவள் கண்டான் மூன்று, மன்னர்தனிலேயொருவன் பெயரையடிக்கடி வழுத்துவாள னத்தைத், தென்னவன்றன்மாலையென்றுண்மதியையதிற்கடையெழு த்தாய் தீர்த்தாளையா, நன்னயகுணாகர குமாரவெட்ட ராஜேந்த்ர னளினமாலே. 33

பொன்னிலங்கைராவணனை வென்றவிடையாட்களகம் புளகக் கொங்கை, தென்னனைநேராயிருக்குஞ்சொல் வார்த்தைகண்டு பயந் தேன்மகாவிற், பன்னிவடிவூர்கணிதம்பம் மரம்பையாகு மிவட்பரி ந்துசேர்வாய், சொன்னமொழிதவறாத குமாரவெட்ட ராஜேந்த்ர சுகுணமாலே. 34

மெலக்கணக்காப் பொருந்துவோமெனவேளை மணங்குறிக்கும் வேளைபார்த்து, நிலக்கணக்காமன்னம்புகுந்துகுந்தாப்பாயவென்மே னிரைத்தானெண்ணிச், சொலக்கணக்காகவழக்கா நானறிந்தவளா தெரிந்தவளாதுயரமெல்லாம், இலக்கணக்காரிகைதேர்ந்தகுமாரவெ ட்டபூபதிபாலியம்புவாயே. 35

அரைத்தசந்தனம்பொருந்தா ளமளியின்மேற்கண்டுயிலா ளரக் கன்மௌலி, நிரைத்தசந்தனம்பாலேதுடைத்த மருதப்பன்வர நினை யாளன்னை, இரைத்தகந்தனம்பசலைக்காற்றுமென்றுளே பாவையிட த்திலேசென், றுரைத்தசந்தனம் பாருக்குள்ளிலையோ திவாகரனு ரொளிக்கின்றாரே. 36

அரமியஞ்சேர்ந்திளவாழைக் குருத்தைவிரித்ததிற்கிடத்த வது வுஞ்சூடா, கரமியங்கொள்ளாதெழுந்து தரையில்விழுந்தாளதனைக் கண்டுதாய்மார், சரமியக்குதோவிலையோவெனமூக்கிற் கையைவைத் தார் சத்யவாய்மைத் திரமியங்குங் கிளுவைமருதப்பனுக்கிச்செய்தி சொல்லித் தெளிவிப்பீரே. 37

திருந்தலரிகலையடக்குங்கிளுவைமருதப்பசெயசிங்கமென்னைப்
பொருந்தலரிதாயிருந்தாற்பூத்தானஞ்செய்யாளேபோர்வேளையா
வருந்தலரிகுளையலரிமாவலரிபூவலரிமாதர்கீழ்பால்
இருந்தலரிவாராமுன்னிரவிதனின்மதியம்வந்தாலென்செய்வேனே.

வரைத்தூற்று நெடுங்காட்டு வழிப்புலவோரலையாமல் வளர்த்த தாய்போல், உரைத்தூற்றுமலைபுரந்ததுக்க மருதப்பனொருநாளுஞ் சேரான், கரைத்தூற்றுநறும்பாலு மன்னமும்வேண்டேனதனைக் கண்டலோமா, தரைத்தூற்றுமெனவிடுத்துத்தாய்க்கிழவி கூடநின் றுசலஞ்செய்தாளே. 40

செருத்தாக்குமதப்புலியே திருமலைவேலப்பாநின் செவ்வாயூ ரல், அருத்தாக்குமரிக்கமுதங் கசப்பாகுமணைவேண்டாளேயோ வா ழைக், குருத்தாக்கு மதைவிரித்துக்கிடத்தினுஞ் சூடெனவெழுந்து கொள்வாள்காமக், கருத்தாக்குமுதநாதன் கங்குல்வரக்கண்டு முனைக் கண்டிலாளே. 41

எடுத்துவரி முறத்தினிலிட்டிழைத்த குறிபலித்ததென வெண் ணித்தந்த, வடுத்துவரிதழுக்கேறு மெனக்கனிவாய் மடுத்துறிஞ்சு மாதைப்பாடு, படுத்துவரிம்மாதரென்றாற் சொல்பவரார்வளத்திலங் கைப்பதிமேற்சென்று, கடுத்துவரிதனைப்பொருத திருமலைவேலப்ப னிதைக்கண்டிலானே. 42

பொருந்தமரங்கசசரத்துக்கல்லாமலம்புலிக்கும்புறம்போவென்ன
இருந்தமரஞ்சிதமொழியாளிப்பாடுபடமுறையோவெமதூதாணி
கருந்தமருமெனையளியேயென்னளியேயாய்ச்சியர்தங்கலையைவாரிக்
குருந்தமரக்குழைத்தேறுந்திருமலைவேலப்பனிடங்கூறுவாயே. 43

திருகலகுவாய்ப்பறந்து சிறகொடுக்கியிருந்துகடற்சேலைவாரிக், குருகலகுவளையொதுக்குங் கூடலில்வாழ் திருமலைவேல்கொலுவினீ போய், இருகலகுதலைமொழியா ளித்தனைமாலாளுளென்றிசைத்தே யன்னம், பருகலகுவளைத்தாரையாகிலுங்கேட் டாளெனச்சோப னஞ்சொன்மானே. 44

சருக்கரையமுதுகனி தேன்கலந்ததமிழ்முனிநிகர்வான் றறியார் பெண்டீர், கருக்கரையமுனிவிசயகிரிவேலைச்சின்னேப கனவானு சைப், பெருக்கரைய வளவலவென் றலைக்கேறிமயக்கினது பித்தமூர் ச்சைத், திருக்கரையவுடதமெடுகரைத்து மெல்லப்புகட்டமுது செ லுத்தென்றாளே. 45

பொருவதற்குச்சிலைக்காமன் வருமுனமே மதுரையிற் போய்ப் பொறிவண்டீர்காள், செருவதற்குப்புகழ்விசயன் றிருமலைநரேந் ரன் வரச்செய்வீரிங்கு, வருவதற்குத்தாமதித்தான் மாலையொன்று

கேளந்தமாலேதானுங், தருவதற்குமதியானேன் மையலேயாயினுந் திரும்பத்தரச்செய்வாயே. 46

தெந்தனம்பேசுங் கொழுநற்மயல்கொள்ளுஞ் சேல்விழியீர்திர ண்டமேரு, பந்தனம்போற்றனமுடையீ ரின்சொலுரையானுரைக் கும் படிநீர்கேண்மின், எந்தனஞ்சேராதவெங்க டேசுரெட்டன்றனை யழைக்க வெழுந்துபோன, சந்தனஞ்சும்மாவந்தாற்பூசலாமெனக்கு மதன்றனக்குந்தானே. 47

விருத்தப்பாகலித்துறையும் வெண்பாவுங்கொச்சகமும் விரிவா ய்ச்சொல்லக், கருத்தப்பாவெனதுமகள் காமனரவிந்தமலர்க் கணை யானெஞ்சில், இருத்தப்பாலனம்வெறுத்தாளெனையுமவள் சகிதனையு மேசுருணீ, வருத்தப்பாத்திரமலவே யணைந்திடுவாய் திருமலைவேல் வரிசைமாலே. 48

வீறுதரமேவலரை வென்றவெங்கடேசுரெட்டன் மேவவேண்டி, நூறுதரமாகவண்டைத் தூதுவிட்டாளனமருந்தாணுந்தாள் கண் ணீர், ஆறுதரமேற் பாயவனங்கன் பூவாளிமுலையானையூடே, ஏறுதர மாச்செவியைத்துளைக்குதென்றே யோலமிட்டாளெனச்சொல்மாதே.

இக்கோடிவளைப்பனென விருகோடி யிளம்பிறைக்கீற்றெழுந்து வானில், முக்கோடிவளைப்பமதனுற்கோடி கணைதொடுத்தான் முன் னிற்பாளோ, கொக்கோடியிரையெடுக்கு மிளசைநகர்செழிக்கவருங் குமுணுவெட்டுத், திக்கோடிப்புகழ்படர்ந்த வடமலையாகடமலைமுன் சென்றமாலே. 50

கெஞ்சுமாதங்கமுகம்பார்த்திரங்குந்திருமலைவேற்கிரியினுனீர்
அஞ்சுமாதஞ்சுமந்துபெற்றபலன்கிடைத்ததெனக்காலுமாதங்
கஞ்சுமாதந்ததனைப்பெற்றிழந்தோர்போற்றிரிந்துகலங்குதேழை
நெஞ்சுமாதம்பனுக்குநேர்ந்தொருவன்பின்றொடர்ந்துநேர்கின்றாளே.

திடக்குவடக்கடக்களிற்றுன்கம்பள வல்லக்கர்குலன் தெற்குப் பூர்வ, குடக்குவடக்கடற்கரசன் மலையாண்டிராசன்முல்லை கொடுவங் துன்னை, மடக்குவடக்கனசெய்வண் மதப்பயலேயுனக்கினியோவ் வாதுபேரி, அடக்குவடக்கயமினின் சடக்குநடக்காதினிமேலறிந்து பாரே. 52

இலக்காரமணியாள்கண்ணிமைபொருந்தாண் மன்மதனுரெய்த புண்ணில், கலக்காரம்பெய்ததெனக் கதிர்மதியுஞ்சுழன்றெரிப்பக் கனன்றாளென்றே, சொலக்காரம்மியமாக விலக்கணநாற் கவிப்புல மைத் தொன்னூலோர்க்குப், பலக்காரமருள்விசய கிரிவேலாஞ் சின்னேனபதிச்செவ்வேட்கே. 53

இப்பளப்பாறையிற்படுக்கச் சொல்லுகிறீர்செடிமறைவோவில் லேச்சூழ, உப்பளப்பாறையுமாச்சுக் கணவனேவெகுகோபி யும்மைக் கண்டால், கொப்பளப்பார்க்கினும்பார்ப்பன் பேனைப்பார்க்கினும் பார்ப்பன் குணமில்லாத, தப்பளப்பாவிருக்குதையா கிளுவைமருதப்ப மன்னு தமிழ்க்கோமானே. 54

சுட்டளைக்கலிப்பா

ஆரசந்திரணத்துமண்டுண்டிலாளருவருத்துவிருவிருப்பாகியே
ஊரசந்திரவிற்பாதிசென்றுமேயுறங்கிலாண்மகட்கென்செயுவேனையா
தீரசந்திரகாவியிடக்கயாசிங்கவுத்தண்டதுர்த்தண்டனேரண
வீரசந்திரகிரிநகராதிபாவெங்கடேசுரவெட்டமராஜனே. 55

தடக்கயத்தலரெல்லா மெடுத்துவேள் சமரச்சோலையில்வந்தா னெனவதை, அடக்கயத்தையுந் தாயர்கொன்றால் வெறியாட்டுத்தா னிவளாசையைத்தீர்க்குமா, கடக்கயத்தடையார் புவிகைக்கொண்டு கட்டுஞ்சந்திரகாவியிடாலெனும், இடக்கயத்தன்னிலைநாட்டுமாமண்ட லேசுரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 56

கலக்கைவாளியை யார்தடுப்பார் தென்றற்காற்றுக்காற்றுவளோ மடவார்வசை, சொலக்கைவாய்பொத்தி மெய்சோர்ந்திருக்கவுந்தோகை மோகந்தொலையாதுபாரையா, உலக்கைவாரியடிக்குங் கடாசலத்து தயனே கணைபொன்றின்மராமரத், திலக்கைவாலியைப் பார்த்தெய் தமா மண்டலேசுரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 57

குரங்கிக்காய்ந்திளந்தென்றலு மன்றிலுங்கோபங்கொண்டத னுன் மாதரேதுசெய், வரங்கிக்காபொரவாவென்றழைப்பர் மறுத்துப் பேசவும் வாயிலைமாங்குயில், அரங்கிக்காவென்றிருந்திசைபாடவு மாற்றுமோ மயலாற்றாதபேதைக்கே, இரங்கிக்காவிக்ர மார்க்காசெக மண்டலேசுரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 58

தானவாரணமுலையாளுக்குத்தானவாவெண்டளப்பத்திலேமையல்
ஆனவாறுமறியாளிவள்கண்ணீரானவாறுமறியார்மின்னாரன்றோ
வானவாகண்டலாமண்டலாதிபாவானவாவளவாமதுராபுரி
மீனவாவிசையாமீனகேதனுவெங்கடேசுரவெட்டமராஜனே. 59

துரையத்தந்தி தலைமுலைமேல்வைத்துத்தோயுநாளெந்நாளோ விரகத்தை, விரையத்தந்திவளவுஞ்செய்தாலிந்த மெல்லியற்கென்ன சொல்லியுந்தேற்றுவேன், தரையத்தந்தி வரையேந்துமேகம்போற்

றணிந்த கொம்புபட.க்தன்னிழலைப்பாய்ந், திரையத்தந்திடாத்திய மாமண்டலேசுரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 60

அந்திராமனமுன்மேலென்றாற் பகலடங்குமோ மையலானாலு மையனீ, வந்திராமனம்பேதைக்கு வேளம்புவச்சிராயுதம்போல்வந்து தைக்குமே, முந்திராமனம்பாலுண்டவாரிதிமுழக்கமே சகியாளே யிளசைவாழ், இந்திராமனுவேந்தா செகமண்டலேசுராவெங்கடேசு ரெட்டேந்த்ரனே. 61

கொடிக்கத்தத்தும்மலையுமடக்கி நெற்குறியும் பார்த்துக்குணம் பார்த்துப் பார்த்திந்தப், படிக்கத்தத்துவளைசோரச் சோருமென் பாலனத்துக்குன்பாலனம் வேண்டுங்காண், அடிக்கத்தத்துகளையும் பரப்பிமூதண்ட கூடமுகடும்படீரென, வெடிக்கத்தத்தும் பரியா திரு மலைவேலுராஜ விவேககுலேசனே. 62

பூசத்தந்திமுலையும் புண்ணாக்கினீர் போதும்போதும் புழுகுஞ் சவ்வாதுமா, காசத்தந்திமதியுஞ்சுடுமென்ற காமப்பேய்கொண்ட கள் ளிக்கென்சொல்லுவேன், மாசத்தந்திசையெல்லாமதிரவே மந்தரத்தை மருப்பிட்டிடித்தளி, வீசத்தந்திடாத்துந் திருமலைவேலுராஜ் விவேக குலேசனே. 63

ஓராவுண்டுமிழுமதிப்பிள்ளையூராவுறங்காதபெண்பிள்ளைமால்
கூராவுகணைகடொட்டான்மதன்கும்பராசி கொழிப்பதுமுத்தமாய்
சூராவிதுடிப்பத்துடிப்பத்திண்டுணைக்கராசலந்துண்டிக்கக்கண்டிக்
வீராகவராமா,திருமலை வேலுராஜவிவேககுலேசனே. [கும்

சங்கராவையகமும் பழிக்குமாந்தாயர்தூற்றிலெனும் பேதை நெய்முடை, அங்கராவையழைக்குங்கழைக்குரலனங்கவேளை யழைக்கு மென்றேங்குமால், கங்கராவையடர்வதுபோ லொருகைக்கடா சலங் கால் சாயத்தாக்கிய, வெங்கராவையிட றுந்திருமலை வேலுராஜ விவேக குலேசனே. 65

சந்தனத்தைவிடுக்குமுன்னே வில்வசந்தனத்தையலைப்பகைத் தேய்வென, சந்தனத்தைத் துளைக்குதுபாலுங்கசந்தனத்தையு மப் படிச்செய்ததே, சந்தனத்தையண்திணிபுயாசலத்தாருவே தண்டமி ழ்க்கவிஞோர்தம்வ, சந்தனத்தைத்துசங்கட்டி யீந்தருடந்த்ரனே முத்துமந்த்ரி நரேந்த்ரனே. 66

பூரிக்குஞ் சரமாவாரமார்கொங்கைபூவைதாங்கப் பொறுதத்தொ ணிக்கடல், பேரிக்குஞ்சரபம்போலுந் தென்றற்கும்பெருமயக்குற்று

ருகக்கண்டாங்குவேள், நேரிக்குஞ்சரமுங் கொண்டுவந்து போர்நிறைந்திட்டானினி நீவந்துசேர்மத, மாரிக்குஞ்சரமீதாகுமிந்திராவன்யராயவசுவப்பதுரயனே. 67

நகத்துவாரயிலாங்கண்ணி கொங்கைகணையவாரறத்தைத்தவழித்தென்றல், புகத்துவாரஞ்செய்தாலந்த வேளம்பைப்பொறுக்கவாரம் புயக்கண்ணிதந்துசேர், சகத்துவாரஞ்செயுந் தென்னிளசைராசத்துவாரத்துக் கோர்மந்த்ரியாய்வந்த, மகத்துவாரஞ்சிதவசனாநாவாகனா நம்வசுவப்பதீரனே. 68

கருத்தவாவிலையாள்கரனாய் வருங்காமனாலுடல்வாடாதின்றின்பத்தை, அருத்தவாவிலையாயினிப்பேதையோவாவிதாங்கரிதாகுமையாகண்பார், திருத்தவாவிலையாத்தன்னை நல்கியசெந்தமிழ்க்குத்தியாகாநிணப்புலால், மருத்தவாவிலையாரயில்வேற்கரா வன்யராயவசுவப்பதீரனே. 69

நேற்றிருந்த நிலவுமந்நேர மென்னினைவிருந்த நினைப்புமிளந்தென்றற், காற்றிருந்தசுகமு முன்னாணை யென்கருத்திருந்ததும் யாதென்று சொல்லுவேன், சேற்றிருந்தசெந்தாமரைப் பூவின்மேற்றிருவிருந்ததுபோறச்சிம்மாசனம், வீற்றிருந்ததுரையே திருமலைவேலுராஜவிவேககுலேசனே. 70

நிருதராகவனந்தகங்குலிந்நேரத்தே மதனேறியவூர்திமேல் வருதராகவனந்தமங்கையைமருவுவாய்மலர் மஞ்சத்தின்மீதிலே, விருதராகவனந்தளஞ்செறிவேந்தன் ராவணன்சென்னிபத்தீர்ந்திடப், பொருதராகவனந்தகுஞ்செயபூபனே வெங்கடேசுரெட்டேடேந்த்ரனே. 71

தடக்கயக்கயலோ விடமோவிழி தாமரைக்குமிழோசிமிழோதிரண், டிடக்கடக்குடமாமுலைமாமதனெய்யவாடியுருகுதல்பாரையா, உடக்கடக்குக்ரமாங்கும்ப கன்னனையுசிதவிந்திர சித்தைச்செயங்கொண்ட, திடக்கடக்கயங் காத்தமனோகராசீதரா வெங்கடேசுரெட்டேந்திரனே. 72

உரைக்கத் தத்துவத்துட் பொருளாகிய வொருவன்கை வில்லுக்கொப்பாமிவள்கொங்கை, வரைக்கத் தத்துவசக்கரன்போரிதுமட்டுண்டோவந்து முட்டுதல்பார்க்கிலாய், தரைக்கத்தத்துவளையுமெழுப்பிப்பூச்சக்ரவாளத்தைத்தாக்கில்கடல்கடந், திரைக்கத்தத்துவயப்பரியாமண்டலேசுரா வெங்கடெசுரெட்டேந்த்ரனே. 73

விகடத்தந்திமதிகாயமாரவேள்விடுத்தவத்திரந்தைத்தூடுருவியென் மகடத்தந்திவலையாகுங்கட்புனல்வடித்துத்தந்தியிசை வெறுப்பாவ, ளோ, சகடத்தந்திப்பரித்திரட்கூட்டியசத்துருத்திரட்டைக்குத்திடத் திரும், புகடத்தந்திக்குதயாசெயதா பூதராவெங்கடேசுரெட்டேந் த்ரனே. 74

பருதியாகமகமாகமூர்மதி பணையெக்காளம் வெடியாமலரம்பு, விருதியாகமகன் வச்ரமாமிவைமின் பொறுத்திடுமோசேர் திருவருட், கொருதியாக மகவாசகங்கற்றோர்க்குற்பனுவெங்கள் குப்பணவேண் மைந்தா, வருதியாகமகமேருநேர் செல்வவன்யராயவசுவப்பதுாயனே.

பண்ணைப்பம்பர மன்னமுணுமலே பாற்றுப்பம்பரஞ் சோர்ந்து மயல்கொடு, வண்ணப்பம்பரமாங் குயமீறிமேவவிரும்பம் பரக்கண் ணினட்சேரையா, தண்ணப்பம்பரவைசூழ்பதி யரசருங்கப்பம்பர ந்தே கொடுவந்தடி, விண்ணப்பம்பரமென்றே தொழுஞ்செக வீர ராமகுமார வெட்டேந்த்ரனே. 76

உன்னக்காவடிப்பூப்பறியாண தியம்புகாள்வடிபாலையருந்தென, என்னக்காவடிவேண்டா பென்றேதினு லேதுக்காவடியங்காமற் சேருவாய், அன்னக்காவடியாற் கழுகாசலத்தாதிக்காவடிமைத்திறம் பூண்டுக, வின்னக்காவடிவேலாவென்றுஞ் செகவீராமகுமாரவெட் டேந்த்ரனே. 77

ஆரிச்சந்தரயம்படிப்பார் மதனுலச்சந்தனக்குண்டாகியேயினும், தேரிச்சந்தனமே சொலுவாயெனச்செப்பிச் சந்தனங்கைதனைச்சேரு வாய், பூரிச்சந்தகம் விம்மியமாதரைப் புலப்பச்சந்தனதாக வுளத்தில் வை, வேரிச்சந்தமார்பகத்தாய் செகவீராமகுமாரவெட்டேந்த்ரனே.

சம்புதைக்குக் கருங்காலன்போற் கங்குல் சாரவேலையொலிக்குப் பயந்துநோக், கம்புதைக்கு மென்பெண்பிள்ளை மேலினிக்காமராஜ னெடுத்துத்தொடுத்திடும், அம்புதைக்குமுன்னே யணைந்தாலிவளாவி தக்கு மிப்பூவிலிருக்கும், பும்புதைக்கு ணிதியெனவாய்த்த வெம் புண்ணியா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 79

கட்டளைக்கலித்துறை

மாதானைவேந்தர்க்குமேலோன்பெரியசுவாமியையென்
மாதானைவேல்வரக்கண்டனள்கண்டுமயங்கியுஞ்சும்
மாதானையோவரக்காணெனைதுவளவுக்குளம்
மாதானைபோச்சென்றுவந்தாளினிச்செல்லவாயில்லையே. 80

அச்சங்கபாணிபதம்போற்றிச்செந்தமிழ்க்கன்பியற்றி
அச்சங்கமேவுந்திருமலைராயனணைந்திலனான்
அச்சங்கலாமதிக்கென்றிருந்தேனெந்தனாகத்தைநால்
அச்சங்கமாகத்துளைத்தான்மதப்பயலம்புகொண்டே. 81

அத்திக்குதையன்றிருமலைவேலப்பனன்புசொல்லத்
தித்திக்குதையன்கருத்தென்னமோமதிசென்றுகுணக்
குத்திக்குதையன்கதிர்காட்டுமோவிருகொங்கையின்மேல்
தத்திக்குதையமாட்டேறுதுகாமன்சரங்கள்வந்தே. 82

கலவளைக்குண்டிவள்கைவளைபோனதுங்காரிகையார்
சொலவளைக்குந்தத்தரம்போலத்தைப்பதுஞ்சொல்பவரார்
நலவளைக்குஞ்சரியான்செவிச்சானகிநாண்புனைய
மெலவளைக்குஞ்சிலையானே திருமலைவேலப்பனே. 83

முடிக்குமருப்புக்கிசையாப்பைங்கூந்தலம்மூரிமதன்
பிடிக்குமருப்புக்கிலக்கல்லவேயெதிர்பேசுமொன்னார்
குடிக்குமருப்புக்கடலேற்றுவித்துக்கொடிமதில்பாய்ந்
திடிக்குமருப்புக்களிற்றாளினளசையிலெட்டமனே. 84

தடத்தத்தளிச்சிறுநாண்பூட்டிமாரசரந்தனமு
கடத்தத்தளித்தலைதோற்றாட் குத்தோற்றுகடாசலத்தை
நடத்தத்தளிக்குட்பதைத்துக்கிடக்குமொன்னார்கண்முறை
இடத்தத்தளிக்கப்பொரும்வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 85

செல்லுக்குமல்லுக்குநேரோதிமங்கலச்சித்தசவேள்
வல்லிக்கிணையிலைவல்லிக்கிணைகந்தமாதனஞ்சொன்
முல்லைக்குமானுக்குமாந்தளிருக்குமிம்மூன்றினுக்கும்
பல்லக்குமேல்வருமன்னாவெட்டேந்த்ரபாண்டியனே. 86

(முல்லை-பல்) (மான்-கண்) (மாந்தளிர்-மேனி)

கவளம்வளைக்குக்களவுசெய்தோன்வஞ்சகப்பிணைமேல்
துவளவளைக்குஞ்சிலையான்மருதப்பதுங்கன்வரான்
தவளவளைக்குத்தடையிடுவாரில்லைசந்துசொல்ல
அவளவளைக்கும்பிடப்படுமோதண்ணளிக்குலமே. 87

இந்திரச்செல்வன்றுரைபூலிக்காத்தப்பளிங்கிவள்பால்
வந்திலனின்னமும்வேள்கணையால்கண்வளர்சசிமு

கந்திரள்சானுவில்வைத்ததுமகரகர்க்கடக
சந்திரயோகங்களாமடவீர்கணிதந்திடமே. 88

வெஞ்சத்தமரந்துளைக்குந்திருமலைவேலுவந்தால்
வஞ்சத்தமரம்பலுக்குமஞ்சேனனைவாய்க்குமஞ்சேன்
நெஞ்சத்தமரங்கசப்போரைவெல்லுவனீயுமெனை
அஞ்சத்தமரஞ்செய்வாயோவலைசெறியம்பரமே. 89

வெண்பா

புத்தியின்பேர்க்குள்ளாய்வேள்பொற்றுருடிக்கிமுன்புவந்து
சத்தியப்பேர்மீதுசரந்தொடுத்தான்-நித்தம்
குருபதம்பராவுமனுகூலாபொன்மாது
மருவும்வெங்கடேசுரெட்டமா. 90

புத்தி-மதி-சந்திரன். சத்தியம்-மெய்-தேகம்

அத்திதனையூர்ப்பசுப்பேராக்கிச்சினந்தடித்துச்
சித்தசனென்மேற்சமரஞ்செய்தானே-முத்தமிழ்க்கெந்
நாளும்பசுங்கனகல்கிமுதல்வள்ளலென
வாழும்வெங்கடேசுரெட்டமா. 91

அத்தி-சமுத்திரம்-ஊர்ப்பசு. நகரா-அது-முரசு.

மன்னன்வெங்கடேசுரெட்டமாநிதிபாற்றாதுரைத்துக்
கன்னிதார்வாங்கிவரக்காண்கிலனே-மின்னுபசுஞ்
சொன்னவடிவாயிலங்குந்தோகைரதிகணவன்
கன்னல்வளைத்தெய்யுங்கணை. 92

கணைகாண்கிலேன்

தண்ணமுதபாஷிதவிஸ்தாரன்வெங்கடேசுரெட்ட
புண்ணியவான்வந்துபுணராநாள்-உண்ணமுது
மாமனத்தையேகுமட்டம்புவிட்டாள்பால்கொடுக்க
வீமனத்தைபேரெடுத்தாண்மின். 93

வம்பு-கச்சு - அதுகசத்தல் - வீமன் - பிரமன்-அவன்-அத்தை சத்தி அதுவாந்தி.

தண்டமிழ்தேருத்தமதயாளுவெங்கடேசுரெட்ட
மண்டலிகன்கூடிமருவராநாள்-சென்டு

முலைமானுட்கின்னமுதுகொடுக்கவேவாட்டுத்
தலையானுண்மான்மயக்கத்தால். 94

ஆட்டுத்தலை-வேண்டாமென்று-அசைக்கிறதலை

தெள்ளுதமிழுக்கருடியாகிவெங்கடேசுரெட்ட
வள்ளன்மேலாசைகொண்டமானுண்மேல்-துள்ளும்
கயவாளிவேட்குவரிகைமுரசனுற்பங்
கயவாளியேவாஞேகாண். 95

கயவாளி-திசைச்சொல், அதற்கு-இழிந்தோனென்னும்பொருள்.

கொங்கைகும்பகோணமாகூந்தலுமோகூடலோ
தங்கும்விழியம்பாசமுத்திரமா-பைங்கனக
மேருவெங்கடேசுரெட்டமேந்த்ராயிவள்சசிபுற்
ருருடையானூரிடையதாம். 96

கொங்கை-கும்பவட்டம் - கூந்தல்-கூடு-அம்புல்-தார்-பனைமாலை - ஊர்வஞ்சி-அதுஓர்கொடி.

மெய்யனவெங்கடேசுரெட்டவேந்தன்பாற்சந்துரைத்துத்
தையல்கண்ணிவாங்கித்தரவிலையே-கையதினுற்
றுண்டித்தாண்மென்றுமென்றுதுப்பினுண்மாரனையும்
கண்டித்தாளச்சமற்ருள்காண். 97

(விலை-கரும்புவில்லை.)

பூத்தூக்கியுண்டவனைப்போந்தேறிக்கொண்டவனே
மாத்தூக்கியைத்தூக்கிவந்தானே-நேர்த்திதரும்
பொன்னுபரணுபுயசயிலாதென்னிளசை
மன்னுகுமாரவெட்டமா. 98

பூத்தூக்கி - ஆதிசேடன் - உண்டவன்-அவனு லுண்ணப்பட்ட காற்று அதையேறிக்கொண்டவன் - மன்மதன்-மாத்தூக்கி-இலக்குமியைத் தாங்குந்தாமரை.

நற்றமிழ்வாணர்க்குநிதிநல்கும்வெங்கடேசுரெட்ட
கொற்றவன்றூரன்றியரன்கோயலின்முன்-உற்றகொடிக்
காலைவிட்டப்பாலேநீங்காததுமுன்றுண்டுபட
வேலையிட்டதேதுவிடு. 99

அரன் கொடிக்கால் - பரமசிவன் - துசஸ்தம்பம் - அதைநீங்காதது-இடபம்-அதன்முன்னிராசிமேடம்-அதுஆடு.

கன்னன்வெங்கடேசுரெட்டகாண்டிபன்மேன்மாமோக
சன்னங்கொண்டாட்குமுல்லைத்தாரல்லா-தென்னசெய்தீர்
தையன்முன்பூமுன்னரட்சரமுற்றதைத்தெரியச்
செய்யும்பேரென்னசெயும். 100

தையலென்னுஞ் சொல்லுக்குமுன் - பூமுன் - அட்சரம்-பு-அது உற்றதுபுதையல்-அதைக்காட்டுவது-மை-அது-ஆடு.

தாண்டுபரிதூண்டுதிடசாலிவெங்கடேசுரெட்ட
பாண்டியன்மேலாசைகொண்டபைங்தொடியை-வேண்டியே
ஒன்றிரண்டாப்போகவொருத்தனையிங்கேன்கொணர்ந்தீர்
மின்றுயர்க்கென்செய்யும்விடு (ஒருஆடு) 101

கல்விகரைகண்டகும்பகம்பன்வெங்கடேசுரெட்ட
வில்விசயன்றென்னிளசைவெற்பிடத்திற்-சொல்வதென
கட்செவியுமம்புலியுங்கங்கையுமோர்வெம்புலியிற்
பட்சமுறவைத்தார்பதி. 102

கட்செவி - அரவு - அம்புலி - இந்து-கங்கை-அம்-இம்மூன்றும்-சேரின் அரவிந்தம்-புலிவேங்கைமரம் (வேங்கைமரத்தின்மீது தாமரைமலரிருந்தது.)

சங்கநிதியென்னத்தழைத்தவெங்கடேசுரெட்ட
சிங்கமிளசைச்செழுங்கிரியில்-அங்குகண்டேன்
மானிலத்தைமுற்றுமொருவள்ளனடுவாதியந்தந்
தானிருப்பதேத்திநிற்கத்தான். 103

மால்-நிலம் - முல்லை-வள்ளல்-பாரி-நடு-அப்பாரியென்னும் சொல்லின்நடுவில் - ஆதி-ஆதியென்னுஞ் சொல்லின்-அந்தம்-கடையெழுத்தாகிய - தி - இருப்பது - பாதிரி (பாதிரிமரத்தின்மேல் - முல்லைமலரிருந்தது.)

தாலமுற்றும்வாழ்த்துமிந்தரதாருவெங்கடேசுரெட்ட
வாலகிருஷ்ணவிம்பன்மணிவரையின்-மேலு
மருக்கமழுநன்மாமனையுமொருசந்தி
இருக்கவதிற்கண்டுகொண்டேனின்று. 104

மாமனை-இலக்குமியின் வீடாகியதாமரை-சந்தி-மூங்கில்-மூங்கிலின்மேல் தாமரைமலரிருந்தது.

தங்கள்குலதீபமெனத்தாரணியோர்கொண்டாடும்
எங்கள்வெங்கடேசுரெட்டமேந்த்ரன்வெற்பில்-செங்கணரி

உண்டதுடனவனின்றாதினதுஞ்சேர்ந்தவன்பேர்
கொண்டதின்மேற்கண்டேன்குறி. 105

அரியுண்டது - பூமி-அது கு-அவனாதினது-சங்கு-அது-வளை-இவ்விரண்டுஞ்சேர்ந்தது-குவளை-அவன்பேர்-விண்டு - அது மூங்கில் (மூங்கிலின்மேற்குவளைமலரிருந்தது)

அழகிசக்கதேவிக்கனந்தம்பணியால்
விழையுங்குமாரவெட்டவேந்தே-பழகுமொரு
கூந்தல்களமல்குகடுசொன்னேன்கனகம்
ஏந்துதனமாந்தளிர்மெய்யாம். 106

(சக்கு-கண்-ஏவு-பாணம்) (இக்கு - மொழி) (அல் - கூந்தல்) (நந்தம்-களம்) (பணி - அல்குல்) (ஆல் - அகடு) (கனகம் - தனம்) (மாந்தளிர்-மெய்)

ஏகாம்பரரிடப்பேரில்லாததாழ்வுசொல்லப்
போகாதுவேறுபுகலிலையே-பாகார்ந்த
சந்தமதுரத்தமிழுக்ககத்யனென
வந்தவெங்கடேசுரெட்டமா. (ஏகாம்பரரிடம்-கஞ்சி) 107

திரைக்கலைக்கித்தையலென்பதேயிருபத்தேழென்
னரைக்கலைக்கித்தையலனேகம்-உரைக்கவொண்ணு
தந்தம்ப்ரகண்டாவரசர்சிரோரத்னமென
வந்தவெங்கடேசுரெட்டமா. 108

திரை-கடல்-கலை-அதிற்றோன்றும்-சந்திரன்-தையலிருபத்தேழு அவன் மனைவிகள்-இருபத்தேழுநக்ஷத்திரங்கள்.

சென்றலர்ந்தார்சேர்முத்திருளப்பூபதிபான்
மன்றலர்ந்தார்வாங்கிவருமளவும்-குன்றுமுலை
ஏழாயிரம்பண்ணையில்லுடம்புவாடாதே
ஏழாயிரம்பண்ணையில். 109

ஏழாய்-பெண்ணே-இரு-அம்பு - அண்ணையில் - மதன் பாணம்-பொருந்துவதனுல்-ஏழாயிரம்பண்ணை ஓரூர்.

கூன்கலைநிலாவின்குளிர்ச்சிபொறுக்காதுகல்வி
மான்கலையில்லாமன்மருளுமா-தேன்கலையச்
சந்தநறுங்காவின்மந்திதாவுமிளசைநகர்
வந்தவெங்கடேசுரெட்டமா. 110

கோச்சகம்

நீகாவிதுராநெருப்பாமிவட்குவிலக்
காகவிதுராகதம்புரிவார்கன்னியர்கள்
வாகாவிதுராமராமரதிமாரவச்ர
தேகாவிதுராதிமலைவேலேந்திரனே. 111

அங்காவித்தாராவணைவதுகண்டின்பமொரு
பாங்காவித்தாராபதியேயென்றேங்குவளோ
தூங்காவித்தாராதுணைமுலையாராசைகொள்ளும்
செங்காவித்தாராதிருமலைவேலேந்திரனே. 112

ஆக செய்யுள்-1223.

---

# நாகூர் முத்துப்புலவர் பாடிய

கட்டளைக்கலிப்பா

தனதனுகடாத்தியடர்ந்த பூச்சரத்தைவாங்கித்தனதிற்றொடுக்
கத், தனதனுகதவிலான்மின்போன் மெய்பசந்தசந்துசந்தேசொ
லென்றுண்மினுள், தனதனுகணத்தொம்மெனப்பை யினிர்த்தம்புரிந்த
சரணசரோருகா, தனதனுகவளரும்ப்ரதாபவித்தாரனே வெங்கடேசு
ரெட்டேந்த்ரனே. 1

கனகனங்கம்பிளந்தளிர் கொந்தளகங் களந்திருக்காய மின்மேற்
மற்ற, கனகனங்கம் பிளந்தலைகண்டு கொங்கைக்குளேவினன் சேராத
தென்கொலோ, கனகனங்கம்பளகோத்திராவருட்காதலன்றனைக் காத்
தடிமைகொண்ட, கனகனங்கம்பிளந்தநரசிங்ககாகுத்தா வெங்கடேசு
ரெட்டேந்த்ரனே. 2

சடகரிக்குமதனனவர் செயுங்காயந்தேர்ந்தனரோ வளவன்னை
மார், கடகரிக்குமரிவாழ்கவேலன்முன் கட்டினாரதிலென்னுமொன்
னார்க்குவி, கடகரிக்குருவிக்கன்று கண்ணருள்கர்த்தர் தாளிணையைத்
துதிநேமகா, கடகரிக்குநிருபாவிளசைவாழ்கருணைமால் வெங்கடேசு
ரெட்டேந்த்ரனே. 3

தந்தப்பாதுக டீர்மருங்கம்பிருதாரையாமிந்தமாதை மின்னார்
சந்தம், தந்தப்பாதுகனற்றவரம்பு வேடானொளிக்கச்சரமுல்லைதாச
ரதி, தந்தப்பாது கவிப்பட்டம் வாலியைத்தாக்கியேயவன்றம்பிக்குத்
தந்துதந், தந்தப்பாதுகைதம்பிக்குநல்கியதாருவேவெங்கடேசுரெட்
டேந்த்ரனே. 4

கனதனந்தனதாவவினு லந்தக்கனிக்கு மாமலையாமிடைமின்னிலும், சினதனந் தனமாற்கூறரிதரிதென்னு மல்குற் றிருவையணைகுவாய், மனதனந்தனமாடைதமிழ் பகர்வாணர்க்கீந்துமகிழும் ப்ரதாபனே, தனதனந்தனவென் றுடுவோருடங்கிவாழ் வெங்கடேசு ரெட்டேந்த்ரனே. 5

இந்தக்காவனங்கற்கோர் கவிகையாவிருந்துகாந் துதியானென்ன செய்குவேன், பந்தக்காவனமம்மை கண்டப்பியெப்படி யங்கேகுவன் பாங்கியென்றுள்கலி, சிந்தைக்காவன சத்திரசோமதியாகசற்குண பாகமனோகரா, சந்தக்காவனஞ்சூழி ளசைப்பதித்தானமால் வெங்க டேசுரெட்டேந்த்ரனே. 6

இருபந்தந்தமெனும் பொற்பயோதரமென்ன சொல்லரதிக் கெண்மடங்கிவள், சொருபந்தந்தச்சிவிகையில் வந்தனள் சொந்த மாகவுவந்தணைவாய்சுடர், தருபந்தந்தமனியவெற்புப் பெற்றிற்றுய்த் துலங்கித்தனைநம்புவோர்க்கெலாம், நிருபந்தந்த மனதின்படிக்கரு ணேசனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 7

தாகமலாதனங்கன் சமர்க்கோலஞ் சமைந்துபாணமெய்தான் பூவலவா, கரகலாதனகும்பம்பொறுக்குமா கன்னியேயெனைக்காண் பாரென்றுள்புல, வரகலாதனன்மார்க்க சிலாக்கியமாவசந்தியாக வரோதயா, பிரகலாதனனுள்ளத் திருந்தருள்பெருக்குமால் வெங்க டேசுரெட்டேந்த்ரனே. 8

மாதமந்திரணம்போ விருந்தலைமலைக்கொப்பாக வளர்த்தது மாரன்கைச், சூதமந்திரவோருகமாமதிசோர்ந்துதானிந்த வேந்தி ழைவாடுமோ, போதமந்திரசக்கனியைக்கவ்விப் பொழிலிற்றுவும் புகழ்க்கழுகாசல, வேதமந்திரமெய்குகனைத்தொழும் வெங்கடேசுர வெட்டமதீரனே. 9

வருதுகட்டு முட்டெல்லாங்கடந்து பூவாளிவேள்கயவாழிமுர சம, திருதுகட்டு வசனமலமலைத்தென்றலாங் கொடுந்தேரை நடாத் தியே, பொருதுகட்டுவதனத்திற்சாடவே பூத்தொடுத்தனன் சந்திர காவிடால், விருதுகட்டுமதிபாவிளசைவாழ் வெங்கடேசுரெட்டேந்த்ர வசீகரனே. 10

தந்துகந்துகந்தாகந்தணிக்குநீர்த் தடமருங்குதனமல்குற்றைய லே, முந்துகந்துகந்தா கணப்போழ்திலுன்மோகத்தூது மொழிவ னென்றேறவந்தேன், வந்துகந்துகந்தா கழுகாசலவாசகாவெனவாழ்த்து முன்பாகட்டுங், கந்துகந்துகந்தாகப்புரட்டுங்கடாசலா வெங்கடேசு ரெட்டேந்த்ரனே. 11

நம்பரக்கரையா னனராகியநாதர் முன்புநமைவேண்டிச்செல்க வென், றும்பரக்கரையா யனுப்பத்தனதுருவிலா மதன்யுத்தத்துக் கென்செய்வேன், அம்பரக்கரையானதிற் பாளயமன்றிறங்கியடர்ந் திலங்காபுரி, வம்பரக்கரையாசுகத்தால்வென்ற மாதவாவெங்கடேசு ரெட்டேந்த்ரனே. 12

அத்தன்கண்ணுக்குத் தோற்றான்றன் மாதலாலரிபிரம்மாதிக்குந் தோற்றானவன்மகா, எத்தன்மாமனையென்றுந்தமையனென்றேசொல் வோன்கணையெய்யாமலெய்கிறான், கத்தன்பூவுலகேழையுமேயொரு கவிகைநீழலிற் காத்தருளும்பரி, சுத்தன் மன்னுங்குமராவெட்டேந் திரன்சோதரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 13

உபையராசியை யூரும்பிரான்வள ரோங்கனேருந் தனத்தா ளுனைமகிழ்ந், துபையராசியமாய்க்கூட்டிவாவென்று சொல்லியென்னை யுன்பால்விடுத்தாள்பொன்னர், சபையராசிற்சேர்ருபாவென்றீசரைத் தன்கையாற்றொழுந்துங்கன்கைவிடணாற், கபையராசியருள வல்லவா புகழாகரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 14

சங்கதாரளங்கால் கமுகதாதன்கழுத்திணையென்றாட் குன்று ரின்று, துங்கதாரத்தாமதஞ்செய்யிலத்தோகைதேகத்தை மாரன் வருத்துவான், அங்கதாதா நீதூதுசெல்லென்ற வாரியாரணவீரிய ப்ரதாபனே வெங்கதாதரவீமாசெயதரா வெங்கடேசுரவெட்டம பூபனே. 15

பூவலாரைமுதலானகற்பங்கள் புரிந்துநிட்டைவசித்திருந்தாலு மென், ஆவலாரையும்விட்டுவிடாதந்த வரிப்பிரம்மாதிகளானாலுந் தானென, மாவலாரைமலரதினுலெய்யின் மங்கையுள்ளமயக்காதிருக் குமா, மேவலாரையடக்கிச்செயம்பெற்றவிசயனே வெங்கடேசுரெட் டேந்த்ரனே. 16

அஞ்சக்கஞ்சனங்கைபாலகனந்தசோகமேவவடரவிடுகுமு, தஞ் சக்கஞ்சனமெல்லாங் கரைத்திருதனத்தைநீலத் தடவரையாக்கமான், மிஞ்சக்கஞ்சனந்தாழக்குலுக்கு மெய்ம்மின்னைமேவி விரகந்தணித்தி டாய், வஞ்சக்கஞ்சனகத்தைத் துணித்தவா வாசவாவெங்கடேசுரெட் டேந்த்ரனே. 17

கந்தரப்புயருஞ்சடையார்பகைக்காமன்வந்துகணையேவவேமினள் அந்தரப்புயலின்பேர்மிருத்தனளணையின்மீதணைவாயணைவாய்பர தந்தரப்புயக்கப்பணிமீதுதெய்வத்தென்றூடுஞ்சரணும்புயாதிட மந்தரப்புயபாரசெயதரவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. 18

அந்தராசலவன்பன்றி போர்பகையார்ப்பரிக்க வவாக்கிசைந் தெய்துமின், பந்தராசலனே பயந்தாள் வெறுப்பாயுரைக்கிற் பல ரென்சொல்லாருல, கந்தராசலவாவூரின்வாய்மறைக்க வுலைமுடியுண்டா கொண்டகாதல்தீர், மந்தராசலவாகா சயதராவாசவா வெங்கடேசுரெட் டேந்த்ரனே. 19

முனசங்கைமுகன் கண்ணிருந்துறமுற்றும்வெந்தவன் வந்திகல் செய்யவே, தினசங்கைக்குது கஞ்சிதட்டுது சேலைசோர்ந்திருகாலை

யும்பின்னவே, இனசனங்கையதுகொட்டிக் கொட்டிவந்தேசவேமயன் மீசுரமாகுது, வனசநங்கை மருவும்புயாசலா வாசவாவெங்கடேசுரெட் டேந்த்ரனே. 20

படங்குமாதங்கரேக்காற் சமைத்திட்டபாரக்கொங்கைக் குறியுஞ் சமீபந்தான், சடங்குமாதங்கழிக்குமுன்னாமிதசமயங்கட்டித் தழுவா விடிலவா, அடங்குமாதங்கள் சித்தமென்பாக்கிய மணையவேண்டு முன்னாண் மூலமென்னவே, தொடங்குமாதங்க முன்வந்தமாதவா துங்கனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 21

வாசக்காந்தண்மலர்க் கையினாலனைவாரிவாரிப் பன்னீரொடுசந் தனம், பூசக்காந்தல்பொருமலயர்ந்துவாய்புலம்பத்தாமும் வெம்பமின் னார்களும், ஏசக்காந்தமுரைக்கிலென்செய்குவாளெய்துவாய் குறமாது தெய்வானைக்கோர், நேசகாந்தருள்பெற்றுவாழ்மனுநீதனே வெங்க டேசுரெட்டேந்த்ரனே. 22

வந்துவாரவையநடத்திச்சிலைவளைத்துச் சித்தசன்மாங்கணையே வப்பு, குந்துவாரவளவும்பிதிர்ந்திடக் குடைந்துகொங்கைக் குடத் தையுமேயனே, கந்துவாரமதாக்கிவிட்டாலிந்தக் கன்னியென்செய்கு வாள்காண்கவியினால், சிந்துவாரமதிலணைகண்டவா சீதரா வெங்க டேசுரெட்டேந்த்ரனே. 23

அரசிராவணத்தாலடைத்துந் தொனியமருதில்லையதைமுனியுண் ணவும், கரிசிராவகலப்பகலோன்வருங்காலமான தெக்காலமென்றுட ரும், பரிசிராமுழுலோபகுடாரிநீபாரவில்வளைத்துக்கரதூஷண, திரிசி ராவிழவோர்பாணந்தொட்டவாசீதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. ()

தொடுக்கவத்திரம்வேளதுதானிந்தத்தோகை மெய்யைத்துளைத் தூடுருவவே, கடுக்கவத்திரண்மேல்விழுமீயெனக்கலங்குவாட்குன்ன லங்கலின்றீகுவாய், இடுக்கவந்திரங்காவென்றழைக்கவந்திடங்கரைத் திகிரிக் கிரையிட்டவா, உடுக்கவத்திரமில்லாதவர்க்கரு ளுத்தமா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 25

சீதமாரம்பனங்கன் றொட்டான்றனத்தினைத்துளைத்துத் தடா ரிக்குதந்தம்பு, சூதமாரம்பம்ராமாராமா வெனச்சொல்லுவேன் சந்து சொல்லவிம்மாதர்க்குள், நீதமாரம்பலாதிசெய்வர் ரெந்தன்னேமக் காமந்தணி மூலமென்னவே, போதமாரம்பஞ்செய்ய முன்வந்தவா போசனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 26

பூசுகந்தந்தனத்திற்பொரிந்ததுபொருக்கெழும்பியிப் பூவைதன் மாலுக்கே, நீசுகந்தந்தடங்கலின்றித்தரநேமஞ் செய்திவள்காமந்த

ணித்திடாய், தேசுகந்தந்தராவணன்சேய்தலேசிக்கெனக்கொண்டுவா வென்றிலக்குவற், காசுகந்தந்தராமாபெரும்புகழாகரா வெங்கடேசு ரெட்டேந்த்ரனே. 27

பொருப்புக்குஞ்சரியாகப் புடைத்தெழும்பூண்முலேக் கன்னிமீ தேசமர்செய்யத், திருப்புக்குஞ்சரியேறுமெய்யெங்கணும் துளேக்க மாரன் வளேக்கவவன்செங்கைக், கருப்புக்குஞ்சரிசாமஙிழற்றுந்திங் கட்குடைக்குங்கலங்குவளோமன, விருப்புக்குஞ்சரிகாந்தற்குவைத் தவாவீரனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 28

அடிதங்கச்சியிவளென்னமோதெரியாதுசிந்தை யயருகிருளிந்தா. பிடிதங்கச்சிவிகையிலிருந்துநம் பிள்ளேதான்கிளிப்பிள்ளே யல்லோம யல், கொடிதங்கச்கிப்பரிபோற்சென்றேவரக்கூறென்ருளிகல்கொண் டோரமர்கண்டு, துடிதங்கச்சிமையப்புயக்கொட்டு முத்துங்கனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 29

அரகதத்தைமதன்சிந்தைதன்னில்வைத் தம்பாத்தையடித்தார்ப் பரித்துமே, தூரகதத்தைநடத்தியம்பாலுமென்றுவதனத்தைத்துளே த்துவிட்டான்கொண்ட, விரகதத்தையெவர்தணிப்பார்மலர்மெத்தை மீதினில்வைத் தணேவாய்மணி, மரகதத்தையணியும்புயாசலா வாசவா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 30

அனங்கனம்பனந்தந் தொடமெய்பசந்துவாடுவ தல்லாவிடை..க் கிரு, தனங்கனம்பனந்தாரானிருக்குநற்றலத்தின் பேர்க்கொடிதாங் காதுபெற்றதாய், மனங்கனம்பனம்பின்போமிகுத்தந்தமாதர்சொல் லும்வசைக்கிலக்காகிய, மினங்கனம்பனஞ்சேர்குதமாயினுள் வெங்க டேசுரவெட்டநரேந்திரனே. 31

மாதவாவினமட்டலர்நின்புயமாலேமாலேயகற்றுவதாசடை, யாத வாவினன்சொல்லுந்துராகதவன்னேவாயையடக்குவதார்மலர்ச், சீத வாவினந்தங்கந்தரமெனுஞ் செல்விக்கோர்மொழி சொல்லியணேந்தி டாய், போதவாவினங்காத்தருண்மாதவா போசனே வெங்கடேசு ரெட்டேந்த்ரனே. 32

இருதனங்கனிக்குச்சிலேபோற்புடைத் தெழுந்துவிம்மியிறுமாந் திடக்கயல், விருதனங்கனிக்குச்சிலேவாங்கிமாவிசைகொண்டுடுருவிப் பாயவாளியாற், பொருதனங்கனிவர்க்கமுண்ணுமன்மால்பூண்டிருக்கச் செய்தான் றமிழ்வாணர்க்கு, வருதனங்கனிவாய்த்தரு மன்னவா வாசவா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 33

என்னிலங்குச்சலராசராசருக்கேற்ற தாமவரிங்கேவருகப்போய், முன்னிலங்குநங்காரியம் யாவதுமொழியென்றுள் பைங்கிளிதான்மருவுவாய், நன்னிலங்குவலையத்திலீதென நாட்டுந்தென்கருக் கோட்டைக்கதிபனே, பொன்னிலங்குமணிமார்பனே திடபோசனேவெங்கடேசுரெட்டேந்த்ரனே. 34

அரகராசலங்கொண்ட புண்டோண்முலையானை விம்மவதிற்றென்றுருவவே, உரகராசலவன்குளிராதனலு குக்கிருனந்தமாரற்கிம்மாதருந், தரகராசலராசியதாமயரானெனைப்புணர்வாய்மூலமென்றதோத், திரகராசலங்காத்தசக்ரேஸ்வராசீதராவெங்கடேசுரெட்டேந்த்ரனே. 35

கஞ்சரஞ்சப்பெடைபோலு மென்னடைகமலத்தா ளிருகண்ணிணையானது, மஞ்சரஞ்சர்க்கரைவட்டுரைமுலைப் பருபதத்திலறுபதத்தான்றெட்டான், வெஞ்சரஞ்சப்பிரமஞ்சகோளகை மீதிருந்திந்தமின்னுளைமேவுவாய், வஞ்சரஞ்சப்பொருஞ்செயதோர்த் தண்டாவாசவா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 36

மாமனுக்குமகனுக வந்தகாமனுக்கும் பெற்றுவளர்த்தவட்குக் கலைச், சோமனுக்குமினத்தார்க்குமஞ்சி மெய்சோர்ந்து வாடினள் சேர்ந்தணைவாயினி, தாமனுக்குமினியகுமாரெட்ட தருமனுக்குக் குமாரமுத்தேந்திர, பூமனுக்குஞ்சகோதரனே திடபோசனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 37

என்னவாவிதுராசியமாநடை யேனுமாமகள்காவெொடுகான்மிகப், பின்னவாவி துராவனறாவவாபிரமனிப்படிச் செய்தானென்னுர்கள் வாய், கொன்னவாவி துராகதத்தென்றிசை குடிபுகக்கையிற்கோதண்டம்வாங்கிய, மன்னவாவிதுரா புகழாகராவாசவாவெங்கடேசுரெட்டேந்த்ரனே. 38

சொலங்கக்காகொண்ட மோகத்தினல்வருஞ் சோபதாபந்துலைக்கவென்றுட்குமே, விலங்கக்காமசரத்தாலும்பூந்தளிர் மெய்யிளைத்தனளல்லாமலொப்பிலா, நலங்கக்காரிசுகக்காரிமேவ விங்நாளுமே நல்லநாளடையார்மனம், மலங்கக்கால்கொண்டடர்பரிமேல்வரும் வாசவா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 39

சரந்தராதரங்கண்டாமதன் விடுத்தானெனது குழந்தைதனியேமால், பரந்தராதராளக்கச்சிறுக்கும்பொற்பார் பயோதரபாரத்தைத் தாங்கவே, உரந்தராதரவம்போற்றுவண்மருங்கொசியுமுள்ளம் வசியாயணைந்திடாய், புரந்தராதரணிக்கதிபாசெய பூகரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 40

பீலிக்குஞ்சரவங்களைக் கொத்திப்பிடித்துத் தாக்கப்பெரும்பகை
யின்றிக்கா, லாலிக்குஞ்சரபஞ்சிங்கமீது சென்றடிப்பபோல்வந்தடிக்
குதுதாயென்ற, நீலிக்குஞ்சரசப் பேச்சுமாச்சிவ ணினைவுங்காணுங்
கனவுமிங்கேயொரு, வாலிக்குஞ்சரமேவிய ராகவாவாசவா வெங்கடேசு
ரெட்டேந்த்ரனே. 41

அராவுக்கேகணையேசெவியென்பரதல்லபெற்றவனைக்கேமின்னுரு
ருவம், பராவுக்கேகணையேகுழலாக்கிய பண்ணுக்கேநொந்த பெண்
ணுக்கிரங்கியின், திராவுக்கேயணைமேற்சென்றிருந்து நல்லின்ப லீலை
செய்தன்பாய், மருவுவாய் மராவுக்கேகணையேவிய ராகவாவாசவா
வெங்கடேசு ரெட்டேந்த்ரனே. 42

அல்லைமாலைமருதங் கிளியைமின்னுரை நால்வகைத்தானையதாக்கி
விட், டெல்லைமாலையும் விட்டடர்ந்தேறி நானிருக்குமாலயத்துட்புகுந்
தேதன்கை, வில்லைமாலைவிளைத்து வளைத்தம்பைவிட்டு வேண்மட்டு
மீறினன் மேவுவாய், முல்லைமாலையணி மாலைப்போற்றிய குமுணனே
வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 43

தடிக்கவில்லைமுலைதிரண்டேமகள் சமையவில்லைமணந்தான் குமு
குமென், றடிக்கவில்லை பொடிபுனுகத்தர்சேர்த்தணியவில்லை யதற்கு
முன்மாரன்போர், முடிக்கவில்லைவளைத்தாற் குழந்தைதான் மோகந்
தாங்கவுமுற்றுதொன்னுர்துடி, துடிக்கவில்லைவளைக்கு மகோரவுத்து
ங்கனே வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 44

மஞ்சலக்கணங்கன்புறவேகட்டி மருவுதற்குளவா வைத்திருக்கு
நாள், அஞ்சலக்கணலார்க்கே தெரியுநின்னுவலோலடங்காதிரங்காத
வன், நெஞ்சலக்கணகப் பெற்றியின் வெண்ணெயா நிலவில்வந்துகலவி
செய்வாயையா, பஞ்சலக்கண முத்தமிழாகரபாஷிதா வெங்கடேசு
ரெட்டேந்த்ரனே. 45

சத்திக்கும்பணிலக்கையினுன்பெற்ற தனையன்போர்க்கு வினைய
மின்னுரைச்சு, மத்திக்கும்பணியாய்நிறைத்துச் சரமாரிபெய்யவென்
மானுரைதானுரைக், கத்திக்கும்பணிசோர்ந்ததுங்காண்கிலாள் காதல்
தீரவிப்போதணைவாயையா, எத்திக்கும் பணிவேந்தா மகாமண்டலே
சுரா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 46

தனதுமெய்க்குமலரணையானது தழலிறைக்குந் தனச்சுமையா
லிடை, மினதுமெய்க்குந்துவளுமிம்மானந்த மேனகைக்கும் வெகுமி
ச்சநானுண்மை, சொனதுமெய்க்குமரன் பொற்பதாம்புயந்தொழுந்
தொழும்பன் குமாரெட்ட பாண்டியன், மனதுமெய்க்கு முயிர்த்து
ணைவாபுகழ்வாசவா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 47

இட்டங்கட்டியவாறே யல்லாதுவேறில்லைசிந்தையி தெல்லாஞ் சுவாமிய, திட்டங்கட்டியபரஞ்சியாற்செய்த சித்ரமஞ்சத்திற்சேர் வாய்தினஞ்சட்ட, வட்டங்கட்டியங்கக்குடிக்கின்ற ராவணனைவென் றவன்புவைத்தவன்றம்பிக்குப், பட்டங்கட்டியராமாநவரசபாஷிதா வெங்கடேசுரெட்டேந்த்ரனே. 48

பருதியானவ ரீராறுபேருங் கோபாக்னி மிஞ்சிவருவதுபோன் மதி, வருதியானதற்காற்றே னென்றுனையோமலடிருந்து பெற்றே னிந்தப்பிள்ளையை, ஒருதியானமதுகுலதீபம்போலுதித்து மோகத் துக்குள்ளாகினையா, குருதியானமறவாதவா புகழ்க்கொற்றவா வெங்கடேசுரெட்டேந்திரனே. 49

அம்பமாமுனிவாய்மூலைக்கண்ணைச் சல்லடைக்கண்ணாகவனங் னெய்யச்சொர்ன, விம்பமாமுனிருந்த படிக்கிலைமேனிமாகலைக்யானிக யிவ்வையா, கம்பமாமுனிதம்பெறவந்துதற்காத்தவா வெகுநோத்தி யதாந்தமிழ்க், கும்பமாமுனிபோல்வந்துதித்தவா கொற்றவாவெங் கடேசுரெட்டேந்த்ரனே. 50

ஆக செய்யுள்-1273.

---

இராமநாதபுரம்-சமஸ்தானம்,

மானேஜரவர்களாகிய

பொன்னுசாமிதேவர்மேற்

## சந்திரசேகரகவிராஜபண்டிதர் பாடிய

வெண்பா

திருமகட்குத்தன்னிறமாஞ் செய்யம்புயமும்
பொருமகட்குப்பொன்னம் புயமுந்-தருபொன்னு
சாமிவள்ளன்மாலைதந்தான் றண்கமலமானேநற்
சாமிவண்ணமாலைதரா தான். (நிறம்-மார்பு.) 1

இய்யூர்தகரவெடுத்ததிரு மான்மருகன்
மையூர்குமரன் மலரடிக்கு-மெய்யூர்
மனத்தையளித்தபொன்னு சாமிக்குமானே
அனத்தைமறந் தாளென் றறை. (இய்யூர் தகரம்-திகிரி) 2

வேறிவிலக்கல்

ஆடிமாதம் பவனியம்புயத்தாரன்றியே
ஆடிமாதம்பார்கண் ணீர்மாற்றி-நீடுமயல்
போக்குமோவன்னய் புலவர்மிடியைக்கொடையா
னீக்குபொன்னுசாமி நிருபன். 3

### பின்முடுகு வெண்பா

பொன்னாரம்பூணும்புகழ்ப் பொன்னுசாமிவள்ளல்
துன்னுநாள்ராமன் றுயர்புரிவான்-மன்னளிதேன்
நக்கரும்புமற்சுரும்புநற்கரும்புங்கைக்கொளும்வேள்
எற்கரும்புண் ணுய்க்கவெய்வனே. 4

அளகைப்பொறித்தகொடியண்ணலடிபோற்றும்
அளகைக்கோனும்பொன்னுசாமி-துளிமதுத்தார்
தந்தான்மதனடங்கத்தண்மதியந்தானடுங்க
இந்தாவிந்தாமுகத்தாயீது. 5

### புறங்காட்டல்-கட்டளைக்கலித்துறை

செவ்வேறிதழ்தரன்மாமலர்ச்சேவடிசிந்தைசெய்யும்
தெவ்வேறிகல்பொன்னுசாமிபூபாலனற்சீர்க்கிரிவாய்
வெவ்வேறினமணிமேவமுதக்கடனீர்மறைத்து
உவ்வேறினமதகவ்விணைக்காட்டலென்னொண்டொடியே. 6

(உவ்வேறின-மதக-முதுகு)

கைக்கார்நிதிதருதேனுசிந்தாமணிகன்னன்கார்த்தி
கைக்கார்நிகரலவாங்கொடையோன்பொன்னுசாமிகடக்
கைக்கார்வரையிற்பவனிவந்தான்கண்டுமால்கொள்காரி
கைக்கார்துணைபுரிவாரிறவாதுகருணைசெய்தே. 7

### கலிப்பா

என்றுகண்டவிந்துவைப்போலிவன்முகஞ்சோர்ந்தாளம்மா
என்றுகண்டனம்பாலுமெனவயிலாளென்கண்ணே
என்றுகண்டங்கம்மவழைத்திடிமுரையாக்கிளிக்கே
என்றுகண்டன்னீர்தடுப்பாயெழிற்பொன்னுசாமிமன்னா. 8

வாராக்கொங்கைமிரைமருவபொன்னுசாமிவள்ளல்
வாரராவெல்லாமதியழலாந்தென்றலன்றில்
வாரார்கலியொலியும்வருத்தமனநொந்தனள்சொல்
வாரார்நீயல்லாலம்மன்னர்பெருமான்றனக்கே. 9

போதம்புடனேமதியளிநற்பூக்குயிறென்
வாதம்புரிதுயரால்வாடுமிவளைப்புரப்பாய்
போதம்புரமெரித்தோர்க்கோதும்வேள்பொற்கமல
பாதம்புனைபொன்னுசாமியெனும்பார்த்திபனே. 10

## சட்டளைக்கலிப்பா

அச்சுபோற் புலவோரை மதித்திடுமண்ணலே பொருமங்கசன் வாளியாம், நச்சுப்போது துரக்கத்துறந்தனனும் பூணுந்துகிலுமி வடனங், கச்சுப்போனதுங்காணுண்முகவைவாழ் காவலாவளகேச விவள்கண்டுங், கைச்சுப்போனதுமுண்டிலள்கெண்டைநேர் கண்ணி யைப்புரப்பாய் பொன்னுசாமியே. 11

அத்திகத்தவடுத்துக்காரவிளையட்டவாழிநெடுமான்மருகனற்
சத்திகத்தன்சந்தாசலச்செந்தூர்வாழ்தாருகாரிவலாரிமகணகைப்பத்தி
முத்துக்குறத்திமணாளனைப்பணியுநம்பொன்னுசாமிமகிபனைத்
தித்திக்கத்தகுமென்மொழிகூறிநீசேரச்செய்திடுவாய் மடக்கிள்ளையே.

ஆரம்பூணும் வரைக்குயமீதிலேயனங்கவேட னலர்க்கணைதுவ வே, ஆரம்பூணுண்டுகிலுந்துயிலுநல்லம்மனைகழங்கும் மடக்கிள்ளை யும், ஆரம்பூணுந்துறந்துமெய்சோர்ந்தனளவளைக் காத்தணைத்தாள் வதுன்பாரமே, ஆரம்பூணுடைநற்குந்தவீரனே யண்ணலேபொன் னுசாமி குபேரனே. 13

எங்குந்தம்புகழோங்க வளித்தமுவேழுவள்ளல்களு மிவனீகை யால், தங்குந்தங்குமிவற்கேபுகழெனச்சாற்றுஞ் சற்குணனும்பொன் னுசாமிமா, தங்கமேற்கொடுபோந்தனனேர்தினஞ் சாரும்வீதியிற் கண்டார்மயல்கொடு, சங்குந்தங்கலையுந்தரியாதுளந்தளர்ந்து நாண முந்தாமிழந்தார்களே. 14

மட்டுத்தார்க்கணையான் மதன்மாதினைவருத்தத்தான் மனநொ ந்துமயங்கிப்பொற், கட்டுத்தார்ப்புரவிக்கொருவீரநின் கருத்துத்தா னிரக்கிப்புயமேவுபூ, மொட்டுத்தார்தரவாங்கிவரச்சொன்னுண் முத் தத்தார்நிரையொத்தமுறுவலாள், தட்டுத்தானுரையாமலரு ளரிச் சந்திரனே பொன்னுசாமிநரேந்த்ரனே 15

பாலனத்தைவிடுத்துநின்கண்ணிவள் பாலனத்தைவிடுத்தனள் வேணுகோ, பாலனத்தையுடையோன் மருகன்கோபாலனத்தையல் பாகனருள்பரன், பாலனத்தையணிநாசி வள்ளிகோபாதபற்பம்பணி பொன்னுசாமிநீ, பாலனத்தைப் புரிசிலைமாரனம்பால் வருத்தப்படாம லிப்பாவையே. 16

## விருத்தம்

மானேசரந்தொடுத்தமதனங்கம்விழித்தெரித்தோன்மான்மலர்க்கோ
மானேசாதவர்பரவும்பரனன்பன்சேதுபதிமன்னன்வாயில்

மானேசராம்பொன் னுசாமிவள்ளலென்னையவர்மருவகல்ல
மானேசராகும்வகைநீபுரிந்தாலிவ்வுலகில் வாழுவேனே. 17

கோச்சகக்கலிப்பா

சுரர்க்கோர்சுவையமுதைத்துநெடுமாலீந்தனன்பூ
சுரர்க்கோரறுசுவைசேர்தூவமுதையீந்தனைநீ
மண்டலத்தின்மூன்றடிமண்வாயிலிரந்தான்றீனர்கள்க
மண்டலத்திநல்குரவுமாறநிதிசொரிந்தனைநீ.

இதுதரவு-எனவாங்குதனிச்சொல்

சக்கரத்தானிருதர்களைத்தான்றுணித்தானாரணனஞ்
சக்கரத்தானுட்பகையைத்தான்றுணித்தாய்நீசபையில்
எல்லார்வளைக்காடையீந்தரிமானங்காத்தான்
எல்லார்க்குநீயாடையீந்தபிமானங்காத்தாய்
நல்லாரணிகவர்ந்தானாராயணனறிந்த
நல்லாரணியவணிநல்கினைநீஞானிலத்தில்

இவைமூன்றுந் தாழிசை

வான்றருவெனவேவழங்குகொடையோய்
மீன்றருகண்ணினள்விழைவெனுநறவை
உண்டுகளித்தேயொளிவளைசோரக்
கண்டுபாலனமுங்கொண்டிவளணைமேற்
கண்டுயிலாதுதொண்டைவாய்துடிப்பக்
காவிநீர்வாரவோவியம்போன்றனள்
கருப்புக்கழையைக்குழைத்ததுத்தேற்றுளி
அருப்புக்கணையைவிடுத்தனனனங்கவேள்
வெம்புலியேறெனவிண்மிசையூர்தரும்
அம்புலியோவிவளாவிமேற்றுவின
தோவறுதென்றலுங்காவுறுகுயிலும்
தண்ணுறுஞ்சிந்தும்பெண்ணைவாழன்றிலும்
சந்ததமுடற்றும்வெந்துயர்தணிப்பாய்
நன்னயவிராமநாதபுரம்வாழ்
பொன்னுசாமியெனும்பூபதியே. 18

ஆக-செய்யுள்-1291.

தனிப்பாடற்றிரட்டு முற்றிற்று.

---

# செய்யுளகராதி



தனிப்பாடற்றிரட்டு

செய்யுளகராதி

முற்றிற்று.

